# இவருக்குத் துணை சாமர்த்தியம், சுறுசுறுப்பு...

தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்!

டெபாசிட்டுகளை வரவேற்கிறோம்



... மற்றும் எக்ஸ்பிரஸ் ஃபைனான்ஷியல் எக்ஸ்சேஞ்ச்

நூதன நிதி முறைகளால் பல அற்புதங்களை ஏராளமான வாடிக்கையாளர்களுக்கு, எக்ஸ்பிரஸ் பைனான்ஷியல் எக்ஸ்சேஞ்ச் நிகழ்த்தி இருக்கிறது. உங்கள் பணம் உங்களுக்குக் கவலை தரும் வகையில் இருக்கக் கூடாது. அது பாதுகாப்பைத் தந்து, நல்ல முறையில் வளர்ந்து பெருக வேண்டும். அதற்கு நிபுணர்களின் உதவியை நாடுவதே நல்லது.

இது தவணைக் கொள்முதல் நிதி நிறுவனமாக (Hire Purchase Finance Company) ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியாவின் ஒப்புதலைப்பெற்ற வங்கி அல்லாத நிதி நிறுவனம் (Non banking Finance Company) ஆகும் (984/BG (TN) HP (E) 15 • நிர்ணயிக்கப்பட்ட குறைந்தபட்ச அளவாகிய 8%-க்கு எதிராக 48.46% மூலதன நிறைவு விகிதத்தைக் (Capital Adequacy Ratio) கொண்டு RBI குறிப்பிட்டுள்ள விவேகமான கணக்கு வைப்பு முறைகளைப் பின்பற்றுவது • தொடக்க காலம் முதலே லாபம் மற்றும் டிவிடெண்டுகளைப் பொறுத்தவரை நிலையாக ஒரே சீரான சாதனை. உங்கள் பணத்தைச் சிறந்த முறையில் நிர்வகிக்க வேண்டும். அதற்கு எக்ஸ்பிரஸ் ஃபைனான்ஷியல் எக்ஸ்சேஞ்ச் நிறுவனத்துடன் இன்றே தொடர்பு கொள்ளுங்கள்.

- Authorised Dealer American Express Bank TRS
- Authorised Dealer Mashreq Bank Visa International
- A Bank of America Associate
- FFMC Licensee of Reserve Bank of India
- SEBI Registered Merchant Banker

**EXPRESS**
**FINANCIAL EXCHANGE LTD.**

**எக்ஸ்பிரஸ் பைனான்சியல் எக்ஸ்சேஞ்ச் லிமிடெட்.**
பதிவு அலுவலகம்: 9, அட்லேவ் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017. போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.
• டெல்லி • மும்பை • பெங்களூர் • பாண்டிச்சேரி • இந்தூர் • ஹைதராபாத் • விசாகப்பட்டினம் • விஜயவாடா • திருச்சி • கும்பகோணம் • கோயம்புத்தூர்

# ஆண்டவன் சொல்லியும் அருணாச்சலம் செய்யலை!



ஒரு பணக்காரக் குடும்பத்தின் மூத்த மகனாக அறிமுகமாகிற அருணாச்சலம், இடைவேளைக்குக் கொஞ்சம் முன்னால், அவர் அந்தக் குடும்பத்துப் பையனில்லை; கோவில் மண்டபத்திலிருந்து கொண்டு வரப் பட்ட குழந்தை என்று திடுக்கிடச் செய்யாத திருப்பம் தருகிறார்கள்.

அப்புறம், அருணாச்சலம் சென்னை வருகிறார். வந்த சூட்டில், செத்துப் போன கோடீஸ்வரர் வேதாசலத்தின் வாரிசு தான் என்பதை அறிகிறார்.

ஒன்றா, இரண்டா? மூவாயிரம் கோடிக்கு வாரிசு. மளிகைக் கடையில் 'மான் மார்க் அப்பளம் பாக்கெட் அடுக்கி வைத்திருப்பது போல ஓர் அறை முழுக்க கட்டுக்கட்டாக காந்தி நோட்டைக் காட்டி, 'இத்தனையும் உனக்குத்தான்; முப்பது கோடியை முப்பது நாளில் செலவழித்தால் சொச்சமும் உனக்கே' என்று வீடியோ கேஸட்டில் உயில் படிக்கிறார், தாடி வைத்த அப்பா ரஜினி. (புல்லரிக்க வைக்கும் அதற்கான காரணத்தை வெள்ளித் திரையில் காண்க.)

அப்புறமென்ன? லாட்டரி, ரேஸ், சினிமா, அரசியல் என்று ஆருயிர் அண்ணன் பணத்தை அள்ளி விட விட, அது மேலும் துள்ளிப் பெருகுகிறது.

நடுநடுவே வில்லன்கள், சௌந்தர்யா, ரம்பா, செந்தில் என்று நிறையப் பேர் அவ்வப்போது வந்து என்னென்னவோ பேசிப் போகிறார்கள்.

நூல் பிடித்தாற்போல இதுதான் கதை என்று ஒன்றைக் காட்ட

முடியாத அளவுக்கு மிக பலவீனமான திரைக்கதை.

குறிப்பாக, இடைவேளைக்குப் பிறகு நிறைய மாண்டேஜ் ஷாட்களில் துண்டு துண்டாக நிறைய ஒட்டுவேலை காட்டுகிறார்கள். ரஜினியை உயிராகக் காதலிக்கும் சௌந்தர்யா திடீரென்று வேறொருவனுடன் மணமேடையில் உட்காருகிறார். ஏன்?

பரட்டைத் தலை, கூன் முதுகுடன் படு பயங்கர வில்லியாக வரும் வடிவுக்கரசி, தடாலென்று பிளேட்டை மாற்றித் திருந்தி விடுகிறார். எப்படி?

ரஜினியைக் காதலிக்கிறாரா, இல்லையா என்று தெரிவதற்கு முன்னமேயே ரம்பா தியாகி ஆகி விடுகிறார். எதற்காக?

ரஜினியின் உயர்ந்த உள்ளம் தெரிய வரும் போது தடாலென்று மீண்டும் அவருடன் மணமேடையில் உட்கார்ந்து விடுகிறார் சௌந்தர்யா. முன்னர் ஏற்பாடு செய்யப்பட்ட மாப்பிள்ளை என்ன ஆனார்? எங்கு போனார்?

இவ்வாறு நிறையக் கேள்விகளால் வேள்வி செய்ய வைக்கிறார் டைரக்டர் சுந்தர்.

ரஜினி படத்துக்குக் கதை ஒரு பொருட்டல்ல. ஆனால் வெள்ளமாக நகைச்சுவை பெருக வாய்ப்பு இருந்தும் வசனங்களில் அநியாயத்துக்குத் தூங்கி வழிகிறார் கிரேஸி மோகன். குறைந்த பட்சம் கிச்சு கிச்சு மூட்டக் கூட முடியாமல் தவிப்பது பளிச்சென்று தெரிகிறது. தமது பிரத்தியேக முகபாவ சேஷ்டைகளால் ரஜினி மட்டும் கொஞ்சம் கலகலப்பூட்டத் தவறியிருந்தால் படம் என்ன ஆகியிருக்கும் என்று நினைத்துப் பார்க்கவே அதிர்ச்சியாயிருக்கிறது. குறிப்பாக அந்தக் கல்யாண வீட்டுக் காட்சிகளில். பந்தா காட்டும் சம்பந்தி வீட்டுப் 'பெரிய' மனிதரிடம் ரஜினி பண்ணுகிற லூட்டிகள். (தவறாமல் இந்தப் படத்திலும் ஒரு பாம்புக் காட்சி..)

எப்படியும் 'அதாண்டா, இதாண்டா' பாட்டு நிச்சயம் ஹிட் ஆகி விடும். அதுகூட ரஜினிக்காக. உண்மையில் தேவா அளித்திருக்கிற ஏமாற்றம் கொஞ்சமல்ல! ரீ-ரெக்கார்டிங்கிலும் பாடல்களிலும் மெட்டுக்குச் சம்பந்தமில்லாத கருவிகள் அலறுகின்றன. தியேட்டரில், பிளாக்கில் டிக்கெட் வாங்கி வந்த ரஜினி ரசிகர்களே அடிக்கடி காப்பி குடிக்க எழுந்து போகிறார்கள்.

தம் நடிப்பு ஒன்றால் மட்டும் படத்தைத் தூக்கி நிறுத்தப் பெரிதும் முயன்றிருக்கிறார் ரஜினி. ஆனால் சொல்லி வைத்தாற்போல டைரக்டரிலிருந்து அத்தனை தொழில் நுட்பக் கலைஞர்களும் ஏமாற்றியிருக்கிறார்கள். யாருக்கும், மாநிலமே எதிர்பார்க்கும் ஒரு படத்தில் பணியாற்றுகிறோம் என்ற உணர்வு இருந்ததாகவே தெரியவில்லை.

ரசிகர்களுக்கு மாபெரும் சந்தோஷத்தைத் தமிழ்ப் புத்தாண்டில் தர வேண்டும் என்று ஆண்டவன் சொல்லியும் அருணாச்சலம் செய்யவில்லை!

— ஆர்.பி.ஆர்



## "அபாரம்! என்று கத்தினேன்!"

தமிழ்ப்புத்தாண்டு தினத்தன்று சன் டீவியில் ஒளிபரப்பான கலைஞர் தலைமையிலான கவியரங்கத்தில் கலந்து கொண்டு கவிதை படித்தார் மேத்தா. "அனுபவம் எப்படி இருந்தது?" என்று கேட்கப் போனபோது ஒரு சுவாரஸ்யமான விஷயம் சொன்னார்:

"நான் பாடும்போது, எதிர்மறையாகத் தொடங்கி, சில கவிதைகளைச் சொன்னேன். அதில் ஒன்று:

'இவர் இரு நாவால்
பேசுபவர்!
ஒரு நா - அவர் வாயில்
செந்-நா,
இன்னொரு நா-
அவர் கையில் பேனா'

- இதைப் படித்து முடித்தவுடன், ஒரு சொல்லைத் தவறாகப் பயன்படுத்தி விட்டேனோ என்று சற்றுக் கவலையானேன். 'இரு நாவால் பேசுபவர்' என்று முதலில் சொல்லியிருக்கக் கூடாதோ என்று நினைத்தேன். படித்து முடித்து வந்து அமர்ந்த பின்னும் அதே ஞாபகம். என் கவலையைப் போக்கும் விதமாக அவரே உடனே சொன்னார்:

'இரு நாவால்
பேசுபவன் என்றார்.
இல்லை, இன்னொரு
நாவும் எனக்குண்டு.
அதுதான் முதல் நா.
அண்ணா!'

- இதைச் சொல்லி முடித்ததுதான் தாமதம். அரங்கம் முழுக்க ஆரவாரித்தது! நான் இருந்த இடத்திலிருந்தே எழுந்து குதித்தேன்! 'அபாரம்' என்று கத்தினேன்!"

— ரம்யா

# லாரி லாரியாய்த் தேக்கம்!




'வட்டி குடுத்து மாளலைங்க. எங்களுக்கு டெபாஸிட்டே வேணாம்!' - தனியார் நிதி நிறுவனங்கள் இப்படி அலறு கின்ற நிலையைச் சொன்னேன்.

அதற்கான காரணத்தை விரிவாய் அலசு வதற்கு முன் NBFC என்கிற இந்த வகை நிறு வனங்கள் தோன்றிய வரலாற்றைச் சுருக்க மாய்ச் சொல்ல வேண்டும்.

சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு வரையில் தொழில் நிறுவனங்கள் நடத்தப் பட்ட விதமே வேறு. புதிதாக ஏதேனும் மிஷின் வாங்க வேண்டுமானால் கம்பெனி பணத்தைத் தான் போட வேண்டும். இயந்திரங்கள் வாங்க பாங்கில் கடன் பெறலாம் என்றால்கூட கணிச மான கையிருப்பு (margin money) இருந்தால் தான் தருவார்கள்! கைப்பணத்தைப் போட்டு இப்படி மிஷின் வாங்கும்போது, பெருந் தொகை முடங்கிப் போய், போதுமான அளவு பண சுழற்சி (liquidity) இல்லாமல், அன்றாட நிர்வாகமே கஷ்டமாகிப் போகும்.

இந்தப் பிரச்னையை வெல்வதற்காக மேற்கத்திய நாடுகளிடமிருந்து ஒரு யோசனை 'காப்பி'யடிக்கப்பட்டது. அதுதான் வாட கைக்கு எடுத்தல் (leasing), மற்றும் தவணை முறையில் (Hire Purchase) வாங்குதல்!

தவணை முறை 'கம்பெனி ஷாப்பிங்' பிரபல மானதும் அசோக் லேலண்ட், டீவிஎஸ், கோவை லக்ஷ்மி க்ரூப் என்று அனேக தொழில் நிறுவனங் கள் தாங்களே Hire Purchase (தவணை நிதி உதவி) கம்பெனிகளைத் தொடங்கின. இவையெல்லாம் பொதுமக்களிடம் டெபாஸிட் பெறும் NBFCக் களாகவும் இயங்குகின்றன.

இந்த நிதி நிறுவனங்கள் தங்கள் க்ரூப் நிறு வனத் தேவைகளைப் பூர்த்தி செய்தது போக, வேறு கம்பெனிகளுக்கும் உதவ ஆரம்பித்தன. குறிப்பாக லாரிகள், டிரக்குகள் வாங்குவதற்கான தவணைக் கடனுதவி தருவதில் இவற்றுக்கு முக் கிய பங்கு ஏற்பட்டது. இதனால் லாரிகளுக்கு கிராக்கி ஏற்பட, அசோக் லேலண்ட், மஹிந்த்ரா, டெல்கோ போன்ற லாரி கம்பெனிகளின் உற்பத்தி பெருகியது.

கடந்த சில மாதங்களாக லாரி வாங்குவது அடியோடு குறைந்து போய்விட்டது. லாரிக்கென கடன் வாங்குவோர் எண்ணிக்கையும் குறைந்து போனது.

விளைவு? நிதி நிறுவனங்கள், தாங்கள் பெற்ற டெபாஸிட்டை வைத்துக்கொண்டு திண்டாடு கின்றன! கடன் கொடுக்க அவர்கள் தயார்... ஆனால் கொள்வாரில்லை! வாடிக்கையாளர் களுக்குப் பதினெட்டு சதவிகித வட்டி 2 அல்லது 3 சதவிகித ஊக்கத்தொகை மட்டும் தவறாமல் தர வேண்டும். நிர்வாகச் செலவு வேறு. எல்லா மாகப் பார்த்தால் நூற்றுக்கு 28 ரூபாய் செலவு என்று வைத்துக் கொள்வோம்... 29 ரூபாயாவது சம்பாதித்தால் தானே ஒரு ரூபாயாவது லாபம் பார்க்கலாம்... அதற்கு வழியில்லாமல்தான் லாரி வியாபாரம் படுத்து விட்டதே!

லாரி வியாபாரம் படுத்ததற்கு என்ன கார ணம்?

லாரி வாங்கி ஓட்டும் தொழில், சரக்குகளை நம்பியே நடக்கிறது. சரக்குகள் போக்குவரத்தோ தொழில் வளத்தைப் பொறுத்தே அமையும். தொழில் வளம் கடந்த ஒன்றரை ஆண்டுகளாகத் தேங்கிக் கிடக்கிறதே! இந்தத் தேக்கம் நீங்கும் வரை கஷ்டம்தான்!

தேக்கத்தைப் போக்குவதற்கு ஏதாவது செய் கிறோமா? அரசாங்கம் செய்கிறதா?

கொஞ்சம் போல வேலை நடந்திருக்கிறது! சொல்கிறேன்.

(அடுத்த வாரம்)

— வி. கோபாலன்

# "தெருநாய்கள் ஒன்றும் கேவலமில்லை!"

வீதியிலே இருபத்தெட்டு; வீட்டுக்குள்ளே எட்டு! – டாக்டர் மாலதி பராமரிக்கும் நாய்களின் எண்ணிக்கை தான்!



"லொள்... லொள்... லொள்..." - ஒன்றல்ல இரண்டல்ல... அண்ணா நகரிலுள்ள அந்த ஃபிளாட்டின் காலிங் பெல்லை அழுத்தியதும் ஐந்தாறு நாய்களின் ஒருமித்த குரைப்பு நம் அடிவயிற்றைக் கலங்கச் செய்தது.

"வாங்க வாங்க... உள்ளே வாங்க... சும்மா பயப்படாம வாங்க... ஒண்ணும் பண்ணாது..." என்று நம்மை வரவேற்றார் டாக்டர் மாலதி.

நாம் பயந்து கொண்டே உள்ளே போய் உட்கார்ந்தோம். உட்கார்ந்த ஒரு நிமிடத்தில் நாய்களின் குரைப்பு அடங்கியது. எல்லாம் வாலை ஆட்டிக் கொண்டு நம்மிடம் நட்பு முறையில் பழக ஆரம்பித்து விட்டன. மொத்தம் எட்டு! அனைத்துமே தெரு நாய்கள்.

"சாதாரணமாக, நாய் வளர்ப்பவர்கள் உயர்ந்த ஜாதி நாய்களைத்தான் வளர்ப்பார்கள். ஆனால் நீங்களோ இப்படி தெரு நாய்களைப் பண்ணை மாதிரி வளர்க்கிறீர்களே..."

"நாய்களில் கூட உயர்ந்த ஜாதி தாழ்ந்த ஜாதி என்று பார்க்கிற அல்பமான மனித மனோபாவம் உங்களையும் விட்டு விடவில்லை பார்த்தீர்களா..." என்ற டாக்டர் மாலதியின் குரலில் சிறிது வருத்தம் வெளிப்பட்டது.

"சேச்சே! நாங்கள் அந்த அர்த்தத்தில் கேட்கவில்லை. யதார்த்தமாகத்தான் கேட்டோம்..." என்று அவரைச் சமாதானப் படுத்தினோம்.

"பல பேர் தங்களது அந்தஸ்தை வெளிக்காட்டுவதற்காகத்தான் வெளிநாட்டு நாய்களை ஆயிரக்கணக்கில் விலைகொடுத்து வாங்கி வந்து வளர்க்கிறார்கள். அதுவும் நம்முடைய சீதோஷ்ண நிலைக்குப் பழக்கப்படாத வெளிநாட்டு நாய்களை வாங்கி வந்து, வளர்க்கிறோம் என்கிற பெயரில் அவற்றைச் சித்திரவதைப்படுத்துகிறார்கள். எதற்கு? தங்களுக்கும்

* திருமதி சகுந்தலா

பிராணிகளிடத்தில் அன்பு உண்டு என்று சமூகத்தில் காட்டிக் கொள்வதற்காக. நிஜமாகவே உங்களுக்குப் பிராணிகளிடத்தில் - நாய்களிடத்தில் அன்பு இருக்குமானால் அதை இங்குள்ள தெருநாய்களிடம் காட்டலாமே! நாய்களில் கூட ஜாதி பார்த்து வருகிற ஒன்று எப்படி அன்பாக இருக்க முடியும்?''

''சாரி... நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்?''

''நீங்கள் என்ன ஜாதி நாய்களை வேண்டுமானாலும் வளர்த்துக் கொள்ளுங்கள். அது பற்றி அக்கறை யில்லை. ஆனால் அவற்றை உங்கள் அந்தஸ்தைக் காட்டுகிற மாதிரி வெளியில் 'வாக்கிங்' என்று அழைத்துச் செல்லுகிறபோது என்ன செய்கிறீர்கள்...''



• டாக்டர் மாலதி

''என்ன?''

''உங்கள் உயர்ஜாதி நாய்களைக் கண்டு குரைக்கிற தெரு நாய்களைப் பார்த்து அருவைப்படுகிறீர்கள். தெருநாய்களைத் தீண்டத் தகாதவை மாதிரி பார்க்கிறீர்கள். வீட்டுக்குப் போனதும் மாநகராட்சிக்கோ, நகராட்சிக்கோ உடனே ஒரு போன்... தெரு நாய்களின் தொல்லையால் தெருவில் நடமாடவே முடியவில்லை... குழந்தைகள் வெளியில் வரவே பயப்படுகிறார்கள்... அவை கடித்தால் என்னாவது? உடனே வந்து பிடித்துச் செல்லுங்கள்... என்று புகார் செய்கிறீர்கள்... அவர்களும் வந்து பிடித்துக் கொண்டு போய்விடுகிறார்கள்...''

''ஆமாம். தெருநாய்களில் வெறிநாய்களும் இருக்கும் என்கிற பயம் பலருக்கும் இருப்பது நியாயம்தானே!''

''வெறிநாய் என்பது ரொம்பவும் அபூர்வம். ஆயிரத்தில் ஒரு நாய் கூட வெறிநாயாக இருப்பதில்லை. (அப்படி இருக்கும் நாய்களைக் கண்டுபிடித்துக் கொல்வதும் மிகச் சுலபம்!) நீங்கள் வளர்க்கிற நாய்களில் கூட வெறி நாய்கள் இருக்கலாமே! எனவே உங்களுக்குப் பிடிக்காத தெருநாய்களை வெறிநாய்கள் என்று குற்றம்சாட்டுவது இயல்பாகப் போய் விட்டது.''

''சரி, என்னதான் செய்ய வேண்டும் என்கிறீர்கள்?''

''இந்த பூமியில் வாழ்வதற்கு மனிதர்களான நமக்கு எத்தனை உரிமை இருக்கிறதோ அதே அளவுக்கான உரிமை எல்லா உயிரினங்களுக்கும் இருக்கிறது. தெருநாய்களுக்கும் இருக்கிறது. எனவே, அவை வாழுகிற உரிமையில் நாம் தலையிடக் கூடாது என்கிறேன். நிஜத்தில் தெருநாய்கள் மிகவும் அன்புடையவை. உங்கள் வீட்டில் மீந்து போகிற உணவை குப்பையோடு குப்பையாகக் கொண்டு போய்த் தொட்டியில் கொட்டாமல், அதைத் தனியே கொண்டு போய்க் குப்பைத் தொட்டியின் ஓரத்தில்

வைத்து விடுங்கள். அதைச் சாப்பிட்டு அவை பிழைத்துக் கொள்ளும். இப்படி ஒவ்வொருவரும் செய்தால் அந்தந்தப் பகுதியிலுள்ள தெருநாய்கள் சாப்பிட வாய்ப்பாகும். இரவு நேரங்களில் அந்நியர்கள் அந்தந்தப் பகுதிக்குள் வரும்போது அவை குரைக்கும். திருட்டுகள் கூட குறைந்து போகும். இதைக் குடிசைப்பகுதி மக்கள் புரிந்து கொண்டிருக்கிற அளவுக்கு மற்றவர்கள் புரிந்து கொள்ளாமல் இருப்பது தான் வேதனையாக இருக்கிறது!" என்கிறார் டாக்டர் மாலதி.

தெருநாய்களின் 'தொல்லை' பற்றி மாநகராட்சிக்கோ, நகராட்சிக்கோ பொது மக்கள் புகார் செய்கிற போது, அவர்கள் வந்து பிடித்துக் கொண்டு போய் என்ன செய்கிறார்கள் தெரியுமா? கொன்று விடுகிறார்கள்!

"ஊசி போட்டுக் கொல்வதானால் அதற்கு ஒரு நாய்க்கு நாற்பது ரூபாய் செலவாகும் என்பதால் மின்சாரம் பாய்ச்சிக் கொல்கிறார்கள். அதுவும் எப்படி? அப்பாவியான அந்த நாயின் மேல் தண்ணீரை ஊற்றுவது. உடனே மின்சாரத்தைச் செலுத்தி ஷாக் அடிக்கச் செய்து கொல்வது! இது கொடூரமில்லையா?" என்கிறார் டாக்டர் மாலதி.

இவர், வீட்டில் எட்டு தெரு நாய்களை வளர்ப்பதோடு, தமது பகுதியிலுள்ள மேலும் இருபத்தெட்டு நாய்களுக்குத் தினமும் ரொட்டி, பால் என்று கொடுத்து வருகிறார்.

"மாநகராட்சிப் பகுதிகளில் எப்படியோ, எங்களைப் போன்று பஞ்சாயத்துப் பகுதிகளில் வசிக்கும் தெரு நாய்களைப் பிடித்துக் கொண்டு போகும் பஞ்சாயத்தினர் எப்படி அவற்றைக் கொல்கிறார்கள் தெரியுமா?

"எங்கோ ஓர் ஒதுக்குப்புறத்தில் ஆழமாகக் குழிவெட்டி, அதில் நெருப்பை மூட்டி விடுகிறார்கள். நாய்களைப் பிடித்துக் கொண்டு போய் அந்தக் குழிக்கு அருகில் வண்டியை நிறுத்தி, அதன் கதவுகளைத திறந்து விடுகிறார்கள். பாவம், அந்த நாய்கள்! அப்பாடா தப்பித்தோம் என்று ஆனந்தப்பட்டு, வெளியில் குதிப்பதாக நினைத்துக் கொண்டு நெருப்புக் குழிக்குள் விழுந்து துடிதுடித்து உயிரை விடுகின்றன!" என்று சோகம் தாங்காமல், கண்ணீரோடு சொல்கிறார் வளசரவாக்கத்தில் வசிக்கும் திருமதி சகுந்தலா.

"தெருநாய்களின் இனப்பெருக்கத்தினால் அவற்றின் எண்ணிக்கை அதிகமாகி விடும் என்று பஞ்சாயத்தில் சொல்கிறார்கள். நாங்கள் என்ன சொல்லுகிறோம். அந்த நாய்களுக்கு அறுவைச் சிகிச்சை செய்து (குடும்பக் கட்டுப்பாடு) விடுகிறோம். அவற்றால் எண்ணிக்கை பெருகாது என்பதால் அவற்றைப் பிடித்துக் கொண்டு போகாதீர்கள். அவை உயிர் வாழ்கிறவரை வாழ்ந்து விட்டுப் போகட்டுமே! என்கிறோம். அப்படியும் கேட்பதில்லை. பெரும்பாலான பொதுமக்களும் தெருநாய்கள் என்றாலே தீண்டத்தகாதனவாகத்தான் பார்க்கிறார்கள்!" என்ற சகுந்தலா, தாம் டாக்டரை அழைத்து வந்து அறுவைச் சிகிச்சை செய்த இரண்டு நாய்களைக் காட்டினார்.

கட்டிப் போடப்பட்டிருந்த அந்த நாய்கள் இவரைக் கண்டதும் தாயைக் கண்ட குழந்தைகளைப் போல குதூகலித்தன.

"இன்னும் இரண்டு ஊசிகள் போட வேண்டியிருக்கிறது. போட்ட பிறகுதான் இவற்றை அவிழ்த்து விட வேண்டும்!" என்றார் சகுந்தலா.

இவருக்கு ஆதரவாகச் சில இளைஞர்களும் இளம்பெண்களும் செயல்படுவது இவருக்கு மேலும் உற்சாகத்தைக் கொடுத்திருக்கிறது.

புளூகிராஸ், எஸ்.பி.சி.ஏ. மற்றும் மேனகா காந்தியின் பி.எஃப்.ஏ. (People for Animals) போன்ற அமைப்புகள் என்ன செய்கின்றன?

"எல்லா அமைப்புகளும் நம்மூர்களில் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் நிதிவசதி வேண்டாமா? பிரச்னையைத் தீர்ப்பதற்கான ஒரே வழி பொதுமக்கள் விழிப்புணர்வு பெறுவதுதான். நாய்களில் வித்தியாசம் பார்க்காதீர்கள். சரியான உணவு கிடைக்காததால்தான் தெருநாய்கள் அசிங்கமாகத் தெரிகின்றன. அவற்றுக்கும் நல்ல முறையில் உணவு கிடைத்தால் கொழுகொழுவென்று அழகாகவே இருக்கும். உங்களிடம் அன்பு காட்டும். உங்கள் வீடுகளுக்குப் பாதுகாவலாகவும் இருக்கும்!" என்கிறார் டாக்டர் மாலதி.

**— இளங்கோவன்**

வண்ணப்படமும் படங்களும் : **கோபிநாத்**



"உன் வீட்டுக்காரர் கை நிறைய லஞ்சம் வாங்கறார் போலிருக்கு..."

"எப்படி சொல்றே...?"

"காப்பிப் பொடி அநியாயமாய் விலை ஏறியும் வீட்டுக்கு வர்றவங்களுக்கு காப்பி தர்றியே..."

– ராஜிராதா

தமிழ் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்

# 16 வருட பலமான அஸ்திவாரம்
# ரூ. 75 கோடிக்கு மேல் டெபாசிட்டுகள்.
# ரூ. 600 கோடி மதிப்புள்ள பண்ணாரியம்மன் குரூப்பின் அங்கம்

'FAA' by CRISIL indicating HIGH SAFETY



பலதுறைகளிலும் ஆழமாகக் காலூன்றியுள்ள ரூ.600 கோடி மதிப்புடைய பண்ணாரியம்மன் குரூப்பின் ஓர் அங்கமே அண்ணாமலை பைனான்ஸ். பலதரப்பு மக்களுக்கும் 16 ஆண்டுகாலமாக மிகச்சிறந்த நிதிச் சேவைகளை அளித்து வந்துள்ளது அதன் மாபெரும் பலம்.

அண்ணாமலை பைனான்ஸ் பெற்றிருப்பது ஆயிரக்கணக்கான வாடிக்கையாளர்களின் நல்லெண்ணம் மற்றும் நம்பிக்கை.

**"HIGHER INTEREST RATES ARE OFFERED ON DEPOSITS FROM 1st JANUARY 1997"**

ANNAMALAI FINANCE LIMITED • COIMBATORE •

# அண்ணாமலை பைனான்ஸ் லிமிடெட்

பதிவு அலுவலகம்: 252, மேட்டுப்பாளையம் ரோடு, கோயமுத்தூர் - 641 043. போன் : 432224

Branches and Telephone Nos. • **Mumbai**: 2843602 • **Bangalore**: 2227365 • **Coimbatore**: 232015 • **Delhi**: 5752417 • **Ernakulam**: 372226 • **Erode**: 79400 • **Gobichettipalayam**: 22924 • **Karaikudi**: 23029 • **Kozhikode**: 76587 • **Madurai**: 740450 • **Chennai**: Spencer Plaza Branch: 8522538 Continental Plaza Branch: 8522350 Anna Nagar Branch: 6263447 T.Nagar Branch: 4340248 Mylapore Branch: 4992993 • **Pondicherry**: 38507 • **Pollachi**: 25909 • **Pune**: 627178 • **Salem**: 419513 • **Sathyamangalam**: 20420 • **Tirunelveli**: 25144 • **Trichy**: 463304 • **Vellore**: 26371 • **Villupuram**: 23780.

SASI / 30 / 97

உங்கள் வளமான வாழ்வே எங்கள் இலட்சியம்

பாபா தமது பக்தர்களின் இதயத்தில் தினமும் வலம் வந்து கொண்டுதான் இருக்கிறார். ஆனாலும் அவரது சென்னை வருகை அத்தனை பக்தர்களும் எதிர்நோக்கும் ஓர் அனுபவம். இதயத்தில் பகவானையும் கண்களில் கரைகாணா ஆவலையும் தேக்கி 'சுந்தரம்' வளாகத்தில் அவர்கள் காத்திருப்பதைப் பார்ப்பதே ஓர் அலாதியான காட்சிதான்.





# பாபா விஜயம்...

## — நேரடி ரிப்போர்ட்

ஏப்ரல் பத்தாம் தேதி. வெயில், வியர்வை, அசௌகர்யங்களையெல்லாம் பொருட்படுத்தாமல், மூன்று மணி நேரம் மிக மிக அமைதியாக, ஒழுக்கமாக இருந்தது கூட்டம். வாலன்டியர்கள் தண்ணீர் விநியோகித்து உதவினார்கள். பதாகைகள், பட்டுக் குடை, விளக்கு என்று வரவேற்புக்கான







சாதனங்கள் தயார். வாசலிலிருந்து மேடை வரை சிவப்புக் கம்பளம்.

ஒன்பது மணிக்கு வி.ஐ.பிக்கள் பத்திரிகையாளர்கள் வந்து விட்டனர். ஒன்பதே முக்காலுக்கு 'கணநாதா' என்று கணீர்க் குரலில் ஒரு பெண் மணி பாட ஆரம்பிக்க, பஜனை பாடல்கள் ஒலித்தன. தொடர்ந்து நாதஸ்வரம். தெய்வீகக்களை அந்தச் சூழலை வியாபித்தது.

நடக்க முடியாத நோயாளி ஒருவரை இரண்டு பேர் தூக்கி வந்து அமரச் செய்தனர். சாயி மன்றங்கள் சார்பில் ரத்த வங்கி அமைத்து நிர்வகித்து வரும் டாக்டர் ஜே, பால சுப்ரமண்யம், கூட்டத்திடையே தென்பட்டார்.

"சுவாமிகிட்டே போய்ச் சேர்வதற்கு முன்னாலே 'சுவாமி'யைப் பார்க்கணும்..." - ஒரு முதியவர் மனமுருகிச் சொல்லிக் கொண்டிருந்தார்.

சரியாக பத்தே முக்கால். ஸ்ரீ சத்ய சாயி பாபா வந்திறங்கினார். பக்தர்களின் கோஷம் உச்சத்தை எட்டியது. கம்பளத்தில் மலர் தூவப் பட, இருபுறமும் தம் தீர்க்கமான பார்வையைச் செலுத்தி ஆசி வழங்கியபடியே நடந்து வந்தார் பாபா. அவருக்கென அமைத்திருந்த மேடையில் ஏறாமல், நேராக சுந்தரம் கட்டடத்துக்குள்




நுழைந்தார். புதுப்பிக்கப்பட்ட தமது திருவுருவத்தைத் திறந்து வைத்துவிட்டு, ஸ்ரீ ஷிரிடி சாய் பாபாவின் சந்நதிக்குச் சென்றார். அங்கு ஏழைக் குழந்தைகளுக்கென வாங்கி வைக்கப்பட்டிருந்த உடைகளைத் தமது கைகளால் தொட்டுக் கொடுத்து ஆசி வழங்கினார்.

"இப்போ தொட்டுக் கொடுத்தாலும் சாயங்காலம் அவர் கையாலேதான் குழந்தைங்களுக்கு விநியோகிக்கப் போறார் பாருங்கள்..." என்று வாலன்டியர்கள் புன்னகையுடன் பேசிக் கொண்டார்கள்.

மேடைக்கு வருவார் பகவான் என்று கூட்டம் எதிர்பார்த்த நேரத்தில், மீண்டும் கட்டடத்துக்குள் நுழைந்தார் பாபா. முதல் மாடியில், தாமரை வடிவத்தில் அமைக்கப்பட்டிருக்கும் பால்கனியில் நின்று எல்லோருக்கும் ஆசி வழங்கி, கை அசைத்து விடைபெற்றார்.

மெள்ள கலைந்த கூட்டத்தினிடையே அனுபவப் பரிமாற்றங்கள் காதில் விழுந்தன.

"எனக்கு பகவான் படம் முதல்ல கிடைச்சது பார்த்தியா..."

"கடைசி லட்டு பிரசாதம் எனக்குத்தான் கிடைச்சது..."

பக்தர்கள் மனத்தில் முதலும் கடைசியுமாக சத்ய சாயி பாபாவே இடம்பெற்றிருந்ததை உணர முடிந்தது.

"அவர் கடவுளுடைய அவதாரமா இல்லையா என்கிற ஆராய்ச்சியெல்லாம் எனக்கு வேண்டாம் சார்... எத்தனை பெரிய சேவையை அவர் பண்ணிக்கிட்டிருக்கார். எவ்வளவு கட்டுக்கோப்பா அது நடக்குது...! அதுக்காக அவரை நான் ரொம்ப மதிக்கறேன்..." - ஒரு தொழிலதிபர் இப்படிப் பேசியபோது சத்ய சாயி சங்கீதாஞ்சலி என்கிற காஸெட்டில் கேட்ட பாடல் நினைவுக்கு வந்தது.

*"முழுதாய் உணர்ந்தவர் யாரோ சாயி - உன்னை*
*முழுதாய் உணர்ந்தவர் யாரோ...?"!*

- பாபாவின் பரம பக்தையான எம்.எஸ். தமது எண்பதாவது வயதில் பதிவுசெய்திருக்கும் இந்த காசெட், புட்டபர்த்தியில் அவரது எழுபத்தோராவது பிறந்த நாளன்று வெளியிடப்பட்டது. பாபாவின் சென்னை வருகையையொட்டி எச்.எம்.வி. நிறுவனம் அதை விற்பனைக்குக் கொண்டு வந்தது. பத்து இந்திய மொழிகளில் பத்துப் பாடல்கள். பாபா பக்தர்களுக்கு இந்த காசெட் ஒரு பொக்கிஷம். எம்.எஸ்.ஸின் முதிர்ந்த பொன் குரலில் தங்கள் இஷ்ட தெய்வத்தின் புகழாஞ்சலியைக் கேட்பதைக் காட்டிலும் மேன்மையான அனுபவமாக அவர்கள் கருதக்கூடியது பாபாவின் நேரடி தரிசனத்தை மட்டுமே.

— அருண்சரண்யா

# கோகுலம் அழைக்கிறது!

**தமிழ், ஆங்கிலம் கோகுலம் இதழ்களில் முழு நேர உதவியாளர்களாகப் பணியாற்ற பட்டதாரி இளைஞர்கள் தேவை. தமிழ் அல்லது ஆங்கிலம் எளிமையாகவும் பிழையின்றியும் எழுதக்கூடிய சென்னைவாசிகளாக இருக்க வேண்டும். குழந்தைகளிடம் பேரன்பு கொண்டிருப்பது அவசியம். தேர்ந்தெடுக்கப்படுவோர் திருப்திகரமாகச் செயல்பட்டால் நல்ல எதிர்காலம் உறுதி. ஜெராக்ஸ் தகுதிச் சான்றிதழ்களுடன் தபால் மூலம் விண்ணப்பங்கள் பெற இறுதி தேதி : 30.4.97. முகவரி : ஆசிரியர், கோகுலம், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

1937 வைர விழா 1997

மக்கள் சேவையில் 60 ஆண்டுகள்

நாட்டின் நலனுக்கு எங்களை மீண்டும் அர்ப்பணித்துக்கொள்கிறோம்

**இந்தியன் ஓவர்சீஸ் வங்கி**

உங்கள் வளர்ச்சிக்கோர் உத்தம நண்பன்

ஞான

**ஆலயம்**

ஆரோக்கிய, ஆன்மீக மாத இதழ்

ஆசிரியர் : ரமேஷ் மஞ்சுளா

- அவர் எங்கு போக முடியும்? — பகவான் ரமணர்
- சிறு வயது முதலே சீரிய வளர்ப்பு

**இலவச இணைப்பு**

**'கணக்காய் இருக்கணும்...'**

— பரமாச்சார்யார் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்

விலை ரூ. 6/- மட்டும்!

ஏஜென்ஸி விவரங்களுக்கு :
சர்குலேஷன் மானேஜர்

**ஸ்ரீ அன்னை பப்ளிகேஷன்ஸ்**

'வித்யாஸ்ரமம்', நெ. 7, அருணாசலபுரம் 2வது தெரு, அடையாறு,
சென்னை - 600 020. போன் : 4912231



"நம்ம தலைவர் தீ மிதிதான் கூடா துன்னு சொன்னார். அதுக்காக, வெயில் தீ மாதிரி கொளுத்துதுன்னு வெளில போகக்கூட பயந்துட்டு வீட்டுலேயே உட்கார்ந்துட்டிருந்தா எப்படி அண்ணே?"

''நான் சொல்லல? சீஸனுக்கு ஏத்தாப்பல மேக் அப் பண்ணிக்கறதுல அந்தம்மாவை யாரும் அடிச்சிக்க முடி யாது!"





"...ஆகவே, இந்த வேகாத வெயிலில் தொண்டை கிழியக் கத்தும் எனக்கு, கட்சிக்கண்மணிகள் வெறும் சோடா கொடுக்காமல் ஐஸ் போட்ட சர்பத் தாகவே தந்து விடும்படிப் பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்..."

"நீங்கதானே சார், சம்மர் கட் கேட் டீங்க?"





ஹாட் ஜோக்ஸ்!!
"வெயில் காலம்ங்கறதை நானும் ஒத்துக்கறேன். அதுக்காக இதையெல் லாம் அலோவ் பண்ண முடியாது!"
"ஹிஹி. வத்தல்தான்! என் மனைவி எதிலும் கலையழகு வேணும்னு நினைப்பா."
"வெயில்ல களைச்சுப் போயிருப் பியேன்னு வாங்கினேன்! கிண்டல்னு நினைச்சா எப்படி?"

# திருப்பதிக்கு லட்டு!





• சீனிவாசன்

• வேலாயுதம்

# மணசும் ரொம்ப அத்தம்!

**ஊரார் துணிகளையெல்லாம் துவைக்கிற சலவைத் தொழிலாளர்கள் தங்கள் துணிகளைத் தாங்களே துவைத்துக் கொள்வார்களா அல்லது ஓர் அதிகார தோரணையோடு மனைவியைத் துவைக்கச் சொல்வார்களா? சீனிவாசன் என்ற சலவைத் தொழிலாளியிடம் முதலில் கேட்டோம்.**

"என்ன இப்படிக் கேக்கறீங்க? என்னோட அழுக்கை நானேதான் துவைப்பேன். வேறு யாரு துவைப்பாங்க?"

"உங்க மனைவியைத் துவைக்கச் சொல்ல மாட்டீங்களா?"

"இல்ல சார். அழுக்கோட அழுக்குத் துணியா என்னோடதையும் எடுத்துக்கிட்டு வந்து துவைச்சுக்கிட்டுப் போயி, நானே இஸ்திரியும் போட்டுக்குவேன்."

"ஒரு துணியை எத்தனை நாள் போட்டுக்குவீங்க?"

"ரெண்டு நாளைக்குப் போட்டுக்குவேன் சார். தினசரி ஒரு டிரஸ் போட்டுக்கிட்டா துவைக்கறது கஷ்டம்தானே!"

"உங்க மனைவி துணியை யார் துவைப்பாங்க? அதையும் அழுக்கோட அழுக்குத் துணியா எடுத்துக்கிட்டு வந்து நீங்களே துவைச்சிடுவீங்களா?"

"வழக்கமா எனக்கெதுக்குக் கஷ்டம்னு வூட்டுல அவளே துவைச்சுக்குவா... ஒடம்பு கிடம்பு சரியில்லீன்னா... இல்ல வெள்ளாவி வெச்சுத் துவைக்க வேண்டியிருந்தா அவளோட துணிங்களையும் நானே எடுத்துக்கிட்டு வந்து துவைச்சிடுவேன்!"

"சாதாரணமா, மனைவியோட துணியைப் புருஷன் துவைச்சா அவனை மத்தவங்க கேலி பேசுவாங்களே..."

"அதெல்லாம் இருக்கப்பட்டவங்க வூட்லதான் கேலிபண்ணுவாங்க. பேர் தெரியாத யார் யாரோ புடைவைங்களை யெல்லாம் துவைக்கறேன். அதில எம் பொண்டாட்டி துணியை நான் துவைக் கறதுல என்ன சார் கேவலம்?" என்றார் சீனிவாசன்.

**வே**லாயுதம் என்பவரிடம் கேட்டபோது...

"எம்பொண்டாட்டியும் என்னோட துணி துவைக்க வருவா. அதனால என்னோட துணியா, அவளோட துணியா, யாரோடதை யார் துவைக்கறோம்கிற கணக்கெல்லாம் கிடையாதுங்க. துணியோட துணிங்களா ரெண்டு பேருமே துவைப்போம். என்னைக் கேட்டா... யாருதா இருந்தா என்ன சார்... அழுக்கைத் துவைக்கறேன்... அவ்வளவுதான். பொண்டாட்டி பொடவையைத் துவைச்சா கவுரதை போயிடுமா என்ன... நீங்க கேக்கறதுதான் எனக்குப் புதுசா இருக்கு!"

சந்திப்பு : **சார்லஸ்**
படங்கள் : **கோபிநாத்**

- தென் அமெரிக்காவில் அமேசான் நதி மிக மிக வேகமாகப் பாய்ந்து வந்து கடலில் கலப்பதால், நூறு மைல் வரை கடலில் நதி நீரே இருக்கிறது! பருகும் அளவுக்கு நீர் உப்பு இல்லாமல் உள்ளது. (ஆதாரம் : அறிவியல் குறிப்புகள் 1000.)
- உலகிலேயே மிக அதிகமாக விற்பனையாகியுள்ள பொது அறிவு நூல் டாக்டர் பெஞ்ஜமின் ஸ்பாக்ஸ் எழுதியது. குழந்தைகள் பராமரிப்பு பற்றிய இந்த நூல் 1946ல் வெளிவந்து, இதுவரை மூன்று கோடி பிரதிகளுக்கு மேல் விற்பனையாகியுள்ளது. (நன்றி : விஸ்டம்)

தகவல்: ஆலன்

# காணாமல் போனவர்கள்...



காணாமல்
போனவர் பெயர்-
எளிமை.

இவர்-
கடந்த பல நூற்றாண்டுகளாக
இந்தியாவில் வாழ்ந்தவர்.

இவர் காணாமல்போன சமயம்,
ஆடம்பரத்துடன்-
தகாத உறவு
கொண்டிருந்தார் என்று
தெரிய வருகிறது.

அடுத்து...
காணாமல்
போனவர் பெயர்-
வாய்மை.

இவர்-
கல்தோன்றி மண்தோன்றாத
காலத்தில்,
கோலோச்சியவர்களின்
வசம்சத்தில் பிறந்தவர்.

இவர்
காணாமல் போன சமயம்
அரசியல் மேடைகளில்
பேசப்பட்ட உரைகளைக் கேட்டதனால்-

'மனநிலை'
பாதிக்கப்பட்டிருந்தார் என்று
தெரியவருகிறது.

இறுதியாக..
காணாமல்
போனவர் பெயர்-
அஹிம்சை

இவர்
கடந்த நூற்றாண்டிலேயே-
''கடைவிரித்தேன் கொள்வாரில்லை'' என
மனம்-
நொந்திருந்தார் என்றும்,

இவர்-
1948-ஆம் ஆண்டு
கொலை செய்யப்பட்டார் என்றும்
தகவல்கள் உண்டு.

அறிவிக்கப்பட்ட
மூன்று நபர்களைப்பற்றி,
யாரேனும்
தகவல் அறிந்தால்-
அவரவர் மனங்களிலாவது
'அடைக்கலம்'
தருமாறு வேண்டப்படுகிறார்கள்...

— புவனகிரி கல்யாண்






1997 ஏப்ரல் 20
ஈசுவர சித்திரை 7
மலர் : 55
இதழ் : 38

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# கவிழ்ப்பு அரசியல்!

ஐக்கிய முன்னணி, காங்கிரஸ் ஆதரவுடன் ஆட்சிக்கு வந்தபோது, 'ஒரு பதின்மூன்று கட்சிக் கூட்டணி நல்ல நிர்வாகம் தர முடியுமா?' என்று அவநம்பிக்கை கொண்டோம். 'காங்கிரஸ் ஆதரவு இன்னும் எத்தனை நாளைக்கு நீடிக்கும்?' என்று சந்தேகப்பட்டோம்.

நம் அவநம்பிக்கை பொய்க்கும்படி, கூட்டணி அரசு என்பது ஒட்டுப்போட்ட பொம்மை அல்ல - அது மனம் வைத்தால் சிறப்பாகச் செயல்பட முடியும் என்பது நிரூபணமாகியது. ஆனால், அதே நேரத்தில் காங்கிரஸ் தலைவர் நமது இரண்டாவது சந்தேகத்தை மெய்ப்பித்து விட்டார்!

பல மொழி, பல இன மக்கள் பரவிக் கிடக்கும் இந்தியா போன்ற தேசத்தில், கூட்டணி ஆட்சி என்பது மிகவும் அர்த்தமுள்ளதாக அமையவல்லது. மாநிலக் கட்சிகள் பலவற்றுக்கு, மத்திய ஆட்சியில் இடமளிக்கப்படுவதால், அதிகாரக் குவிப்பு ஒரு கட்சி அல்லது மாநிலத் தலைவரின் கையில் இருப்பதில்லை. அனைத்துக் கட்சிகளிலுமே தலைசிறந்த பிரதிநிதி தேர்ந்தெடுக்கப்பட்டு அமைச்சராக்கப்படுவதால் அமைச்சரவை உறுப்பினர்களின் அறிவும் ஆற்றலும் குறிப்பிடும்படி அமையும். ஒரே கட்சியிலிருந்து அத்தனை அமைச்சர்களும் தேர்வாகும்போது, அவ்வாறு அமைவதற்கான வாய்ப்பு இல்லை. பல கட்சிக் கூட்டணி ஆட்சி என்பதால் ஒருவரை ஒருவர் சதா கண்காணித்துக் கொண்டிருக்க, சர்வாதிகாரப் போக்கும் ஊழலும் கட்டுப்பட்டு அடங்கியிருக்கும்.

கூட்டணி ஆட்சியின் இந்த ஆதாயங்களெல்லாம் அரும்ப ஆரம்பிக்கிற நேரத்தில்தான்




கேசரி 'ஆதரவு வாபஸை' அறிவித்தார்! தனிப் பெரும்பான்மை பலமில்லாத கூட்டணி ஆட்சி கவிழ்ந்து விட்டது!

கேசரி சுயநல நோக்கில் செயல்பட்டிருக்கிறார் என்பது பட்டவர்த்தனமாகத் தெரிகிறது. ஆதரவு வாபஸுக்கு அளிக்கப்பட்டுள்ள காரணங்களில் வலுவேயில்லை. கொலை வழக்கில் சம்பந்தப்படுத்தி குற்றச்சாட்டு, குடும்பத்தினர் பேரில் மோசடி வழக்குகள்; ஜே.எம்.எம் வழக்கில் நேரடித் தொடர்பு; காங்கிரஸ் கட்சிக்கு மூன்று கோடி ரூபாய் வருமானம் வந்ததற்குக் கணக்கேயில்லை என்கிற குளறுபடி; வருமான வரித்துறை அக்கட்சிக்கு விதித்துள்ள அபராதம்... எல்லாமாகச் சேர்ந்து கிடுக்கிப்பிடி போட, கேசரி தம்மைக் காப்பாற்றிக் கொள்ளும் முயற்சியில் நாட்டைக் காவு கொடுத்துவிட்டார்!

இவ்வளவு நடந்த பிறகும் கேசரி நிம்மதியாக இருக்கப் போவதில்லை. இந்த உண்மைகளை பவார் போன்ற பிற காங்கிரஸ் தலைவர்களும் உணர்ந்துதான் இருப்பார்கள். ஆனால் அவர்கள் அனைவருமே கேசரியின் முடிவை ஆதரித்திருக்கிறார்கள்! ஏன்..? 'இதனால் வரக்கூடிய அவப்பெயரை அவர் சுமக்கட்டுமே' என்கிற உள்நோக்கமாகக் கூட இருக்கலாம்.

இந்தச் சுயநல சூழ்ச்சியினிடையேயும் சில நன்மைகள் :

ப. சிதம்பரம் தயாரித்த பட்ஜெட்டை பாராளுமன்றத்தில் நிறைவேற்ற முடிவெடுக்கப்பட்டுள்ளது. இதில் அனைத்துக் கட்சிகளும் ஒற்றுமை காட்டியிருக்கின்றன. இனிவரும் அரசுகளும் இதே பொருளாதாரக் கொள்கையை ஏற்றுத் தொடரும் என்கிற நல்ல அறிகுறி தெரிகிறது.

சில ஐக்கிய முன்னணி உறுப்பினர்களே வற்புறுத்தியும் கூட தேவேகௌடா ராஜினாமா செய்யவில்லை. அவ்வாறு அவர் செய்திருப்பாரேயானால், ஐக்கிய முன்னணியின் மாற்றுப் பிரதமர் காங்கிரஸுடன் தொடர்ந்து ஏராளமான சமரசங்களைச் செய்து கொள்ள வேண்டிய கட்டாயத்துக்குத் தள்ளப்பட்டிருப்பார். கேசரி, அவர் குடும்பத்தார், இதர பல காங்கிரஸ் தலைவர்கள் பேரிலான லஞ்ச - ஊழல் குற்றச்சாட்டுகள் கிடப்பில் போடப்பட்டிருக்கும். ஊழல் தழைத்து,




நேர்மை என்பதே அர்த்தமற்றுப் போயிருக்கும்.

பி.ஜே.பியும் பொறுப்புடன் நடந்து கொண்டிருக்கிறது. 'நம்பிக்கை தீர்மானத்தைக் கொள்கை அளவில் எதிர்ப்பது; ஆனால் வாக்களிக்காமல் விலகியிருப்பது' என்கிற யோசனையைக் கைவிட்டு தனது நிலையைத் திட்டவட்டமாக உணர்த்தியிருக்கிறது.

தமிழ் மாநில காங்கிரஸின் முடிவு மட்டும்தான் கசப்புணர்வை ஏற்படுத்துகிறது. பி.ஜே.பி. அல்லது காங்கிரஸ் தலைமையிலான ஆட்சிக்கு ஆதரவு தர முடியாது என ஐ.மு.வின் இதர கட்சிகள் எடுத்துள்ள நிலையிலிருந்து மாறுபட்டு நிற்கிறது த.மா.கா. இது விஷயமாக ஐ.மு. குடியரசுத் தலைவருக்கு அனுப்பியுள்ள கடிதத்தில் த.மா.கா. கையொப்பமிடவில்லை! த.மா.காவின் இந்த நிலை போற்றுதற்குரியது அல்ல.

ஒரு பக்கம் கௌடாவை நீக்கிவிட்டு வேறு ஒருவர் தலைமையிலான ஐ.மு. ஆட்சிக்குக் காங்கிரஸின் ஆதரவு பெற முயற்சி நடக்கிறது. இன்னொரு பக்கம் பி.ஜே.பி. அல்லது காங்கிரஸ் ஆட்சிக்குப் பிறர் ஆதரவு பெற முயற்சி எடுக்கப்படுகிறது. இவை எல்லாம் ஊழலுக்கும் குதிரை வியாபாரத்துக்கும்தான் வழிவகுக்கும்.

இன்றைய சூழலில் நாட்டுக்குத் தேவை நிலையான நல்லாட்சியே தவிர இன்னொரு சந்தர்ப்பவாதக் கூட்டணி அல்ல!

'மீண்டும் தேர்தல் வருவதை நாடு தாங்காது'; 'செலவு அதிகம்' போன்ற வாதங்கள் முன்வைக்கப்படுகின்றன.

தேர்தல் வரும்போது, காங்கிரஸ் பேரிலுள்ள வெறுப்பு மக்கள் மனத்திலிருந்து அகன்றிருக்காது. பி.ஜே.பி. - ஐக்கிய முன்னணியிடையேதான் மெய்யான போட்டி இருக்கும். அத்தகைய ஆரோக்கியமான போட்டியில் பெரும்பான்மை பலத்துடன் பதவிக்கு வரக்கூடிய ஒரு கட்சி சிறப்பாகச் செயல்பட்டால், தேர்தல் செலவுகளை வெகு சீக்கிரம் ஈடுகட்டி, நாட்டையும் முன்னேற்றப் பாதையில் எடுத்துச் செல்ல முடியும். அதற்குக் குடியரசுத் தலைவர் வழிவகுக்கட்டும். குழப்பவாதிகளின் முயற்சிகளை முறியடிக்கட்டும்.

கமலஹாசன், விஜயகுமார், நெப்போலியன், கார்த்திக், பிரபு, முரளி, சரத்குமார்... பெரிய நட்சத்திரப் பட்டியல்! எல்லோருக்கும் நடிகர் சங்கத் தலைவர் ராதாரவியிடம் கடும் அதிருப்தி! புதிதாக 'சினி ஆர்டிஸ்ட் யூனியன்' ஒன்றை நடிகர் விஜயகுமார் தலைமையில் இவர்கள் அமைத்துள்ளனர்.

இதுகுறித்து நடிகர் விஜயகுமாரை சந்தித்துப் பேசியபோது, "ராதாரவி மேல் எங்களனைவருக்கும் அதிருப்திதான் என்றாலும் இப்போது நாங்கள் அமைத்திருக்கும் யூனியன் ராதாரவிக்கோ, நடிகர் சங்கத்துக்கோ எதிரானதல்ல" என்றார்.

"தொடர்ந்து பதினோரு வருடங்களாக ராதாரவி தலைவர் பதவியில் நீடித்து வருகிறார். அவர் மற்றவர்களுக்கு வழிவிட வேண்டும் என்றுதான் கேட்டோம். முதலில் நான் தலைவரானதை வரவேற்பதாகக் கூறியவர், பின்பு ஏனோ தம் முடிவை மாற்றிக் கொண்டார். இப்போது திரைத்துறையில் இதர பிரிவினருக்கும் இருப்பது போல் நடிகர்களுக்கும் தனி யூனியன் வேண்டும் என்பதே எங்கள் விருப்பம். இதையும் நாங்கள் பல காலமாக ராதாரவியிடம் வலியுறுத்தி வந்துள்ளோம். ஏனெனில் சாதாரண நிலையிலுள்ள பல நடிகர்கள் - துணை நடிகர் வேஷம் போடுபவர்கள் - ரொம்ப பாதுகாப்பில்லாத நிலையில் உள்ளனர். அதுவும் குறிப்பாக ஆரம்ப காலம் தொட்டு நாடகத் துறையிலிருந்து திரைத் துறைக்கு வந்த இந்த நடிகர்களுக்குப் போதுமான மரியாதை இல்லாமலிருக்கிறது. தனியாக யூனியன் இருந்தால் எல்லா வகையிலும் சிறந்தது என்றுதான் இதை அமைத்துள்ளோம்" என்றார்.

வளவே. யூனியன் அமைவதுதான் உரிமைக்கும், கௌரவத்திற்கும் வழிவகுக்கும். அதனால்தான் சுமார் இருபதாண்டு காலத்திற்கும் மேலாக நடிகர்களுக்கென்று தனி யூனியன் வேண்டுமென்று கேட்டு வருகிறோம்."

அப்படியானால் ராதா ரவி தலைமையிலான நடிகர் சங்கம் என்பது யூனியன் இல்லையா?

"நடிகர் சங்கம் என்பது ஒரு பொழுது போக்கு அமைப்புதானே...? அது ஒரு யூனியனாகச் செயல்பட்டிருந்தால்... நடிகர்கள் தங்கள் வருமானத்தின் ஒரு சதவிகிதத்தையேனும் சந்தாவாகச் செலுத்தியிருப்பார்



• விஜயகுமார்

# நடிகர் சங்கத்தில் பிளவு; காரணம் என்ன?

இன்னும் திரைப்படங்களில் நடித்துவரும் பழம்பெரும் நாடக நடிகர்களான எஸ். என். கிருஷ்ணன், எம்.எம். ராமச்சந்திரன், மருதநாயகம், பாலதாசன், ரத்தினகுமார், மாணிக்கராஜ், ஜெயபால், எஸ். சண்முகம் போன்ற பலரையும் பார்த்துப் பேசினோம்.

"எங்களுக்கு நாளொன்றுக்கு நூறு, நூத்தம்பதுதான் சம்பளம். அதுவும் நிரந்தரமல்ல. சில சமயம் இந்தப் பணத்தைக் கூட தயாரிப்பாளர்கள் தராமல் ஏமாற்றுவதுண்டு. நடிகர் சங்கத்தில் நாங்கள் முறையிட்டுப் பார்த்தோம்; பலனில்லை. அது ஒரு அசோசியேஷன். அவ்கள். இந்த நிலைமையே வந்திருக்காது" என்றார் ஒரு மூத்த திரைப்படக்கலைஞர்.

கே. சுப்பிரமணியம், டி.கே. சண்முகம்... போன்ற அந்தக் காலத்து முன்னணிக் கலைஞர்கள் 1952-ல் 'தென்னிந்திய நடிகர் சங்கம்' என்று நான்கு மொழி பேசும் கலைஞர்களுக்கென்று ஆரம்பித்ததுதான் இந்த நடிகர் சங்கம். கலைவாணர், எஸ்.எஸ். வாசன், எம்.ஜி.ஆர். போன்றோரின் முன் முயற்சியால் தி.நகர் ஹபிபுல்லா சாலையில் பதினெட்டு கிரவுண்ட் நிலம் நடிகர் சங்கத்துக்கென்று வாங்கப்பட்டது. முதலில் ஆண்டுக்கு ஒரு

முறையும் பிறகு தலைமைப் பொறுப்பு மாறியும் வந்தது. 1971-ல் சிவாஜி கணேசன் பொறுப்பேற்ற போது ஸ்டேட் பாங்கில் ரூ. 18 இலட்சம் கடன் பெற்றும் தமிழக அரசின் உதவி நிதியாக ரூ 5 இலட்சம் பெற்றும் நடிகர் சங்க கட்டடம் உருவானது. கட்டடம் கட்டி முடிக்கும் வரை தலைவர் பொறுப்பில் தானும், செயலாளராக மேஜர் சுந்தரராஜனும், பொருளாளராக வி.கே. ராமசாமியும் தொடர வேண்டுமெனவும், தேர்தல் நடத்தக் கூடாது என்றும் சிவாஜி விரும்ப, அதை எம்.ஜி.ஆரும் ஏற்றுக் கொண்டார். சுமார் பத்தாண்டு காலம் இந்த ஏற்பாடு தொடர்ந்தது. 'வாங்கிய கடனை அடைக்கும் வரையிலும் தேர்தல் நடத்தக் கூடாது' என்று சிவாஜி மேலும் நிபந்தனை போட்டார். ஆனாலும் 1981-ல் தேர்தல் நடத்தப்பட்டு எம்ஜிஆரின் விருப்பப்படி எஸ்எஸ்ஆர். தலைவரானார். அதன் பிறகு 86-ல் ராதாரவி தலைவரானார். ஆனால் இன்று வரை கடன் அடைக்கப்படவில்லை என்பதோடு, வட்டி கூட கட்டாமல், அது வளர்ந்து, மொத்தக் கடன் ரூ. 245 இலட்சம் என்ற நிலை யைத் தொட்டுள்ளது!



• ராதா ரவி

பிற சினிமா டெக்னீஷியன்கள் யூனியன் அமைத்துச் செயல்பட ஆரம்பித்தபோது சாதாரண நிலையிலிருந்த பல நடிகர்களும் தங்களுக்கும் சங்கம் உருவாக வேண்டுமென்று துடியாய்த் துடித்தனர். பழம்பெரும் நாடகத் திரைப்பட நடிகரான சகஸ்ரநாமம் தலைமையில் அப்படியொரு யூனியன் 1968-ல் உருவாயிற்று.

ஆனால் நடிகர்களுக்கான இந்த யூனியனை அன்று முன்னணியில் இருந்த கதாநாயக நடிகர்கள் துளியும் விரும்பவில்லை. காரணம், "இந்த யூனியன் என்பதெல்லாம் சாதாரண தொழிலாளிகளுக்குத்தானே? நமக்கெதற்கு? எங்கள் கண் அசைவுகளுக்கு திரைப்படத் தயாரிப்பாளர்கள் காத்துக் கிடக்கிறார்கள். நாங்கள் விரல் நீட்டிய நபர்களை டைரக்டர்களாகப் போடவும், நடிகர்களாகப் போடவும் சித்தமாயிருக்கிறார்கள். எனவே சங்கம் என்பதெல்லாம் அந்தஸ்த்திற்கு உகந்ததல்ல.." என்று கருதினர். மேலும், "சங்கமென்றால் கதாநாயகன், கதாநாயகி, வில்லன் போன்ற கதாபாத்திரங்களுக்கு இவ்வளவு ஊதியம் என்று நிர்ணயிக்கப்பட வேண்டும். இப்படி நிர்ணயிக்கப்படும் சம்பளம் தங்களுக்குப் போதுமானதல்ல. இப்படி வெளிப்படையாகச் சம்பளம் நிர்ணயிக்கப்படுவது வருமான வரி பிரச்னைக்கும் வழிவகுக்கும்" என்றெல்லாம் யோசித்து, தங்கள் சொந்த நலன் கருதி இந்தக் கதாநாயகர்கள் அந்த யூனியனுக்கு ஒத்துழைக்க மறுத்ததைத் தொடர்ந்து அந்த யூனியன் செயலிழந்து கலைக்கப்பட்டு விட்டது.

அவ்வப்போது பிரச்னைகள் எழ, யூனியனுக்கான அவசியம் மீண்டும் மீண்டும் உணரப்பட்டது. சில நடிகர்கள் ஷூட்டிங் ஸ்பாட்டில் அவமானப்பட நேர்ந்தபோது, கமலஹாசன் அதைக் கண்டு மனம் பதறினார். 'என்னங்கண்ணே நீங்கள்லாம் எவ்வளவு காலமாக நடித்துக் கொண்டிருக்கும் சீனியர்ஸ்! உங்களுக்கு இந்த நிலைமையா? ஏன் நீங்கள் இதை நடிகர் சங்கத் தலைவர் ராதாரவியிடம் சொல்லி தீர்வு காணலாமே" என்றார்.

"பலமுறை சொல்லிப் பார்த்திருக்கோம். பலனில்லை. நமக்கென்று தனி யூனியன் இல்லையே.." என்று அவர்கள் பதில் சொல்லியிருக்கிறார்கள்.

ஒருவழியாக கமலஹாசன் முன்முயற்சி எடுக்க, மற்ற முன்னணி நடிகர்களும் முழு மனத்தோடு ஒத்துழைக்க, ஏற்கெனவே நல்ல தம்பி என்ற நாடக நடிகர் 'சினி ஆர்டிஸ்ட் யூனியன்' என்ற ஒன்றைத் துவங்கி சிரமப்பட்டு, ஆதரவு இல்லாமல் நடத்தி வருவதை அறிந்து, அதையே அடிப்படையாகப் பயன்படுத்திக் கொள்ளும் முடிவுக்கு வந்தனர்.

இந்த முடிவுக்கு ராதாரவியின் ஆட்சேபணை என்ன..? அவரையே பார்த்துக் கேட்டோம்: "தி. நகர் பாலாஜி கல்யாண மண்டபத்தில் சினி ஆர்டிஸ்ட் யூனியன் கூடுகிறது. இன்னின்ன நடிகர்கள் பங்கேற்கிறார்கள் என்று தினசரிகளில் செய்தி வருகிறது. அதில் என் பெயர் மிஸ்ஸிங். நானும் நடிகன்தானே. என்னையும் கலந்து பேசி, அல்லது நடிகர் சங்க பொதுக் குழுவில் வைத்துப் பேசி முடிவுக்கு வந்திருக்கலாமே. ஒரு முடிவு எடுத்த பின்பு, என்னை வந்து வீட்டில் சந்தித்து, என்னையும் வந்து கலந்து கொள்ளும்படி அழைத்தார்கள். அதுவும் ஒப்புக்காக.." என்றார்.




## லியாண்டர் பெய்ஸுக்கு என்ன ஆயிற்று?

சென்னையில் நடந்த கோல்டு பிளேக் டென்னிஸ் பந்தயங்களைப் படமெடுக்கப் போன புகைப்படக்காரர்களைப் படாதபாடு படுத்தி விட்டார்களாம் நிர்வாகிகள். பாஸ் கொடுப்பதிலேயே சிக்கல் என்பது ஒருபுறம் இருக்க, மைதானத்துக்குள் ஈசான மூலையில் இடம் ஒதுக்கி, இங்கிருந்து மட்டும்தான் படம் எடுக்க வேண்டும்; அங்கே இங்கே போகக் கூடாது என்று ஆர்டர் போட்டு விட்டிருக்கிறார்கள். சிறப்பாகப் படமெடுக்க லைட்டிங்கும் சரியானபடி இல்லை. வேகாத வெயிலில் இது வேறு சோதனையா என்று குமுறி, புகார் செய்தும் பலனில்லை. "செய்தி சேகரிக்க வந்த நிருபர்களுக்கு மட்டும் ஏஸி ரூமில் டிவி வைத்து, ஃபிரிஜ்ஜில் கொக்ககோலா, சாப்பாடு என்று ராஜ உபசாரம். போட்டோகிராபர்களை மட்டும் சீந்தநாதியில்லை. படமெடுத்துக் களைத்திருக்கும்போது சிறிது நேரம் உட்கார ஒரு நாற்காலி கூடக் கிடையாது! இந்தியாவில் நடக்கிற ஒரு முக்கியமான மேட்சில் இந்திய போட்டோகிராபர்களை இப்படியெல்லாம் புறக்கணிப்பது என்ன நியாயம்!" என்று புலம்பினார் மூத்த போட்டோகிராபர், சாரி.

இது இப்படியிருக்க, விழுந்து விழுந்து தோல்விகண்ட இந்திய வீரர்களுக்கு(ம்) லட்சக்கணக்கில் பரிசுத் தொகை அளிக்கப்பட்டிருக்கிறது!

"டென்னிஸ் பணக்கார விளையாட்டுத்தான். ஓரளவுக்குப் பெயர் வாங்கி விடும் வரைதான் சிரமம். அதற்குப் பின், வெற்றி – தோல்விகள் வருமானத்தைப் பாதிக்காது!" என்ற சாரி, "முதல் சில ரவுண்டுகளிலேயே தோல்வி கண்ட லியாண்டர் பெய்ஸ், மேட்ச் நடந்த அன்றுதான் சென்னைக்கே வந்தார் என்பதால் அவர் ஆடிய ஆட்டம் டென்னிஸ் தெரிந்தவர்களால் சகிக்க முடியாதது. அத்தனை மோசம். பிராக்டிஸே இல்லாமல் ஆடினார்" என்கிறார் சாரி.

– உல்லாசப் பறவை

படம் : சாரி

---

"அப்போது யூனியனில் உங்களுக்கென்று ஒரு பதவி வேண்டும் என்று நீங்கள் கேட்டதாக விஜயகுமார் கூறுகிறாரே?"

"சத்தியமாக நான் அப்படிக் கேட்கவில்லை. 'சமரசம் பேச வந்தீர்களா? என்னை ஒழித்துக் கட்ட வந்தீர்களா' என்றுதான் கேட்டேன்."

"இராயபுரம் பகுதி மீனவ இளைஞர்கள், ஜிம்பாய்ஸ் இவர்களையெல்லாம் நடிகர் சங்கத்தில் உங்கள் ஆதரவு ஓட்டுக்காக நீங்கள் சேர்த்துள்ளதாக ஒரு குற்றச்சாட்டு உள்ளதே?"

"மீனவர்கள் நடிகர்கள் இல்லையா? ஜிம் பாய்ஸ், இராயபுரம் பகுதியில் இருப்பவர்கள் நடிகர்கள் இல்லையா? பிறக்கும்போதே எல்லாரும் நடிகர்களா என்ன? அவர்களும் ஒரு சில காட்சிகளில் வந்தவர்கள்தான். கேமிரா முன்னால் நின்றாலே அவன் நடிகன்தான்."

"ஒரு நடிகர் இறந்தபோது சத்யராஜ் கொடுத்த ஒரு இலட்ச ரூபாயில் நீங்கள் 30 ஆயிரம் எடுத்துக் கொண்டு 70,000 கொடுத்தீர்களாமே?"

"அவர்கள் கொடுத்ததே 70,000தான். இதை அவர்கள் நிரூபித்தால் நான் ஒரு வருஷம் நடிப்புத் தொழிலையே விட்டு விடுகிறேன். நிரூபிக்காவிட்டால் அவர்கள் விடத் தயாரா? சரி நான் ஒன்று கேட்கிறேன். இவ்வளவு நாள் கம்மாயிருந்தவர்களுக்கு இன்று மட்டும் என்ன புது அக்கறை. கடனில் ஒரு கோடி ரூபாய் அடைக்கிறேன் என்று கலைஞர் முன்வந்ததால்தானே? நடிகர் சங்கம் நல்ல வளர்ச்சி அடைந்துள்ளது. நல்ல வருமானமும் அதற்குண்டு. இத்தனைக்கும் நான்தான் காரணம் இன்னிக்கு இதைக் கைப்பற்றத் துடிப்பவர்கள் இத்தனை நாள் என்ன செய்தார்கள்?" என்றார்.

ராதாரவியின் இந்தக் கேள்விக்கான பதிலை விஜயகுமாரிடமே கேட்டோம். யூனியன் வேண்டுமென்ற எண்ணம் இருந்தது. அவரிடம் தெரிவித்தபோதெல்லாம் அவர் அக்கறை காட்டாததால் நாங்கள் முன்முயற்சி எடுத்தோம். கலைஞரிடம் அன்று முழு கடன் தொகையையும் தெரிவித்திருந்தால் அரசே முழுக்கடனையும் அடைத்திருக்கும். முதல்வர் கொடுத்த ஒரு கோடி ரூபாய் தவிர்த்து, மீதி ஒரு கோடியே நாற்பத்தைந்து இலட்சத்தை ஒரே வருடத்தில் கலைநிகழ்ச்சிகள் நடத்தியாவது அடைத்துக் காட்டுவோம். இது உறுதி. இத்தனை நாள் அவர் தலைமை சரியில்லை என்பதால் விலகி இருந்தோம். இப்போது எங்களுக்கு இதுவரையிலில்லாத புதுமலர்ச்சியும், ஒற்றுமையும் தோன்றியுள்ளது" என்றார்.

"நீங்களெல்லாம் கோடி, கோடியாக சம்பளம் பெறும் நடிகர்கள். ஏன் நீங்களாகவே முழுக் கடனையும் அடைக்கக் கூடாது?"

"நீங்கள் நினைப்பது மாதிரி பல இலட்சங்களை நடிகர் சங்கத்திற்கு கொடுக்கும் நிலையில் நாங்களில்லை" என்றார் விஜயகுமார்!

— சாவித்திரி கண்ணன்

படங்கள் : யோகா



"கத்தியை பிடிச்சா வெட்டும்.
கரண்டியை தொட்டா சுடும் என்று தெரியுது.
ஆனா கண்ட இடத்துக்கு போனா
**எய்ட்ஸ்** வருமுன்னு தெரியாதா".

இது இவனுக்கு மட்டுமில்லை.
உங்களுக்கும் தான்.

**எச்சரிக்கையுடன் இருப்போம்!**
**வருமுன் காப்போம்!!**

**தமிழ்நாடு எய்ட்ஸ்**
**கட்டுப்பாட்டு அமைப்பு,**
417, பாந்தியன் ரோடு, எழும்பூர்,
சென்னை - 600 008.
போன் : 8255467 / 8255261 / 8254917

மேலும் எங்களை அணுக: 24 மணிநேர ஹாட்லைன் தொலைபேசி எண்:
**8256882 / 8256864**

TNSACS/1006/97/ET

# "I found relief from the pain of Arthritis, thanks to TABE"



"I was suffering from very severe pain in my left knee. I was unable to climb downstairs from my house on the 2nd floor and my travelling was also affected. In October '93, I approached **TABE** for treatment. I regularly applied the poultice and after 20 days I found there was marvellous improvement. **Now even though it is 2 years since I stopped the treatment for my left knee, there is no pain.** That is why when I felt pain in the other knee a few months ago, I immediately thought of approaching **TABE** and getting it treated also. After the treatment I am alright now. I can climb up and downstairs without any difficulty."
**"That is why I now recommend TABE to people I know."**

**'Nambungal' Narayanan**

***(Renowned Numerologist)*** *M.I.G., B-5, Ashok Nagar, Third Avenue, Opp. Pudur High School, Madras - 600 083. Ph. Nos. 4824054/4824933.*

We provide a comprehensive Treatment Programme with **EXTERNAL** application of time-tested **AYURVEDIC** poultices for **ARTHRITIS, SPONDYLITIS, FROZEN SHOULDER, BACK ACHE** and **CALCANEAL SPUR** under the supervision of dedicated Ayurvedic and Allopathic Doctors.

★ **TABE CARE CLINICS (P) LIMITED** recognise that no two people are alike, therefore, treatment and benefit may vary in terms of time and result.

TABE/330A

TABE CARE CLINICS (P) LIMITED

**CALL NOW FOR APPOINTMENTS - TEL : 8553772**

1, Sreerangam Avenue, 53, Pantheon Road, Egmore, Madras - 8.

OPEN 9.00 A.M. - 7.00 P.M. - 7 DAYS A WEEK. ALL MAJOR CREDIT CARDS ACCEPTED.

**TABE TREATMENT CLINICS IS NOW TABE CARE CLINICS (P) LIMITED.**




தஞ்சை மாவட்டம், திருவிடைமருதூர் வட்டம், மகாராஜபுரம்
கிராமத்தில் எழுந்தருளியுள்ள
ஸ்ரீ விஷ்ணு துர்க்கா பரமேஸ்வரி ஆலய

# திருப்பணி கைங்கர்யப் பத்திரிகை

தெய்வத் தமிழ்நாட்டில் தஞ்சை தரணியில் காவிரி நதியின் வட கரையில் அமைந்ததும் மூன்று கோடி மந்திரதேவதைகளுக்கு மோக்ஷம் கிடைத்த திருத்தலமாக விளங்கும் ஸ்ரீ திரிபுரசுந்தரி அம்பாள் ஸமேத ஸ்ரீ திருக்கோடீஸ்வரர் கோயில்கொண்ட திருக்கோடிக்காவல் க்ஷேத்திரத்திற்கு கிழக்காகவும், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்துக்கு பாஷ்யம் எழுதி ஸ்ரீ பாஸ்கரராய மஹானால் பிரதிஷ்டை செய்யப் பட்ட ஸ்ரீ பாஸ்கரேசுவரர் கோயிலுக்கு மேற்காகவும், ஸ்ரீ துர்வாச முனிவரால் பூஜித்து வழிபட்ட ஸ்ரீ விஷ்ணு துர்க்கை அம்மன் ஆலயம் திருப்பணி ஆரம்பிக்கப் பட்டுள்ளது.

அனைத்து மடாதிபதிகளின் அருளாசியுடனும், ஆஸ்தீக அன்பர்களின் ஒத்துழைப்புடனும் திருப்பணி ஆரம்பிக்கப்பட்டு நடைபெற்று வருகிறது. ஆஸ்தீக அன்பர்கள் அனைவரும் வரப் பிரசாதியாய் விளங்கும் எல்லாம்வல்ல ஸ்ரீ விஷ்ணு துர்க்கா பரமேஸ்வரியின் அருளைப் பெற்று வளமுடனும், நலமுடனும் வாழ இக்கைங்கர்யத்தில் பங்குகொண்டு திருவருள் பெற்றுய்யுமாறு பணிவன்போடு கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்

**மகாராஜபுரம் & பாஸ்கரராஜபுரம் கிராமவாசிகள்.**

---

*நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி :*

**ஸ்ரீ G. ராமச்சந்திரன், பாஸ்கரராஜபுரம், திருவாலங்காடு (P.O.) (வழி) மயிலாடுதுறை R.M.S. - PIN. 609 810.**

# நடிகைன்னா படிக்கக் கூடாதா?

## — இந்துவின் கோபம்!



பத்துப் பன்னிரண்டு படங்களுக்கு மேல் கைவசம் இருந்தாலும் ஒன்றிரண்டு படங்களைத் தவிர மற்ற எல்லாவற்றிலுமே இரண்டாவது ஹீரோயின் பாத்திரம்தான் இந்துவுக்கு. இது வருத்தமாக இல்லையா?

"வருத்தமே இல்லை!" என்று வருத்தத்தோடு சொல்லவில்லை இந்து. "அதனால் என்ன! எந்த கேரக்டராக இருந்தாலும் மக்கள் மனத்தில் பதிகிற மாதிரி நடிக்க வேண்டும் என்பதுதான் எனது லட்சியம். காதல் கோட்டையில் ஹீரோயினின் தோழிதான் நான். இருந்தாலும் ரசிகர்கள் மனத்தில் இடம்பிடித்தேன். பாரதி கண்ணம்மாவில் பார்த்திபன் சாரின் தங்கை நான். கறுப்பாகத் தோற்றம் தருகிற அந்த மேக்-அப்பைப் போட்டுக் கொண்டு என்னை நானே கண்ணாடியில் பார்த்துக் கொண்ட போது ஒரு விநாடி திகைப்பாகத்தான் இருந்தது. ஆனாலும் அந்தக் கேரக்டர் ஆழமான கேரக்டர் என்பதால் என் நடிப்பு மனத்தில் நிற்கும் என்று நம்பினேன். அதுவேதான் நடந்தது!" என்று சந்தோஷத்தோடு கூறுகிறார்.

அதெல்லாம் சரிதான்! இது போல் இரண்டாவது ஹீரோயினாகவே நடித்துக் கொண்டிருந்தால் ரசிகர்கள் மனத்திலும் இரண்டாவது ஹீரோயின் என்கிற இமேஜ் பதிந்து விடாதா? இதைத் தவிடுபொடியாக்குகிற மாதிரி வழக்கமாகப் பிறர் செய்வது போல் கொஞ்சமாவது கவர்ச்சி காட்டுகிற முயற்சி ஏதும் மேற்கொள்ளவில்லையா இந்து?

"கவர்ச்சியா? மூச்சுக் காட்டக் கூடாது!" என்கிறார் வெடுக்கென்று. "எனக்கு ரொம்ப ரொம்பப் பிடித்த நடிகை ரேவதிதான். காரணம் அவர் எந்தப் படத்திலும் கவர்ச்சி காட்டாமலே நடித்து ரசிகர்கள் மனத்தில் இடம்பிடித்ததுதான். அப்புறம் ஊர்வசி. திறமைதான் காலகாலத்துக்கும் நிற்கும்!" என்று அடித்துச் சொல்லும் இந்து, முதன் முதலில் நடித்தது கதாநாயகியாகத்தான்.

"இளவரசி என்னும் படத்தில் நடித்தேன். ஓடவில்லை. அதனால் உடனடியாக எனக்கு எந்த சினிமா வாய்ப்பும் வராமல் போனது. ஆனாலும் மனம் தளரவில்லை. குச்சுப்புடி கற்றுக் கொண்டேன். விளம்பரப் படங்கள், டெலிவிஷன் சீரியல்கள் என்று நடிக்கத் தொடங்கினேன். பாரதிராஜா சாரின் கருத்தம்மா படத்தில் நானும் நடித்திருக்க வேண்டியது. அந்தக் கேரக்டருக்கு என் வயது ரொம்பவும் குறைவாக இருந்ததால் அந்த வாய்ப்பு ராஜஸ்ரீக்குப் போனது. இப்போது அவரது தயாரிப்பான 'குரு பார்வை'யில் நடிக்கிறேன்!" என்று சொல்லும் இந்துவுக்கு இப்போதைய இன்னொரு சந்தோஷம் இவர் தெலுங்கில் ஹீரோயினாக நடித்த 'குர்ரால ராஜ்ஜியம்' (இளைஞர்களின் ராஜ்யம்) நன்றாக ஓடிக் கொண்டிருப்பது. கூடுதல் சந்தோஷம், படங்களில் சொந்தக் குரலிலேயே பேசி நடிக்கிற வெகுசில நடிகைகளில் தாமும் ஒருவராக இருப்பது.

'எமக்குத் தொழில் சினிமா' என்று முழுமையாக வந்து விட்டாலும் படிப்பையும் விட்டு விடாமல் அஞ்சல் வழியில் பட்டம் (ஆங்கில இலக்கியம்) வாங்குவதற்காக சென்னைப் பல்கலைக் கழகத்துக்கு அப்ளிகேஷன் போட்டிருக்கிறார் இந்து. 'இதெல்லாம் தேவைதானா?' என்கிற மாதிரி நாம் பார்த்தபோது, "என்ன இப்படிப் பார்க்கறீங்க. நடிகைன்னா படிக்கக் கூடாதா? எந்தத் தொழிலாக இருந்தாலும் ஆணுக்கும் சரி, பெண்ணுக்கும் சரி, படிப்பு ரொம்ப ரொம்ப அவசியம்ங்க!" என்றார் கொஞ்சம் கோபமாகவே!

— பிரின்ஸ்

அட்டை வண்ணப்படம் : **பிரவீண்குமார்**

## மாம்பழம் டஜன் 300 ரூபாய்!

லாரி ஸ்டிரைக்கால் சென்னை போன்ற நகரங்களில் எப்படியோ, மும்பைவாசிகள் கடுமையாகப் பாதிக்கப்பட்டு விட்டார்கள். இரண்டு ரூபாய்க்கு விற்ற கீரைக்கட்டு எட்டு ரூபாய். கிலோ 25 ரூபாய்க்குக் குறைவாக எந்தக் காய்கறியும் கிடையாது. வாஷி (நியூ மும்பை) மார்க்கெட்டில் பழம் என்றால் என்ன என்று கேட்கும் நிலை. கிராஃபோர்ட் (மும்பை) மார்க்கெட்டில் மலை' போல் குவிந்திருக்கும் மாம்பழங்களின் விலையும் மலை உச்சியில் (டஜன் 200 – 300 ரூபாய்!)! இத்தனைக்கும் பிரைவேட் டெம்போக்கள், பஸ்கள் மூலம் தேவையான பழம், காய்கறிகள் வந்து சேர்ந்தாலும், ஆப்பிள் விலை ஏற்றத்துக்கு ஆப்பிரிக்காவில் மழை பெய்யவில்லை என்று காரணம் சொல்லி




சந்தடி சாக்கில் சம்பா தித்துக் கொள்வது நம்ம வர்களுக்குக் கைவந்த கலை ஆயிற்றே!

## முழக்கம் மறந்தவர்!...

"மகாராஷ்டிரம் போன்ற பாதுகாப்பான மாநிலம் இந்தியா எங்கிலுமே இல்லை!" என்று சவால் விட்டிருக்கிறார் பால்தாக்கரே! "நாங்கள் அரசுப் பொறுப்பேற்றால் ஒரு முஸ்லிமைக் கூட உயிரோடு விடமாட்டோம்' என முழங்கிக் கொண்டிருந்தார்கள். ஆனால் இன்று, முஸ்லிம்கள் கோலோச்சும் பெண்டி பஜார், பெஹ்ரம்பாடா போன்ற பகுதிகளில் எல்லோரும் சிவசேனை ஆதரவாளர்கள். "நாங்கள் எதிர்ப்பது, இந்தியாவில் இருந்து கொண்டு பாகிஸ்தானுக்கு ஜால்ரா அடிக்கும் தேசத் துரோகிகளைத்தான். கலவரங்களுக்கு வித்திட்டவர்கள் காங்கிரஸ்காரர்கள்; அதை விசிறியவர்கள் மீடியாக்காரர்கள்!" எனப் பிளேட்டைத் திருப்பி விட்டார் தாக்கரே!

## தப்பான 'கரெக்ட்' விடைகள்!

இந்த ஆண்டு HSC, SSLC தேர்வுகளில் கணக்குப் பரீட்சையில் முறையே 20, 10 மதிப்பெண்களுக்கான வினாக்களை ராமானுஜமோ, சகுந்தலா தேவியோ வந்தாலும் விடை காண முடியாத விதத்தில் அமைத்திருந்தார்கள்! பேப்பரை 'ஸெட்' பண்ணியவர்களுக்கே விடைகாணுவதில் குழப்பம்! திருத்துபவர்களுக்கு அளிக்கப்பட்ட மாதிரி பதில்களிலேயே ஏகப்பட்ட திருத்தங்கள்! இந்த அழகில், கேள்வித் தாள்களை இனி அரசு கம்ப்யூட்டரைஸ் செய்யப் போகிறதாம்!

## காதலர்க்குத் தடா!

ஏற்கெனவே இடநெருக்கடியால் திணறிக் கொண்டிருக்கும் மும்பைக் காதலர்களுக்குத் தனியிடம் என்பதே அரிதாகிப்

போய், அவர்கள் பாட்டுக்கு சிறுவர் பூங்காக்களுக்குள்ளும் நுழைந்து (வழிந்து?) குழந்தைகளுடன் வரும் பெற்றோரை நெளிய வைத்துக் கொண்டிருந்தனர். கார்ப்பரேஷன் விழித் தெழுந்து, 'இனி தனியாக வரும் ஜோடிகளுக்குச் சிறுவர் பூங்காக்களில் அனுமதி கிடையாது' என தடைவிதித்து விட் டார்கள்! உத்தரவை அமுலாக்குவதில் கறாராயிருந்த ஒரு வாட்ச்மேன், அறுபது வயதைக் கடந்த ஒரு கிழ தம்பதியைக் கூட தாதரிலுள்ள ஒரு குழந்தைகள் பூங்காவிற்குள் அனுமதிக்க மறுத்து விட்டார்!

## இரண்டு மணி நேரத்துக்கு ஒரு டிரான்ஸ்ஃபர்!

சீனியர் இன்ஸ்பெக்டரான உதய் ஷிண்டே, தாதரி லிருந்து, புகழ்பெற்ற M.R.A. மார்க் போலீஸ் ஸ்டேஷனின் தலைமைப் பொறுப்புக்கு மாற்றப்பட, பதவி ஏற்ற இரண்டா வது மணி நேரத்தில், திரும்பவும் தாதருக்கே மாற்றப்பட்டார்! போலீஸ் கமிஷனர் சுபாஷ் மல்ஹோத்ரா இந்தக் குளறுபடி களுக்கு ஏதோ "டெக்னிகல்" பிரச்னைகளைக் காரணம் காட்ட, "டெக்னிகல்" என்ற சொல்லுக்கு விஷயமறிந்தவர்கள் இப்படி விளக்கம் அளிக்கின்றனர் - M.R.A. மார்க் ஒரு தங்கச் சுரங்கம். மும்பையின் முக்கிய வியாபார ஸ்தலம். எனவே, இந்தப் பகுதியில், ஒரு கம்ப்ளெயிண்டை 'ரெஜிஸ் தர்' செய்வதற்கே எக்கச்சக்கமாக "லஞ்சி"க்க வேண் டும். பெரிய இடத்து சிபாரிசு பெற்ற பிஸ்தாக்க ளெல்லாம் இந்த இடத்துக்கு மாற்றலாகி வர தவம் கிடக்கையில், காத்திருந்தவன் பதவியை நேற்று வந்த ஷிண்டே பறிப்பதா என்ற குமைச்சலாம் சம் பந்தப்பட்ட அதிகாரிக்கு!

## வலுக்குமா? வலிக்குமா?

பதவிக் காலத்தில் இயற்கை எய்தும் அரசு ஊழியர் களின் மகனும் மகளும்தானே இந்நாள்வரை கருணை அடிப் படையில் வேலை வாய்ப்பைப் பெற்று வந்தார்கள்! இனி மருமகளுக்கும் அந்த உரிமை உண்டு! மாமனார் இறந்தபின் மருமகளுக்கு அந்த வேலை கிடைக்கும் என அறிவித்திருக் கிறார் முதல்வர் மனோஹர் ஜோஷி. இதனால், மாமியார் மருமகள் உறவு வலுக்குமா? வலிக்குமா? தெரியவில்லை!

## ஒரு கை ஓசை!

ஒரே ஒரு கையுடன் வாழ்க்கையில் போராடிக் கொண் டிருக்கும் 'டாடா ஜம்புல்கர்' என்ற போர்ட்டரைப் பற்றி ஆங்கில தினசரியொன்று செய்தி வெளியிட, ஹவுஸ் ஓய்ஃபி லிருந்து ஹவுஸ் சர்ஜன் வரை, பிஸினஸ் கம்பெனிகளிலிருந்து சமூக சேவை இயக்கங்கள் வரை உதவிக்கரம் நீட்டின. தன்மானமிக்க ஜம்புல்கர், தனக்கு வேலை வாய்ப்பும், பிள் ளைக்கு உயர்கல்வியும் அளிக்க முன்வருபவர்களின் உதவியை மட்டுமே ஏற்க இசைந்திருக்கிறார். இரக்கம் வேறு, இரத்தல் வேறுதான்!

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீராஜ்**

## யாரைப் போல் பிறக்க ஆசை?

**குற்றாலீஸ்வரன்**



"ஒரே வருடத்தில் ஆறு ஜலசந்திகளை நீந்திக் கடந்து, கின்னஸ் புத்தகத்தில் பெருமைமிகு இடம்பெற்றிருக்கும் குற்றாலீஸ்வரனுக்கு, மறுபிறப்பில், மீண்டும் குற்றாலீஸ்வரனாகவே பிறக்க வேண்டும் என்று ஆசை!

என்ன காரணம்?

"இளம்வயது முதலே என் திறமையைக் கண்டுணர்ந்து போதிய ஊக்கமும், ஆதரவும் தந்து, நீச்சல் துறையில் சாதனைபுரியக் காரணமானவர்கள் என் பெற்றோர்தான். எனவே, மீண்டும் அவர்களுக்கே, நான் நானாகவே வந்து பிறக்க வேண்டும். அதோடு இந்தக் குற்றாலீஸ்வரன் புரிந்த சாதனைகளை, அந்தக் குற்றாலீஸ்வரன் முறியடித்துப் புதிய சாதனைகளும் புரியவேண்டும்!"

சந்திப்பு : மௌனி

சென்ற வாரம்...

பேஸ்பால் விளையாடச் சென்றிருந்த ஏழு வயது மகன் ஆண்ட்ருவை அழைத்துக் கொண்டு வீடு திரும்பிக் கொண்டிருக்கிறாள் இளம் குடும்பத் தலைவியான பேஜ். அவளுடைய பதினைந்து வயது மகளான ஆலிஸன் தன் சிநேகிதி க்ளோவின் வீட்டுக்குப் போவதாகச் சொல்கிறாள். க்ளோவின் தந்தை தோரணன் அவர்களை டின்னருக்கு அழைத்துப் போவதாகச் சொல்லியிருக்கிறாள் என்று கூறுகிறாள். இரவு பதினொன்றரை மணிக்குள் வீடு திரும்பிட வேண்டுமென்ற நிபந்தனையுடன் அவளுக்கு அனுமதி கொடுக்கிறாள் பேஜ். கைநிறையச் சம்பாதிக்கும் கண் நிறைந்த கணவன் பிராட், அழகும் புத்திசாலித்தனமும் உள்ள குழந்தைகள். வேறென்ன வேண்டும் என்று உள்ளம் மகிழ்கிறாள் பேஜ். ஒரே ராத்திரியில் வாழ்க்கை தலைகீழாக மாறப் போவது அவளுக்கு அப்போது தெரியாது.

# 11:29

## 2

மூலம் : டேனியல் ஸ்டீல்

மகளையே பார்த்துக் கொண்டு நின்றிருந்த பேஜுக்கு பிறகு தான் கணவன் ஞாபகம் வந்தது.

பிராட் என்னதான் பண்ணிக் கொண்டிருக்கிறார்? குரலையே காணோமே?

அவனுடைய அறையை நோக்கி நடந்தாள். பிராட் தன் பெட்டியில் துணிமணிகளை எடுத்து வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டதும் ஏமாற்றமாக இருந்தது. வெளியூர்ப் பயணம்! ஞாயிற்றுக்கிழமைகளில்தான் பிராட் வெளியூர் புறப்படுவது வழக்கம். இந்த வாரம் சனிக்கிழமையே கிளம்புகிறாரே? ஒரு பெருமூச்சுடன் நின்றாள்.

கணவனைப் பார்க்கும் ஒவ்வொரு முறையும் இப்போது தான் முதல் தடவை பார்க்கிற மாதிரி, அவனுடைய அழகு அவளை அசத்தும். இன்றும் அப்படித்தான்.

ஆறடி உயரம், செதுக்கிய சிற்பம் மாதிரி முகவெட்டு; குட்டையாக வெட்டப்பட்ட கறுத்த முடி; பெரிய கண்கள்; அகன்ற தோள்கள்; குறுகிய இடை; நீண்ட கால்கள்; இத்தனையுடன் கூட அந்தக் கவர்ச்சியான புன்னகை! அவன் புன்னகை செய்தால் போதும்; பேஜ் பனிக்கட்டியாய் உருகி விடுவாள்.

இருந்தாலும் கூடச் சில சமயங்களில் அவனுக்கும் தனக்குமிடையே ஏதோவொரு பிளவு, என்னவோ ஒரு தடை இருப்பது போல ஒரு பயம் ஏற்படுவதுண்டு. ஒரு நீண்ட தூர ஓட்டப் பந்தயத்தில் இருவரும் தினம் தினம் கலந்து கொண்டு ஓடிவிட்டு, சாயந்தரம் மூச்சு இரைக்க இரைக்கச் சந்திக்கிற மாதிரி ஒரு பதைப்பு... எப்போதும் அவனுக்கு ஒரு அவசரம்... என்னை அங்கே இறக்கி விடு... அங்கே கொண்டு போய் விடு... அதை எடு... இதை வை... என்னோட இது எங்கே?... அது எங்கே? எப்போது...? என்ன?... எப்படி? - இதுவே வாழ்க்கையாகி விட்டது என்று பேஜ் நினைத்துக் கொள்வாள்.

மணி ஆறே கால் ஆகிக் கொண்டிருந்தது.

பெட்டியைப் படுக்கை மீது வைத்துக் கொண்டு துணிகளை அடுக்கிக் கொண்டிருந்த பிராட், பேஜ் வருவதைக் கண்டதும் எழுந்து மெதுவே முறுவல் செய்தான். அவளுக்காக ஸ்பெஷலாய் வெளிப்படுத்தும் புன்சிரிப்பு.

"ஆண்ட்ரு இன்றைக்கு விளையாட்டில் பிய்த்துக் கட்டி விட்டானாமே?" என்றான் அவன். மகனின் பேஸ்பால் விளையாட்டைப் பார்க்க ஒருநாள் கூட அவன் போவது கிடையாது. ஆண்ட்ருவை அழைத்துப் போவதும் அழைத்து

தமிழில் : ரா. கி. ரங்கராஜன்

வருவதும் எப்போதும் பேஜ்தான். பிராடுக்கு நேரமே கிடையாது. சதா பிஸி.

"உங்கள் பிள்ளைதான் இன்றைக்கு அங்கே ஹீரோ," என்றவள் கணவனை நெருங்கி முத்த மிட்டாள். அவனுடைய உயரத்துக்குச் சரியாக, நுனிக் காலில் எம்பி நிற்க வேண்டியிருந்தது.

அவன் வெளியூருக்குப் புறப்படுகிறான் என்ற எண்ணம் மனசை உறுத்தினாலும் ஒருவேளை நாளைக்குப் புறப்படுவதற்காக இன்றைக்கே பெட்டியை எடுத்து வைத்துக் கொள்கிறானோ என்னவோ என்று ஒரு நப்பாசை.

"தோட்டத்துக்குப் போய், திறந்த வெளியில் அடுப்பு மூட்டி, சாப்பிட ஏதாவது செய்யலாமா?" என்று கேட்டாள் அவனிடம். "இன்று 'வெதர்' ரொம்ப அருமையாக இருக்கிறது. நான், நீங்கள், ஆண்ட்ரு மூன்றே



பேர்தான். ஆலிஸன் அவன் சிநேகிதி வீட்டுக்குப் போகிறாள்."

பிராட் அவளை மறுபடி முத்தமிட்டு, "ஸாரி டார்லிங். நான் க்ளீவ்லண்டுக்குப் புறப்படணும். நாளை ராத்திரி ஃப்ளைட்டுக்கு டிக்கெட் கிடைக்கவில்லை. அதனால் இன்றைக்கே கிளம்புகிறேன். ஒன்பது மணிக்கு ஃப்ளைட். ஏழு மணிக்கெல்லாம் புறப்பட வேண்டும்," என்றான்.

இது எதிர்பார்த்ததுதான் எனினும் பேஜ் மனம் நொந்தாள். இன்றிரவும், நாளையும் அவனுடன் இருக்க அவள் ஆசைப்பட்டிருந்தாள். தோட்டத்தில், பால் நிலா பளபளத்தது. இருவருமாக அங்கே உட்கார்ந்து

கொண்டு ராத்திரி பூரா பேசிக் கொண்டிருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டது நடக்க வில்லை.

சலிப்புடன் நாற்காலியில் உட்கார்ந்தான்.

"பேபி, ரொம்ப ஸாரி," என்றான் அவன், அவள் நாற்காலியின் கைப்பிடியில் அமர்ந்து.

"பரவாயில்லை," என்றாள் பேஜ். "காலை யிலிருந்து நான் உங்களையே நினைத்துக் கொண்டு... உங்களுடன் இருக்கலாமென்று... சரி, அதனாலென்ன?" என்று புன்னகையை வரவழைத்துக் கொண்டு கூறினாள். இப்படிப் பெருந்தன்மையாக விட்டுக் கொடுப்பது அவளுக்குப் பழக்கமாகி விட்டது. இருந்தாலும் ஒவ்வொரு முறையும் அவள் பிரிவு வேத னைதான்.

பிராட் ஒரு விளம்பர ஏஜென்ஸியில் வேலைக்கு இருந்தான். அங்கே அவனைச் சக்கையாய் பிழிந்தெடுத்தார்கள். காரணம் அவன் தான் அவர்களுடைய கவர்ச்சி நட்சத்திரம். விளம்பரதாரர்களை வசியம் செய்து வளைத் துப் பிடிப்பதிலும், பிடித்தவர்களைத் தக்க வைத்துக் கொள்வதிலும் அவனுக்கு நிகர் அவன்தானாம். ஆட்டுக்குட்டியை இழுத்து வருகிற மாதிரி வாடிக்கையாளர்களை அவன் இழுத்து வருகிறான் என்று கதை கதையாகச் சொல்வார்கள்.

"க்ளீவ்லண்டில் பொழுதுபோக்க எதுவுமே கிடையாது! பாவம், உங்களுக்குப் போரடிக்கும். அதுவும் ஞாயிற்றுக்கிழமையில்!" என்றாள் பேஜ் அனுதாபத்துடன்.

**"மலையடிவாரத்தில் தவம் செய்வது தான் துறவிகளுக்கு அழகு அப்பனே!"**

**"அதுக்காக சினிமா ஆர்ட் டைரக்டரை கூட்டி வந்து மலை மாதிரி இங்கே செட் டிங்ஸ் செய்து தொலைக்கணுமா குருவே?"**

**— உ. ராஜாஜி**



"ஏதோ ஒருவழியாய்ப் பொழுது போய் விடும்," என்றான் பிராட். "நான் சந்திக்கப் போகிற கம்பெனியின் அதிபருடன் கால்ஃப் விளையாடப் போகிறேன். மத்தியானம் அவரு டன் போனில் பேசினேன். நாளைக் காலை கால்ஃப் கிளப்புக்கு வரச் சொல்லியிருக்கிறார்," என்று சொன்னவாறு அவள் உதட்டில் அழுத்த மாக முத்தமிட்டான். அவள் உடம்பெங்கும் பரவசம் சிலிர்த்தோடியது.

"உன்னோடும் குழந்தைகளோடும் இருக் கணும் என்றுதான் எனக்கு ஆசை," என்று அவன் சொல்ல, "எப்பவும் உங்களுக்குக் குழந் தைகள்தான்! நான் முக்கியமில்லை!" என்று பேஜ் சிணுங்க, அவன் சிரித்தான்.

"இரண்டே நாள் பொறுத்துக் கொள். செவ் வாய்க்கிழமை ராத்திரி வந்து விடுவேன்..." என்று அவன் சொல்லிக் கொண்டிருந்தபோது ஆண்ட்ரு கதவை மடாலென்று திறந்து கொண்டு உள்ளே ஓடி வந்தான்.

"அம்மா அம்மா!! இந்த ஆல்லிபாட்டுக்கு உருளைக்கிழங்கு சிப்ஸைச் சாப்பிட்டு விட்டு டப்பாவை அப்படியே திறந்து போட்டு விட் டுப் போய் விட்டான்! விஸ்லி எல்லாத்தையும் தின்னுட்டிருக்குது! போச்சு! போச்சு! சமை யலறை பூரா வாந்தி எடுக்கப் போகுது! வாம்மா சீக்கிரம்!" என்றான்.

விஸ்லிக்கு அப்படியொரு கெட்ட பழக்கம். எதை வேண்டுமானாலும் தின்னும். ஆனால் ஜீரண சக்தி கிடையாது.

"இதோ வருகிறேன்," என்று பேஜ் புறப் பட்டபோது, ரகசியமாய், செல்லமாய் அவளுடைய பின்புறத்தில் ஒரு தட்டுத் தட்டி அனுப்பி வைத்தான் பிராட்.

ஆண்ட்ரு சொன்னது போலவே சமை யலறையில் ஒரே களேபரம். தரையெங்கும் உருளைக் கிழங்கு வறுவல் கொட்டிக் கிடக்க, கடைசித் துண்டுகளை வேகவேகமாக விழுங்கிக் கொண்டிருந்தது விஸ்லி.

"சீ போ! பன்றி! பன்றி!" என்று திட்டி அதை வெளியே விரட்டி விட்டு, தரையைச் சுத்தம் செய்தாள் பேஜ்.

பிராட் க்ளீவ்லண்டுக்குப் போகாமல் இன்று இங்கே இருந்திருக்கக் கூடாதா என்ற ஏக்கம் மறுபடி ஏற்பட்டது. அதென்னவோ அவர் களுடைய வாழ்க்கை, அவர்களைத் தவிர மற்ற எல்லாருக்கும் சொந்தமென்று ஆகி விட்டது.

பிராட் இல்லாமல் வீட்டில் தங்கவே அவளுக்குப் பிடிக்கவில்லை.

ஆண்ட்ருவைப் பார்த்து, "அப்பா க்ளீவ் லண்டுக்குப் போகிறார். ஆலிஸனும் இருக்க மாட்டாள். நம் இரண்டு பேரும் ஒட்டலுக்குப் போய் பிஸ்ஸா சாப்பிடலாமா? என்ன சொல்கிறாய்?" என்றாள்.

"ஓ, ஜோராய்!" என்றான் ஆண்ட்ரு, மகிழ்ச்

சியில் அவன் முகம் மலர்ந்தது.

மணி ஆறரை.

கையில் சூட்கேசுடன் வெளியே வந்தான் பிராட். கருநீலத்தில் டபிள் ப்ரெஸ்டெட் பிளேசரும், பீஜ் ஸ்லாக்கும் அணிந்திருந்தான். நீல ஷர்ட்டின் காலர் வெளியே துருத்திக் கொண்டிருந்தது. 'எவ்வளவு இளமையாக, எத்தனை அழகாக இருக்கிறார்!' என்று நினைத்தபோது, தான் களைத்துக் கிழவியாகி விட்ட மாதிரி ஒரு வருத்தம் ஏற்பட்டது.

வெளியுலகத்தில் சுற்றுவதென்ன, வாடிக்கையாளர்களைச் சந்திப்பதென்ன, பிஸினஸ் மீட்டிங்குகளில் பங்கேற்பதென்ன என்று கணவனின் வாழ்க்கையே தனி. இங்கே அடுப்பங்கரையில் அடைந்து கொண்டு, துணிமணிகளுக்கு இஸ்திரி போட்டுக் கொண்டு, குழந்தைகளைக் கொண்டு போய் விடுவதும் அழைத்து வருவதுமாக நம் வாழ்க்கை தனி... ஹூம்!

பிராட் கொஞ்சம் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவன். ஆனால் அப்பாவிடம் பைசா எதிர்பாராமல் முழுக்க முழுக்க உழைத்தே முன்னுக்கு வந்தவன். அவன் வேறெங்கும் போய் விடக் கூடாதென்று அலுவலகத்தில் எல்லா வசதிகளும் செய்து கொடுக்கிறார்கள். முதல் வகுப்பு விமானப் பயணம்; முதல்தர ஓட்டல்களில் தங்கும் வசதி. எப்போதும் அவனுக்கு மவுசு. எப்போதும் அவனைச் சுற்றி நாலு பேர்.

'அவர் அப்படி இருக்கிறார். நாம் பைசாவுக்குப் பிரயோசனமில்லாமல் மண்ணாங்கட்டி மாதிரி உட்கார்ந்திருக்கிறோம்' என்று பேஜ் சில சமயம் வருத்தப்படுவதுண்டு.

முன்பு அவள் சித்திரக் கல்லூரியில் படித்து, சில நிறுவனங்களில் ஆர்ட் டைரக்டராக இருந்து, காஸ்ட்யூம் ஆலோசகராகக் கூடப் பணியாற்றியிருக்கிறாள். அதெல்லாம் அந்தக் காலம். இப்போது பள்ளிக் கூடத்தில் ஏதாவது விழா என்றால் குழந்தைகளுக்கு மாறுவேடம் போட்டுக் கொடுப்பதோடு சரி.

வெளியே வந்த பிராடின் பார்வை ஆலிஸனின் மீது விழுந்தது. அம்மாவின் உடையை அணிந்திருந்ததால் வளர்ந்த யுவதியாகக் காட்சி தந்தாள்.

"ராணி மாதிரி இருக்கிறாயே!" என்று பிராட் பாராட்ட, ஆலிஸன் 'தாங்க்யூ!' என்றாள்.

"க்ளோவின் அப்பா இவளை வெளியே அழைத்துப் போகிறார். அதுதான் கிளம்பிக் கொண்டிருக்கிறாள்," என்றாள் பேஜ்.

"யார்? தாரன்ஸனா? ஆசாமி இளம் பெண்களோடு சுற்ற ஆரம்பித்து விட்டானா?" என்று

## அருள்வாக்கு

"போச்சு போச்சு! கலியில் எல்லாம் போச்சு! ஏதாவது கொஞ்சம் மிச்சமிருந்தாலும் அதுவும் கால க்ரமத்தில் போயே போயிடும். எல்லாம் மிருகப் பிராயமாயிடும்" என்று புராணங்கள் பயமுறுத்துகின்றனவென்றால், நாம் ஆலஸ்யமாக (மெத்தனமாக) இருந்துவிடக் கூடாது என்று எச்சரித்து, உசுப்பிவிட்டு உஷார்ப்படுத்துவதற்குத்தான். ரொம்பவும் ஆபத்தாக வர்ணித்தால்தான் நாம் அசைந்து கொடுப்போம் என்பதால்தான்.



'கலிதான் அதர்ம யுகமென்றால் நாம் அதர்மமாகத்தான் இருந்து விட்டுப் போவோமே!' என்று போலீஸ் தண்டோராப் போட்டால் என்ன செய்வோம்? திருடர்கள் வந்து எடுத்துக் கொண்டு போகட்டும் என்று நாமே உடைமைகளைத் தெருவில் போட்டுவிட்டா உட்கார்ந்து கொண்டிருப்போம்? 'காப்பாற்ற முடிகிறவரையில் காப்பாற்றிக் கொள்வோம்' என்றுதானே ஜாக்ரதை செய்து கொள்வோம்? போலீஸ் தண்டோரா போட்டதன் நோக்கமும் இப்படி ஜாக்ரதை செய்து, முடிந்தமட்டும் ரக்ஷித்துக் கொடுப்பதற்குத்தானே? "கலி அதர்ம ஆட்சியை ஆரம்பித்துவிட்டான்" என்று சாஸ்த்ரங்கள் தண்டோராப் போடுவதற்கும் தாத்பர்யம், கூடியமட்டும் தர்மத்தை ஜாக்ரதையாக ரக்ஷித்துக் கொள்வதற்குத்தானே ஒழிய, 'ஒன்றும் பண்ணிக்கொள்வதற்கில்லை' என்று, இருப்பதையும் விட்டுவிட்டு வீணாகப் போவதற்கல்ல.

இந்த யுகத்தில் வரும் அதர்ம ப்ரவாஹத்தை ஒருவன் எதிர்த்து நின்றால்தான் மற்ற யுகங்களில் செய்யும் தர்மாநுஷ்டான பலனை விடக் கோடி மடங்கு பலன் பெறலாம். எதிர்ப்பு உண்டான ஸமயத்தில் தடுத்து நின்றால்தான் பெருமை அதிகம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்.

பிராட் கேலி செய்தான்.

"போங்கப்பா! அவருக்கு உங்கள் வயசு!"

"ஆமாம். என்னை விட இரண்டு வயது சின்னவன்," என்று பிராட் சொல்லிக் கொண்டிருந்தபோது, ஆண்ட்ரூ வந்து அவன் இடுப்பைக் கட்டிக் கொண்டு, "வெளியூர் போகிறீர்களா அப்பா?" என்று கேட்டான்.

"ஆமாம், மிஸ்டர் ஆண்ட்ரூ! செவ்வாய்க்கிழமை ராத்திரி திரும்பி வருவேன். அதுவரை தாங்கள்தான் சார் வீட்டைப் பார்த்துக் கொள்ள வேண்டும். இந்த வீட்டில் நீங்கள்தான் ஆண் பிள்ளை. இந்த இரண்டு பொம்பளைகளும் ஒழுங்காக இருந்தார்களா, எங்கே போனார்கள், என்ன செய்தார்கள் என்று எனக்கு ரிப்போர்ட் தர வேண்டும். என்ன மிஸ்டர்?" என்றான்.

ஆண்ட்ரூவும் ஜம்பமாக, "ஓகே ஸார்," என்றான். "அம்மாவை ராத்திரி நான் ஓட்டலுக்கு அழைத்துப் போய் பிஸ்ஸா வாங்கித் தரப் போகிறேன்."

"ரைட்.. அம்மா ரொம்ப அதிகமாய்ச் சாப்பிடாமல் பார்த்துக் கொள்ளுங்கள் சார்!"

"ஓ.கே."

பிராட் காரை வெளியே எடுத்தான். தன் சூட்கேஸைக் காருக்குள் தூக்கிப் போட்டு விட்டு ஏறிக் கொண்டான்.

அவன் வெளியூர் கிளம்புவதைப் பார்த்துப் பார்த்துப் பேஜுக்குச் சகஜமாகி விட்டது. இருந்தாலும் கூட, ஒவ்வொரு முறையும் அவள் வயிற்றில் ஒரு சங்கடம் ஏற்படுகிறது. இப்படி அடிக்கடி விமானப் பயணம் போகிறாரே, எங்காவது... ஏதாவது ஏற்பட்டு விட்டால்...? அப்புறம் நம் வாழ்க்கையே அவ்வளவுதான்...

"ஜாக்கிரதை," என்று கிசுகிசுத்த குரலில் சொல்லி, முன்புற ஜன்னலுக்குள் தலையை நுழைத்து அவனை முத்தமிட்டாள்.

மூவரும் கையை அசைத்து டாடா கூற, பிராட் புறப்பட்டான்.

தானே அவனை விமான நிலையத்துக்குக் கொண்டு போய் விட்டிருக்கலாமே என்று ஒருகணம் நினைத்தாள் பேஜ். ஆனால், திரும்பி வரும்போது விமான நிலையத்தில் கார் ரெடியாக இருக்க வேண்டும் பிராடுக்கு. அதனால் எப்போதும் காரை விமான நிலையத்தில் விட்டு விட்டுப் போவது வழக்கம்.




வீட்டுக்குள் திரும்பினாள் பேஜ். மீண்டும் ஒரு தனிமை யுணர்வு அவளை வாட்டியது. 'சட்! என்ன இது முட்டாள்தனம்!' என்று தன்னைத்தானே திட்டிக் கொண்டாள். நாம் என்ன பச்சைக் குழந்தையா? குடும்பத் தலைவி. இரண்டு நாளில் அவர் திரும்பி வந்து விடப் போகிறார். என்னவோ ஒரு மாத காலம் பிரிந்திருக்கப் போகிற மாதிரி இடிந்து போகிறோமே...!

"நான் கிளம்புகிறேனம்மா!" என்று சொல்லிக் கொண்டு ஆலிஸன் புறப்பட்டாள்.

"ஞாபகம் இருக்கட்டும். அதிக பட்சம் பதினொன்றரை மணி!" என்று மறுபடியும் ஒரு முறை நினைவுபடுத்தி, மகளுக்கு விடை கொடுத்தாள், பேஜ். பிறகு ஆண்ட்ரூ

"என்ன சார், எந்த ஓட்டலுக்குப் போக லாம்? டாமினோவா, ஷேக்கியா?" என்றாள்.

"டாமினோவுக்குப் போகலாம், அம்மா. போன தடவைதான் ஷேக்கிக்குப் போனோமே?"

இருவரும் ஸ்டேஷன் வேகனில் புறப்பட் டார்கள். ஓட்டலில் சளசளவென்று ஆண்ட்ரு பேசிக் கொண்டே சாப்பிட்டான். தன் ஸ்கூலைப் பற்றியும் தோழர்களைப் பற்றியும் வாய் ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்தான்.

"அம்மா, நான் பெரியவனானதும் ஸ்கூல் டீச்சராய் வரப் போகிறேன்," என்றான்.

"ஏன்?"

"அப்பத்தான் நிறைய குழந்தைகளைப் பார்த்துக்கலாம். பாடம் சொல்லித் தரலாம்!"

"நல்ல ஜோரான வேலை தான்," என்று புன்னகை செய்தாள் பேஜ். ஆண்ட்ரு எப் போதும் இப்படித்தான். திடீர் திடீரென்று விசித்திரமான ஆசைகளைச் சொல்லுவான். அவனுடன் பேசிக் கொண்டிருப்பதே தனி ஆனந்தம் பேஜுக்கு. மற்ற எல்லாப் பிரச் னைகளும் மறந்துவிடும்.

சாப்பிட்டு முடிந்ததும் பத்து நிமிடத்தில் அவர்கள் வீடு திரும்பினார்கள். ஆண்ட்ரு அம்மாவுடன் படுக்கையில் உட்கார்ந்து டீவி பார்த்தபடியே தூங்கி விட்டான். போர்வை யைப் பிரித்து, நன்றாகப் போர்த்தி விட்ட போது ஏழு வயதிலேயே குழந்தை எவ்வளவு வளர்ந்து விட்டான் என்ற எண்ணம் ஏற்பட்டது.

தானும் படுத்துக் கொள்ளலாமா என்று எண்ணினாள். ஆனால் ஆலிஸன் வரும் வரை யில் காத்திருக்கத் தோன்றியது. க்னோவின் வீட்டுக்குப் போயிருப்பதால் கவலைப்படத் தேவையில்லைதான். இருந்தாலும் சொன்ன நேரத்துக்கு வீடு திரும்பினாளா என்று கவனிக்க வேண்டும்...

க்னோவையும் அவள் குடும்பத்தினரையும் பேஜுக்குப் பல வருடமாகப் பழக்கமுண்டு. க்னோவின் தந்தை தாரன்ஸன் பழகுவதற்கு இனிமையானவர். ஹாலிவுட்டில் கதாசிரி யராக இருந்தபோது, குட்டி நடிகையாக இருந்த டானாவைக் காதலித்து மணந்தான். ஆனால் ஏமாற்றம்தான் மிஞ்சியது. க்னோவுக்குக் கல் லூரி வயதில் இரண்டு சகோதரர்கள் உண்டு. அவர்களில் இளையவனான பிஜான் பிறக் கும்போது, தலை பெருத்தவனாகப் பிறந்து மன வளர்ச்சி குன்றியவனாக வளர்ந்தான். க்னோ வின் அம்மாவுக்கு அப்போதே இந்த வாழ்க்கை வெறுத்து விட்டது. க்னோ பிறந்தபின் இன்னும் சுயநலக்காரியாகி விவாகரத்து செய்து கொண்டு, கணவனையும் மூன்று குழந்தை களையும் விட்டு விட்டு லண்டனுக்குப் போய்



"என்ன மன்னா, பல்லெல்லாம் உடைந்து ஆளே மாறிவிட்டீர்கள்?"

"நான் செய்த தவறுகளைக் கண்டித்து புலவர் எல்லாம் சற்று வேகமாக 'இடித்துரைத்து' விட் டார்கள் அமைச்சரே!"

— அ.சு. கிருஷ்ணன்

விட்டாள்.

தன் எழுத்துத் தொழிலை விட்டு விடாமல் தாரென்ஸன்தான் குடும்பத்தைப் பொறுப் பாகப் பார்த்துக் கொண்டான். அந்த வட் டாரத்தில் எல்லாருக்கும் அவன் மீது அனுதாபம் உண்டு. பிரியமும் உண்டு...

மணி பதினொன்று.

டீ.வியில் சினிமா முடிந்து செய்திகள் ஒளி பரப்பாகின. விமான விபத்தோ, கார் விபத்தோ எதுவும் செய்தியில் வரவில்லை. பேஜ் நிம்மதிப் பெருமூச்சு விட்டாள். பிராட் பத்திரமாக கிளீவ்லண்டுக்குப் போயிருப்பான். ஆலிஸன் பத்திரமாகத் தாரென்ஸனின் வீட்டில் இருப் பாள். ஆண்ட்ரு பத்திரமாக இதோ தூங்கு கிறான்.

நிம்மதி... நிம்மதி...

கடியாரத்தைப் பார்த்தாள். பதினொன்று அடித்து இருபது நிமிடமாகியிருந்தது.

ஆலிஸன் வார்த்தை தவற மாட்டாள். சரி யாய்ப் பதினொன்று இருபத்தொன்பதுக்கு கத வைப் பிளந்து கொண்டு ஓடி வருவாள். முடி நாலு பக்கமும் பறக்க, மூச்சு இரைக்க, சாப் பிட்ட சிற்றுண்டியின் பருக்கைகள் காஷ்மீர் ஸ்வெட்டரில் ஒட்டியிருக்க....

அந்தக் காட்சியைக் கற்பனை செய்தபோது பேஜின் உதட்டில் புன்னகை பிறந்தது.

இருந்தாலும், அவள் வயிற்றில் இனம் புரியாத திகிலொன்று பந்து போல் உருண்டு மேலெழும்பியது.

மணி பதினொன்றரையை நெருங்கிக் கொண்டிருந்தது.

(தொடரும்)

## மருத்துவ(ர்) மகிமை :

மகப்பேறு மருத்துவர் ராதா பாண்டியன்



# "டெஸ்ட் ட்யூப் பேபிதான் வேண்டும்!"

### – ஒரு பெண்ணின் பிடிவாதம்!

"கைலாஸத்துக்குத் திருமணமாகி இரண்டு மகன்களும் உண்டு. மனைவி இறந்துபோக, இன்னொருத்தியைத் திருமணம் செய்து கொண்டார்.

இரண்டாம்தாரமாக வாழ்க்கைப்பட்ட உமாவுக்கு, திருமணமாகி ஐந்து வருடங்களாகியும் குழந்தை பிறக்கவில்லை. கைலாஸத்துக்கு வாரிசுகள் இருக்கலாம். ஆனால் தனக்கென்றும் ஒரு குழந்தை வேண்டும் என்பதில் தீர்மானமாக இருந்தாள் உமா.

தம்பதிகள் என்னிடம் சிகிச்சைக்காக வந்தனர். அவர்கள் இருவருக்குமிடையே உள்ள வயது வித்தியாசம் (இருபது வருடங்கள்) பளிச்சென்று பட்டது. கைலாஸத்தின் விந்துவை சோதித்துப் பார்த்ததில் திருப்திகரமாக இருந்தது.

வழக்கமான முறைகளில் உமாவுக்கு சிகிச்சை கொடுத்தோம். தொடர்ந்து மூன்றாம் முறையும் மாதவிலக்கு ஏற்பட்டவுடன் உமா பொறுமையிழக்க ஆரம்பித்து விட்டாள். தொலைக்காட்சி, பத்திரிகைகள் இவற்றின் மூலமாக அறிந்ததைக் கொண்டு "சோதனைக் குழாய் முறையின் மூலம் எனக்குக் குழந்தை பிறக்க வையுங்கள். பணம் செலவாவதைப் பற்றிக் கவலையில்லை" என்று படபடத்தாள்.

பெண்ணின் ஃபலோபியன் குழாயில் அடைப்பு, பல வருடங்களுக்குச் சிகிச்சை செய்தும் பலனில்லாமை, கணவரின் ஸ்பெர்ம் எண்ணிக்கை மிகக்குறைவு – இப்படியெல்லாம் ஏதாவது இருந்தால்தான் சோதனைக் குழாய் முறையில் குழந்தை பிறக்க முயற்சி செய்வது வழக்கம். ஆனால் இப்படிப்பட்ட் பிரச்னை எதுவும் இல்லாத உமாவுக்கு ஏன் அவசரப்பட்டு டெஸ்ட் டியூப் முயற்சி? என்று கருதி, விளக்கினேன். உமா ஒப்புக் கொள்வதாய் இல்லை.

சரியென்று அவள் விருப்பப்படியே சிகிச்சையைத் தொடங்கினேன். அவள் உடலிலிருந்து முட்டையை எடுத்து பரிசோதனைச் சாலையில் பாதுகாத்தோம். ஒரு நாளுக்குள் அதை கருவுறச் செய்ய வேண்டும். அப்போது

தான் பலனிருக்கும். ஆனால் கைலாஸத்திடமிருந்து அன்று பெறப்பட்ட சாம்பிளில் போதிய அளவில் விந்துக்கள் இல்லை. டென்ஷன் காரணமாக குறிப்பிட்ட நாட்களில் இப்படி நடப்பதுண்டு என்பதால், சம்பந்தப்பட்ட ஆணின் விந்துவை சில நாட்களுக்கு முன்பே பெற்று உறைந்த நிலையில் வைத்திருப்பது உண்டு. நல்லகாலமாக, பத்து நாட்களுக்கு முன்பு பெற்றிருந்த, அவரது விந்துவிலிருந்து, அணுக்கள் உறைய வைக்கப்பட்ட நிலையில் பாதுகாக்கப்பட்டிருந்தன. அவற்றைக் கொண்டு சோதனைக் குழாயில் முட்டையைக் கருவுறச் செய்தேன். இப்படி ஐந்து முட்டைகளை ஒரே நேரத்தில் கருவுறச் செய்தோம். (அப்போதுதானே ஒன்றாவது கருவாகும்)

ஐந்து முட்டைகளும் கருத்தரித்தன! குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு அவற்றை, உமாவின் கர்ப்பப் பையில் செலுத்தினேன். பிறகு பதினைந்து நாட்களுக்குப் பிறகு ஸ்கேன் செய்தபோது, ரிஸல்ட் பாஸிடிவாக இருந்தது. உமா கர்ப்பம் தரித்து விட்டாள். மேலும் பதினைந்து நாட்களுக்குப் பிறகு கொஞ்சம் சங்கடமான ஒரு விஷயம் தெரியவந்தது – உமா இரட்டைக் கருக்களை சுமந்து கொண்டிருக்கிறாள் என்பது. கவலையும் அக்கறையுமாக சிகிச்சையைத் தொடர்ந்தேன்.

எட்டு மாதங்கள் ஆனவுடனேயே ஒரு தடங்கல். பிரசவ வலி உண்டானது உமாவுக்கு. அந்த நேரத்தில் அதை முற்ற விட்டால், அது குறைப் பிரசவத்தில் முடிந்துவிடும். எனவே பிரசவ வலியைக் குறைக்க ஏற்பாடுகள் செய்தேன். உடல்நிலையைத் தொடர்ந்து கண்காணித்தோம்.

ஒருவழியாக உமாவின் கனவு நிறைவேறியது. ஒரு ஆண், ஒரு பெண் என்று இரட்டைக் குழந்தைகள். சந்தோஷம், பெரும் களைப்பு ஆகிய இரண்டு உணர்வுகளும் எனக்கு ஏற்பட்டன. இப்போது அந்தக் குழந்தைகளுக்கு ஐந்து வயது. புத்திசாலித்தனத்துடன் இருக்கும் அவர்களை அவ்வப்போது பார்க்கும்போதெல்லாம் ஆனந்தமாக இருக்கிறது.

உமாவின் பிரசவம் நடந்த சில மாதங்களுக்குப் பிறகு டெல்லியில் நடைபெற்ற அகில இந்திய கருத்தரங்குக்குச் சென்றேன். மற்ற மருத்துவர்களிடம் பேசிப் பார்த்த பிறகுதான் ஓர் உண்மை புலப்பட்டது. உறைய வைக்கப்பட்ட விந்துவைக் கொண்டு வெற்றிகரமாக சோதனைக் குழாய் குழந்தையை உருவாக்கிய முதல் ஆசிய மருத்துவர் நான்தானாம்!"

— அருண்சரண்யா

(சிகிச்சை பெற்ற நபர்களின் பெயர்கள் மாற்றப்பட்டுள்ளன.)

கோடை விடுமுறை பிறந்தாச்சு!
கோகுலம் கூட வந்தாச்சு!

# கோகுலம்

மே இதழில்...

- தங்கத் தாமரை — படக்கதை
- கரண்டி வாயனுக்குக் கொண்டை உண்டா?



- கோடை விடுமுறைப் போட்டி

+ வழக்கமான போட்டி, கதைகள், நாடகம் எல்லாம்!

முழுமையான சிறுவர் மாத இதழ்!

**கோகுலம், ஈக்காடுதாங்கல், சென்னை - 97**

# மூன்று லிட்டர் மண்ணெண்ணெய்

அந்த மண்ணெண்ணெய் அடுப்பிலிருந்து வந்த புகை சிவகாமியை உடனே அந்த அடுப்பிலிருந்து ஒரு துவாரத்தின் மூடியைத் திறந்து பார்க்கச் செய்தது. உண்மையில் அந்த அடுப்பு புதிதாக இருந்த நாட்களில் இப்படிப் பரிசோதிக்கத் தேவையில்லை. அடுப்பின் விளிம்பில் ஓரிடத்தில் குச்சி போன்றது ஒன்று வெளியே எவ்வளவு நீட்டிக் கொண்டிருக்கிறது என்பதைக் கொண்டு அடுப்பில் உள்ள எண்ணெய்யின் அளவை அறிந்து கொள்ளலாம். இப்போது அந்தக் குச்சி வேலை செய்வதில்லை. எல்லாப் பழங்கால அடுப்புகளைப் போல இதையும் மூடி திறந்து, ஈர்க்குச்சி விட்டு எண்ணெய் இன்னும் எவ்வளவு இருக்கிறது என்று பார்க்க வேண்டும். இப்போது வரும் புகையின் வாசனை அதையும் தேவையில்லாது செய்துவிடும். உடனே எண்ணெய் விட வேண்டும். அல்லது அடுப்பை அணைக்க வேண்டும். அடுப்பை உடனே அணைக்காவிட்டால் திரிகள் எரிந்து கருகிப் போய்விடும். மீண்டும் திரிகளை அடுப்பில் பொருத்துவது கடினமான காரியம். ஆனால் சாதம் இப்போதுதான் கொதிக்கத் தொடங்கியிருந்தது.

சிவகாமி மூன்று மாடிப்படி இறங்கி, மாடிப்படியோரத்தில் வைத்திருந்த கணவனின் சைக்கிள் விளக்கை அசைத்துப் பார்த்தாள். அதில் சிறிது எண்ணெய் இருந்தது. ஆனால் விளக்கை ஒரு சங்கிலி கொண்டு சைக்கிளோடு சேர்த்துப் பூட்டியிருந்தது. அந்தப் பூட்டுக்குச் சாவி வேண்டுமானால் தூங்கும் கணவனை எழுப்பியாக வேண்டும். தினமும் பயன்படுத்தப்படும் சாவியானால் அது அவனுடைய சட்டை அல்லது பாண்ட் பையில் இருக்கும். மூன்று வாரங்களுக்கு ஒருமுறை அவன் இரவு ஒன்பது மணியிலிருந்து ஐந்து மணி வரை வேலைக்குப் போகும்போது மட்டும் அந்த விளக்கை சைக்கிளில் மாட்டிப் பூட்டி வைப்பான். அந்த விளக்கு அவனுக்குப் பாதையைக் காட்டும் என்பதற்காக அல்ல. நெரிசலில்லாத நெடுஞ்சாலையில் இருட்டில் கனவேகமாகச் செல்லும் வண்டி ஏதும்

## வைட்டமின் கதை — 2

## அசோகமித்திரன்

அவன் மீது இடித்து விடக்கூடாதேயென்றுதான்.

அவள் மாடியேறி வந்த போதும் அவன் தூங்கிக் கொண்டிருந்தான். அவனை எழுப்ப மனமில்லாமல் சிவகாமி திரியை இறக்கி அடுப்பை அணைத்தாள். ரேஷனில் தரும் ஐந்து லிட்டர் எண்ணெய் ஆறு நாட்களுக்குத்தான் போதுமானதாக இருந்தது. அந்தக் குடியிருப்பில் அடுப்புக்கு விறகு பயன்படுத்த முடியாது. குடிசை மாற்று வாரிய வீடென்றாலும் குடிசைக்குரிய சாதனங்கள் செல்லாது. அதிகம் போனால் கரியடுப்பு வைத்துக் கொள்ளலாம். இப்போது காகிதத்தைத் தேடி தேங்காய் நாரைத் தேடிக் கரியடுப்பைப் பற்றவைக்க வேண்டும்.

போன வருடத்திலேயே ஒரு தடவைக்கு மூன்று தடவையாக ரேஷன் கடைக்குப் போக வேண்டியிருந்தாலும் மண்ணெண்ணெய் கிடைத்தது. அவள், வீட்டு வேலை செய்த வீடுகளிலிருந்தும் ரேஷன் மண்ணெண்ணெய் கிடைக்கும். உண்மையில் ரேஷன் கடைக்குப் போகும் அனுபவம் அவளுக்கும் அவள் வேலைக்கிருக்கும் வீட்டாருக்கும் இடையே உறவை மென்மைப்படுத்தியது. ரேஷன் கடைக்குப் போகும்போதும் கியூவில் காத்திருக்கும்போதும் சினிமா, அரசியல், அக்கம் பக்கத்துச் செய்திகள் எல்லாவற்றையும் பற்றிப் பேசலாம், சிரிக்கலாம். காஸ் அடுப்பு இருப்பவர்களுக்கு மூன்று லிட்டர்தான் எண்ணெய் என்ற போது கூட அது கிடைத்துக் கொண்டிருந்தது. ஆனால் கடந்த ஏழெட்டு மாதமாக அடுப்பெரிவது ஒரு பெரிய பிரச்னையாகப் போய் விட்டது.

சிவகாமி சாதப் பாத்திரத்தை ஒரு பெரிய தட்டில் வைத்துக் கொண்டு கீழ்த் தளத்திலுள்ள அவளுடைய நாத்தனார் இடத்திற்குச் சென்றாள். "அக்கா, கொஞ்சம் சோறாக்கிக்கிறேன்," என்றாள்.

"இங்கே அடுப்புப் பத்த வைக்கலே. வெளியிலே வெந்நீருக்கு வைச்சிருக்கேன். அதிலே சாதம் வடிச்சுடு."



கீழேயிருப்பவர்களுக்கு அது ஒரு சலுகை. பழைய கட்டை மற்றும் சுள்ளி முதலானவை கொண்டு வெட்ட வெளியில் ஓர் அடுப்பு ஏற்றிக் கொள்ளலாம். பக்கத்தில் சாக்கடை நிரம்பி வழிந்து கொண்டிருக்கும். எல்லா நேரத்திலும் ஏதாவது ஒரு ஆள் வெகு நிதானமாகக் குனித்துக் கொண்டிருப்பது தவறாது. சிறிது காற்றடித்தாலும் ஏதேதோ குப்பையும் எச்சிலையும் பறந்து வரும். அங்குதான் அன்று சிவகாமி சாதம் வடித்தாள்.

"ஒரு நாப் போலே தினம் எட்டு மணிக்கு வரலே?" என்று நளினி கேட்டு விட்டாள். நளினியும் சிவகாமியும் சேர்ந்து ஐந்தாவது வரை



''அந்த ஆளை டியூப்லைட்னு நினைச்சேன்; ஃபியூஸ் ஆன பல்புன்னு இப்பத்தான் தெரியுது!''

''எப்படிச் சொல்றே?''

'' 'குளிக்கும் அறை'ன்னு போட்டிருக்கிற போர்டைப் பார்த்து 'ரூம் எப்படி சார் குளிக்கும்'னு கேட்கிறார்!''

– வெ. ராஜாராமன்

படித்தவர்கள். இன்னொரு ஒற்றுமையும் உண்டு. இருவருக்கும் குழந்தை கிடையாது.

''நான் என்ன பண்ணுவேன், நளினி? இன்னிக்கு பகல்ல என் புருஷன் வீட்டிலே இருக்கும்னு காலையிலேயே சமைக்கப் போனா கிரஸ்னாயில் இல்லே. நான் கீழே யிறங்கி கன்னி எரிச்சுதான் சோத்தை வடிச்சேன். நிச்சயம் அரிசி ஊறியிருக்கும். நாலு தடவை மாடி ஏறி இறங்கியதுலே காலெல்லாம் வலிக்கிறது.

''முந்தா நேத்து என் ரேஷன் கார்டை எடுத்துண்டு போனியே?''

''உன் ரேஷன் கடைக்கு மூணு தரம் போயிட்டு வந்துட்டேன். மண்ணெண்ணெயே வரலைன்னு சொல்றான்.''

நளினி மேற்கொண்டு பேசவில்லை.

''விரல் விட்டு எண்ணக்கூடிய அளவு தான் சொந்த பங்களாக்கள் வச்சிருக்கேன்!''

''எத்தனை பேரோட விரல்கள் தேவைப்படும், தலைவரே?''

- அம்பை தேவா



சிவகாமி பாத்திரங்களைத் துலக்கி வைத்தாள். ''இன்னிக்கு உன் புடைவை ஒண்ணும் இல்லையா?'' என்று நளினியைக் கேட்டாள்.

''நாளைக்குத் தோய்ச்சுக்கலாம். நீ பாவாடை, பனியன் மட்டும் அலசிப் போட்டுடு.''

அப்போது நளினியின் கணவன் தலைமுடி வெட்டிக் கொண்டு வந்தான். அவன் குளியலறைக்குப் போய்க் கதவைச் சாத்திக் கொள்ள, சிவகாமி சமையலறை அருகே உட்கார்ந்து கொண்டாள்.

''கொஞ்சம் காப்பி சாப்பிடறியா?'' என்று நளினி கேட்டாள்.

''வேண்டாம்.''

''நான் அவருக்குக் கலக்கப் போறேன்.''

''சரி, கொடு.''

நளினி காஸ் அடுப்பைப் பற்றவைத்தபோது சிவகாமிக்குத் துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது. நளினி பதறிப் போய், ''சிவகாமி, சிவகாமி! என்னாச்சு?'' என்றாள்.

சிவகாமி கண்களைத் துடைத்துக் கொண்டு, ''ஒண்ணுமில்லே,'' என்றாள். நளினியின் கணவன் குளித்து விட்டு வெளியே வந்தான். அவனிடம் நளினி காப்பி கொடுத்தாள். இன்னொரு தம்ளரை சிவகாமியிடம் கொடுத்து அவள் பக்கத்திலேயே உட்கார்ந்தாள். ''நம்பளுக்குக் குழந்தை பொறக்காம இருக்கறதே மேல். உனக்கும் சரி, எனக்கும் சரி, அம்மாவும் கிடையாது, மாமியாரும் கிடையாது. குழந்தை பொறந்தா அதைக் குளிப்பாட்டக் கூட அக்கம் பக்கத்துக்காரங்களைத் தேடிப் போகணும்.''

சிவகாமி மௌனமாகக் காப்பியைக் குடித்தாள். ''எனக்குக் குழந்தை வேண்டாம், நளினி. ஒழுங்கா கிரஸினாயில் கெடைச்சாப் போறும்'' என்றாள்.

''நீ காஸுக்கு இன்னும் கொஞ்சம் முன்னாலே ரிஜிஸ்டர் பண்ணியிருக்கக் கூடாதா?''

''இப்ப மட்டும் என்ன? ஆறு வருஷத்துக்கு மேலாகிறது. அந்தக் காகிதம் கூட மடிச்ச இடங்களிலே கிழிய ஆரம்பிச்சுடுத்து. இன்னும் 89 செப்டம்பர் வரைக்கும்தான் வந்திருக்குன்னு காஸ்காரன் சொல்றான்.''

''இது நிஜமாயிருக்குமா?''

''யாருக்குத் தெரியும்? ரேஷன் கடைக்காரன், போறப்பவெல்லாம் எண்ணெய் இல்லைன்றான். அது மட்டும் நிஜமா?''

நளினியின் கணவன், ''நான் சாப்பிட உட்காரலாமா?'' என்று கேட்டான்.

''நான் துணியைத் தோச்சுப் போட்டுடறேன்'' என்று சிவகாமி பாத்ரூம் பக்கம் சென்றாள். நளினியின் கணவன், ''உன் ஃப்ரெண்ட் ஏன் அழுதா?'' என்று விசாரித்தது அவளுக்குக்

கேட்டது.

"நீங்க யார்கிட்டேயாவது சொல்லி அவனுக்கு காஸ் கனெக்ஷன் வாங்கித் தந்துடக் கூடாதா?" என்று நளினி கேட்டாள்.

அதற்கு நளினியின் கணவன் பதில் சொன்ன மாதிரி சிவகாமிக்குத் தோன்றவில்லை.

துணிகளை அலசிக் கொடியில் உலர்த்திய பின் மீண்டும் அறை உள்ளே சிவகாமி வந்த போது நளினியின் கணவன் அலுவலகம் கிளம்பத் தயாராக இருந்தான். சிவகாமியைப் பார்த்து, "உன் ரிஜிஸ்டிரேஷன் நம்பர் எல்லாம் ஒரு எம்.பி கிட்டே கொடுத்து ஏதாவது முடியுமான்னு முயற்சி பண்ணச் சொல்லியிருக்கேன். தத்கால் வாங்கிக்கோன்னு சொல்லறான். ஆறு வருஷம் காத்திருந்து மறுபடியும் ஐயாயிரம் ஆறாயிரம் எதுக்குக் கொட்டித் தரணும்? அவ்வளவு பணத்துக்குத் தரவட்டிக்கு நீ கிரஸினாயிலே வாங்கிக்கலாம்" என்றான்.

"வீட்டிலே சொட்டு இல்லை. இனிமேல் போய்த்தான் வாங்கணும். மூணு மாடி மேலே இருக்கிறதுலே கீழே வண்டிக்காரன் வரது தெரியாமே போயிடறது. அவர் நைட் ட்யூடி பண்ணிட்டு வந்து தூங்கறாரு. இல்லேன்னா இன்னிக்குக் காலையிலே ரொம்பத் திண்டாட்டமாயிருக்கும்."

"நான் இன்னிக்கு மறுபடியும் கேட்டுப் பாக்கறேன்."

நளினியின் கணவன் கிளம்பிப் போய் விட்டான். சிவகாமி அதே கட்டடத்தில் இருந்த இன்னொரு வீட்டுக்குப் போனாள். அங்கு வேலை முடித்து அவள் வீட்டுக்குப் போனபோது அவள் கணவன் கதவைப் பூட்டிக் கொண்டு வெளியே போயிருந்தான். சிவகாமி ஜன்னல் வழியாக உள்ளே எட்டிப் பார்த்தாள். கீழே மாடிப்படிக் கூண்டில் அவனுடைய சைக்கிளைப் பார்த்தது கவனத்துக்கு வந்தது. எங்கோ அருகாமையில் உள்ள இடத்துக்குத்தான் போயிருக்க வேண்டும்.

அவள் அதிக நேரம் காத்திருக்கத் தேவையில்லாமல் அவன் வந்து விட்டான்.

''ஏது நீங்க கிரஸினாயில் கேனைத் தூக்கிட்டு போயிருக்கீங்க?"

"கேன் உள்ளே பாரு. நீ வாங்கி வைச்சிருந்த கார்டிலே மூணு லிட்டர் வாங்கிண்டு வந்துட்டேன்."

சிவகாமி மகிழ்ச்சி தாங்காமல் அவன் கையிலிருந்த மண்ணெண்ணெய் டப்பாவை வாங்கி மூடியைத் திறந்து பார்த்தாள். அதற்குள் அவன் வீட்டுக் கதவைத் திறந்து விட்டான்.

"இது மூணு லிட்டரா அஞ்சா?"

"ஏன்? மூணுதான்."

"எங்களையெல்லாம் எவ்வளவு ஏமாத்தறான்! இனிமே கிரஸினாயிலையாவது நீங்க வாங்கிண்டு வந்துடுங்களேன்."

"பாக்கலாம், பாக்கலாம், பசிக்கு ஏதாவது உண்டா?"

"இதோ அரைமணியிலே தயார் பண்ணிடறேன்."

அடுத்த வாரம் வரை அவள் மண்ணெண்ணெய் டப்பாவைத் தூக்கிக் கொண்டு ரேஷன் கடைக்குப் போக வேண்டியதில்லை. அதற்குள் காஸ் இணைப்பு கிடைத்து விட்டால்? அடுத்த வாரம் அடுத்த வாரம் என்று ஆறு வருடங்கள் கழித்தாயிற்று. அப்படியிருந்தும் அந்த நேரத்தில் அவளுக்கு உற்சாகமாகத்தானிருந்தது.

## வாழ்க்கை வரலாற்றில் தவறா?

**மே. வங்காளத்தில் மார்க்கண்டேய முதலமைச்சர் ஜோதி பாசுவின் வாழ்க்கை வரலாறு ஒரு புத்தகமாய் வெளியாகியுள்ளது.**



**ஆனால், அந்தப் புத்தகத்தில் கூறப்பட்டுள்ள விஷயங்களில் பல சரியானவை அல்ல என்று கட்சி மட்டத்தில் புகார் எழுந்துள்ளது. அது சரி! பாசு என்ன சொல்கிறார்?**

**''நான் கூறியதாகப் புத்தகத்தில் எடுத்துக் கூறப்பட்டுள்ள வாசகங்களுக்கு மட்டுமே நான் பொறுப்பு. மற்றபடி, புத்தகத்துக்கான முழு பொறுப்பும் அதனை எழுதிய சுரபி முகர்ஜியைத்தான் சாரும்!'' என்கிறார்.**

**– மானஸா**



# ஜீவகாருண்யம்

தட்டினால் பிராணன் போகிற அல்பமான ஒன்று' என்று கொசுவை நிந்தித்தவன், ஒரு வழக்கிலே தோற்றுப்போய் ஊரை விட்டே ஓடினான். ஓடி ஓடிக் களைத்து, ஒரு காட்டில் புதருக்குப் பக்கத்தில் படுத்துத் தூங்கிப் போனான்.

அவனுக்குரிய சிரச்சேத தண்டனையை வழங்குவதற்கென்று ராஜா பதினாறு குதிரை வீரர்களை அனுப்பி வைத்தான். அந்தப் பதினாறு வீரர்களும் காட்டுக்குள் நுழையும் நேரம் இவன் நன்றாகத் தூங்கிக் கொண்டிருக்கிறான். இன்னும் அரை மணி பயணத்தில் அவர்கள் அவனை எட்டிவிடுவார்கள். அதன்பின் அவனுக்கு நேரக்கூடிய கதி என்ன?... அந்தச் சமயத்தில் 'உய்ங்'கென்ற சப்தத்தோடு ஒரு கொசு பறந்து வந்து, தூங்குகிறவன் கன்னத்தில் சுரீரென்று ஒரு கடி கடித்தது.

தூங்கிக் கொண்டிருந்தவன் 'அப்பாடா!' என்று துள்ளி எழுந்தான். விழிப்பு வந்ததால், தூரத்தில் குதிரைகள் வரும் சப்தமும் கேட்டது. ஓடி ஒளிந்து கொண்டவன் இதயத்தைப் பிடித்துக் கொண்டான்.

" 'கொசு சிருஷ்டி எதற்கு' என்று அலட்சியமாய்க் கேட்டேனே; இன்றைக்கு அந்தக் கொசு இல்லையென்றால் என் கதி என்ன...?! கொசுவும் வேண்டும் – அதைக் காட்டிலும் அல்பமாய் ஏதேனும் ஜீவன் இருந்தால் அதுவும் வேண்டும்..." – இப்படி சிந்திக்க ஆரம்பித்து விட்டான் அவன்!

ஆகையினாலே, மனிதர்களான நாம் கொசு கடிக்காமல் பாதுகாப்பாய் வேண்டுமானால் இருக்கலாமே யொழிய, 'கொசு எதற்கு?' என்று கேட்கலாகாது!

அப்படிக் கேட்டால் என்ன ஆகும்...? எல்லா கொசுவுமாகச் சேர்ந்து ஒரு சமாஜத்தை ஏற்பாடு பண்ணி, 'நம்மை அடிக்கிற இந்த மனிதர்கள் எதற்கு...?' என்று கேட்க ஆரம்பிக்கும்!!

'ஜந்துனாம் நரஜன்ம துர்லபம்' என்கிறார் ஆதிசங்கர பகவத்பாதாள். நம்மையெல்லாம் (நர ஜன்ம) ஜந்து (விலங்கு) கோஷ்டியில்தான் சேர்த்திருக்கிறார் அவர்!

கொசுவாகட்டும், மனிதனாகட்டும்... எல்லாமே ஜந்துக்கள் தான். ஆகவே 'கொசு எதற்கு?' என்று கேட்கும் அதிகாரம் நமக்குக் கிடையாது.

அஹிம்ஸை என்பது ரொம்ப முக்கியம். ஒருத்தர் 'விஷ்ணவே நம:' என்று அர்ச்சனை பண்ணும்போது பகவான் எதை உவக்கிறான்...? அந்த நாமாவை மட்டும் அல்ல... அஹிம்ஸை என்கிற தர்மத்தைக் கடைப் பிடித்துக் கொண்டு அந்த நாமத்தைச் சொல்



2

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சாரியார்

றாரே... அதுதான் பகவானுக்கு உவப்பு. நாம் கர்மானுஷ்டானத்தோடு இருந்தால்தான் நம்மை அவன் ஏற்பான்.

புஷ்பம் இந்த்ரிய நிக்ரஹ :- இந்த்ரிய நிக்ரஹம் என்பது ரொம்ப முக்கியம். அஹோபிலம் நாற்பத்து நான்காவது பீடாதிபதி முக்கூர் ஸ்ரீமத் அழகிய சிங்கர் வேடிக்கையாய் ஒரு நிகழ்ச்சி சொல்வார். சஹஸ்ரநாம பாராயணம் முடிந்ததும் கோவிலில் பிரசாத விநியோகம் நடந்ததாம். தோசை; சுண்டல் விநியோகம். அதை வாங்கிக் கொள்வதற்கு இரண்டு பேருக்குள்



சண்டை வந்து விட்டதாம். இவர் கேசத்தை அவர் பிடிக்க, அவர் கேசத்தை இவர் பிடிக்க...

கேசவனுக்கு எதிரே கேசத்தைப் பிடித்துக் கொள்கிறார்கள்! இந்த்ரிய நிக்ரஹம் இல்லை அங்கே... அவர்களால் நாக்கை அடக்க முடிய வில்லை. 'பிரசாதம் கொண்டு வந்து கொடுப் பார்கள் அமைதியாய் வாங்கிக் கொள் ளுங்கள்...' என்று சொல்லச் சொல்ல கேட் காமல் சண்டை! இத்தனை நேரமும் செய்த சஹஸ்ரநாம பாராயணத்துக்கே பிரயோ ஜனமில்லாமல் போய்விடுகிறதல்லவா!

இந்த்ரிய யஜமானர்களாக நாம் இருக்க வேண்டும். இந்த்ரிய நிக்ரஹத்தை அடைந்து, 'புஷ்பம் இந்த்ரிய நிக்ரஹ:' என்று சொல்லி அர்ச்சனை பண்ண வேண்டும்.

சர்வ பூத தயா புஷ்பம் : – எல்லா விலங்கு களிடத்திலும் தாவரங்களிடத்திலும் அன்பாக இருக்க வேண்டும். பூத தயையென்று பெயர் அதற்கு.

மரங்களை வெட்டுவது மஹா பாவம் என் கிறது வேதம். தாவரங்களிடத்திலும் நமக்கு தயை இருக்க வேண்டும் என்று பகவான் எதிர்பார்க்கிறார்.

க்ஷமா புஷ்பம் விசேஷதா – க்ஷமம் என் றால் இரட்டையைப் பொறுத்துக் கொள்ளும் குணம். இரட்டை என்றால்...? இரண்டு எல்லைகள் என்று பொருள். உஷ்ணம் – குளுமை; சுகம் – துக்கம்; லாபம் – நஷ்டம்; எல்லாவற்றையும் சமமாக பாவிப்பது.

துக்கம் வரும்போது சோர்ந்து உட்கார்ந்து விடாதே; சுகம் வரும்போது எகிறிக் குதிக்காதே. லாபம், நஷ்டம் எல்லாவற்றையும் சமமாக பாவிக்கத் தெரிந்து கொள்.

இது யாருக்கு சாத்தியமாகிறதோ அவனே உத்தமன்.

பூமி பிராட்டிக்கு க்ஷமா என்று ஒரு பெயர். ராமனுக்கு க்ஷமயா தரித்ரி என்று ஒரு வர் ணனை – பூமியைப் போன்று பொறுமை காப் பவன் என்று பொருள். வெட்டி வெட்டி எடுத்தாலும் நம்மைத் தாங்கி நிற்கிறதே, அந்த பூமிக்கு உள்ள பொறுமை நமக்கும் இருக்க வேண்டும்.

ஞானம் புஷ்பம் – நல்ல ஞானம் – ஐயம் திரிபற்ற முறையில் மகான்களிடத்திலே தினவடங்க கேட்டுப் பெறவேண்டும்.

'இவன் நம்மைக் காட்டிலும் வியா பகனாகப் போய்விட்டால் என்ன செய்வது...?' என்று சிஷ்யனைப் பற்றி ஒருவர் நினைப் பாரானால் அவர் ஆசார்யரே இல்லை. அதே போல், கேட்கிற சிஷ்யன் பக்தியில்லாமல் கேட் டால் அவன் சிஷ்யனே இல்லை; அப்படிக் கேட்பதால் அவனுக்குப் பலனேதுவும் கிடைக் கவும் செய்யாது.

தெளிந்த ஞானத்தைப் பெற்றவன் மற்ற வர்களைத் தெளிவிக்கவும் வேண்டும். ஒரு கதை சொல்வதுண்டு... ஒருத்தருக்குக் காலில் ரொம்ப புண் இருந்ததாம். ஒரே ரணம். 'ஐயோ! பகவான் என்னை அழைத்துக் கொள்ளாமல் இப்படி சோதிக்கிறானே!...' என்று அவஸ்தை யோடு வேறு ஒருத்தரிடம் போகிறார் அவர். தமது உபாதையைச் சொல்கிறார்.

அதைக் கேட்டவர் என்ன சொன்னாராம், 'அப்படியா? அவஸ்தைப் படறீரா...? பொடு தலையை வைத்துக் கட்டினால் குண மாகிவிடுமே...' என்றாராம்.

இவரும் பொடுதலை என்றால் என்ன வென்று கேட்கவில்லை; அவரும் பொடுதலை என்றால் என்னவென்று சொல்லவில்லை!

கேட்டுக் கொண்டு போனவர், தலையிலே பொடுகு உள்ள நபரைத் தேட ஆரம்பித்தார்! அப்படி ஒரு நபரைப் பிடித்து காலிலே வைத் துக் கட்டியும் கொண்டார். இரண்டு நாட் களுக்கு அவிழ்த்தே விடவில்லை!

மூன்றாவது நாள், 'விடுதலை'யானவர் கேட் டார் : "ஏன் சுவாமி! நான் என்ன அபகாரம் செய்தேன் உங்களுக்கு...? இப்படி என்னை அவஸ்தைப்படுத்தி விட்டீரே!"

தாம் திருவல்லிக்கேணியில் ஒருவரிடம் கேட்டதையும், அவர் பொடுதலையை வைத் துக் கட்டச் சொன்னதையும் விளக்கினார் கால்வலிக்காரர்.

விளக்கத்தைப் பெற்றவர் உடனே "திரு வல்லிக்கேணி எங்கே இருக்கு?" என்று கேட்க, "அதோ!" என்று அந்தத் திக்கைச் சுட்டிக் காட்டினார் இவர். உடனே அந்த திக்கை நோக்கி விழுந்து விழுந்து நமஸ்கரித்தாராம் கட்டுண்டவர்!

"ஏன் இப்படி நமஸ்காரம் பண்ணுகிறீர்?"

"நல்லவேளை! பொடுதலையை நசுக்கிக் கட் டுன்னு அவர் சொல்லாமல் விட்டாரே! அப் படிச் சொல்லியிருந்தால் என் கதி என்ன வாகியிருக்கும்? அவர் திக்குக்கு ஒரு நமஸ்காரம்!"

பொடுதலை ஒரு கீரை வகை – சொன்ன வரும் அதைச் சரியாகச் சொல்லவில்லை; கேட் டவரும் சரியாகக் கேட்கவில்லை!

கேட்பவருக்கு என்ன கொள்கலமோ, எத் தனை ஞானமுண்டோ, அதைப் பொறுத் துத்தான் சொல்ல வேண்டும். எப்பேர்ப்பட்ட கல்விமானாக இருந்தாலும் எதிராளிக்குப் புரியும்படியாக அவரால் விஷயத்தைச் சொல்ல முடியாவிட்டால் என்ன பலன்?

யாராவது வந்து ஏதேனும் கேட்டால், 'புத்த கத்தைப் பார்த்து நாளைக்குச் சொல்கிறேன்' என்று பதில் சொல்பவராக இருந்தாலும்

பயனில்லை. உடனுக்குடன் பதில் தரு வதுதான் ஞானம்.

"தெரியுமா, அவர் பெரிய பணக்காரர்!"
"அதுக்காக தும்மும்போதுகூட 'ரிச், ரிச்'னா தும்மணும்?"
— எஸ். அனந்த குமார்



**சொ**ன்னது இவ்வளவும் – பொது தலைக் கதை – சாமான்ய ஞானம் குறித்து... விசேஷ ஞானம் என்றால் பர மாத்ம ஞானம். பகவானைக் குறித்த சிறந்த அறிவு. உபநிஷத் ஞானம்; வேதாந்த ஞானம். அந்த ஞானத்தைத் தெளிவாகச் சொல்பவராய் இருக்க வேண்டும். கேட்கிறவரும் அதை கிர ஹிக்கும் சக்தியுடையவராய் இருக்க வேண்டும்.

இந்த ஞானத்தைத்தான் பகவான் விரும்புகிறான்.

'சுமையான கல்விகள்' என்றார் சுவாமி தேசிகன். எத்தனை விதமான வித்யைகளை நாம் கற்றாலும் அவை எல்லாம் சுமைதான்! 'அவனை'க் காட்டித் தரக்கூடிய வித்யை ஒன்றே வித்யை. அது ப்ரும்ம வித்யை. பரப்ரும்மத்தைக் காட்டும் வித்யைதான் மெய்யான ஞானம். ஞானம் புஷ்பம் என்று இதைத்தான் சொல்வது. இதை நம்மிடம் எதிர்பார்க்கிறான் பரமாத்மா.

தவம் (தபஸ்) புஷ்பம் – எம்பெருமானை எப்போதும் நினைத்து தபஸ் பண்ணுவது. தபஸ் என்றால் ஒன்றையே நினைத்து உரு குதல். 'அவதார காலத்தில் நீ இன்னின்னது செய்தாயே; ரக்ஷித்தாயே' என்று நினைத்து நினைத்து உருக வேண்டும். அந்தியும் பகலும் நீரறாத கண்ணினால் பகவானுடைய திருக் கல்யாண குணத்தை நினைத்து நினைத்து உருக வேண்டும். ஹோமம் செய்கிறபோது வசவோதாரையில் எப்படி நெய் இடைவிடாது விழுகிறதோ அப்படி கண்ணீர் இடைவிடாது வரவேண்டும்!

ஒருத்தர் பகவானுக்குச் சமர்ப்பிக்கப் பழம் இல்லையே என்று பேசாதிருந்தார்.

பகவான் அவரை வெறுமே விடவில்லை. "பழமில்லாவிட்டால் போகிறது; ஒரு காயாவது கொடு எனக்கு" என்றான்!

"காயும் இல்லையே..."

பகவான் பார்த்தான்... "காயில்லாவிட்டால் போகிறது; ஒரு பூவாவது எடுத்து வாருமே..."

"பூவே இல்லை; ஒரு பூ கூட கிடையாது!"

"சரி பூ வேண்டாம். ஒரு இலையாவது கொண்டுவாருமே..."

'துளசி' என்று சொல்லவில்லை பரமாத்மா. ஏதாவது ஒரு இலை – அதைக் கொண்டு வந்து திருவடியில் சேர்க்கக் கூடாதா என்றான்.

"இலையே இல்லை!" என்றார் அவர்!

"கனி, காய், பூ, இலை எதுவுமே இல் லையா... கொஞ்சம் தீர்த்தம் எடுத்து 'ஓம் விஷ்ணவே நம:' என்று சொல்லிச் சேர்ப் பியுமே..."

– பகவான் இப்படிச் சொன்னபோதும் கூட அந்த அஞ்ஞானி "தீர்த்தம் இல்லையே..." என்று தான் பதில் சொன்னார்!

"தீர்த்தம் கூடவா இல்லை...?"

"இல்லையே..."

"நிஜமாகவே இல்லையா...?"

"இல்லையே..." என்று வேகமாய்ச் சொன் னவரிடம் கேட்டான் பகவான் :

"உன் கண்கள் இரண்டிலும் கூட நீர் இல் லையா?... காய், கனி, பூ என்று எதையும் சமர்ப் பிக்க முடியாத நிலையில் உள்ளேனே என்கிற வருத்தம் இருந்தால் ஒரு சொட்டுக் கண்ணீர் வராதோ...? அது கூடவா இல்லை...?"

இதற்கு அர்த்தம் என்ன...?

எதையும் சமர்ப்பிக்க முடியாது போனா லும் உள்ளம் உருகி ஒரு சொட்டுக் கண்ணீர் விட்டாலே போதும் – கூடை கூடையாகப் பழங்களைச் சமர்ப்பித்ததற்கு அது சமமாகும்.

பகவான் நம்மிடத்திலே ரொம்ப பக்தி யைத்தான் எதிர்பார்க்கிறான். அப்படி அவனை நினைத்து நினைத்து உருகுவதுதான் தவம் புஷ்பம்.

தியானம் புஷ்பம்...? – காற்றில்லாத இடத் திலே ஏற்றிவைக்கப்பட்ட தீப ஜ்வாலை போல் ஒரே ரீதியாக ஆடாமல் அசையாமல் இருப் பது. மனம் சஞ்சலமில்லாமல் எம்பெருமானை தியானம் செய்வது.

சத்யம் அஷ்ட விதம் புஷ்பம்
விஷ்ணு : ப்ரீதி கரம்பவேத்

விஷ்ணுவுக்கு மிகவும் உகந்த புஷ்பம் சத்யம். சத்யம் என்பது என்ன...? அதை எப் படிப் பேசுவது...? எல்லாவற்றுக்கும் நமது வேதாந்த விசாரம் பதில் சொல்லியிருக்கிறது.

அடுத்த வாரம் பார்ப்போம்.

(தொடரும்)

எல்லாமே பாட்டியின் பெயர் வைத்த ராசிதான் என்றார்கள். பாட்டிக்கும் ஏறக்குறைய இதே வயசில்தான் கல்யாணமாயிற்றாம். போதாக்குறைக்கு செண்பகவல்லியின் நட்சத்திரமும், பாட்டியின் நட்சத்திரமும் ஒன்றுதான். எல்லோருக்குமே இப்படியெல்லாமா ஒற்றுமையாய் நடந்துவிடும் என்று ஆச்சரியமாய் இருந்தது. இன்னும் கல்யாணம் நடக்கவில்லைதான். ஆனாலும், வரன் அதுவாய் வருகிறதே. அதுவே பாதி முடிந்தது போல்தான். செண்பகவல்லியைப் பார்த்தால் யாருக்காவது பிடிக்கவில்லையென்று சொல்ல மனம் வருமா? அவளது கன்னங்கள் சிவந்து போயிருந்தன. மனம் சந்தோஷத்தில், நிரம்பி வழிந்தது. எப்படி எல்லாவற்றையும் பகிர்ந்து கொள்ள, யாரிடம் பகிர்ந்து கொள்ள...

தண்ணீர் எடுக்கப் போகும்போது லதா கேட்டாள். "செம்பா, கேள்விப்பட்டேன். நிஜம்தானா?"

"நிஜம்தான்னா...?" என்றாள் செம்பா புரியாத மாதிரி. மறைக்கற பாத்தியா... டீ, இப்பவே மறந்திராதே. இன்னும் காலம் கெடக்கு..."

"லூஸ் மாதிரி பேசாதே. இப்ப என்ன நடந்திருச்சு? அவங்க பொண்ணு பாக்க வரப் போறாங்க. அவ்வளவுதான். எதுவும் முடிஞ்சிரலை. முடிஞ்சா உனக்கெல்லாம் சொல்லாம இருப்பனா..." என்றாள் செம்பா.

குரலில் சந்தோஷம், லேசான வெறுப்பாய் மாறுவேடமிட்டிருந்தது. என்னைப் பெண் பார்க்க வருகிறவன் எப்படி என்னைப் பிடிக்கவில்லை என்பான்; எனவே எல்லாம் முடிந்துவிட்ட மாதிரிதான். நான் 'எதுவும் முடிஞ்சிரல' என்பது சும்மா ஒரு பேச்சுக்கு... இப்படி சில விஷயங்களும் அவளது குரலில் பொதிந்திருந்தன.

"ம்... கொடுத்து வச்சவ. நம்மாளு என்னிக்கு வரப் போறானோ... இப்ப என்ன பண்ணிட்டு இருக்கானோ..." என்றாள் லதா.

"தலைவர் மெல்ல வரட்டும். என்ன அவசரம் இப்போ..."

"நீ ஏன் சொல்ல மாட்ட... உனக்கு வேளை வந்திருச்சில்ல. இனி வாழ்வுதான்..."

"அலையாதடி. சரி, நீ மத்தியானமே வந்திரு..."

"வராம இருப்பனா. உன் ஆளு எப்படி இருப்பான்னு பாக்க வேண்டாமா...?"

தண்ணீர் குடத்தைத் தோழிகள் தூக்கிக் கொண்டபோது, அகல்யா எதிரில் வந்தாள். "என்னடி, உன்னைப் பெண் பாக்க வராங்களாமே... அம்மா சொன்னாங்க..."

"ஆமாக்கா..." என்றாள் செம்பா வெட்கமுடன். அகல்யா ஆறு வயது பெரியவள். எத்தனையோ பேர் அவளைப் பெண் பார்த்துவிட்டுப் போய் விட்டார்கள். எதனாலோ கல்யாணம் தள்ளிப் போகிறது பாவம் அக்கா. தன்னைவிட சின்னப் பெண்ணுக்குக் கல்யாணம் என்பது சற்று வருத்தமாகத்தான் இருக்கும். கல்யாணத்திற்கு வருவாளோ என்னவோ... செம்பாவிற்கு அகல்யாவின் மேல் விவரிக்க இயலாத இரக்கம் ஏற்பட்டது.

"பொண்ணு பாக்க வர்றதென்ன... எல்லாமே முடிஞ்ச மாதிரிதான். வர்றவன் இவளைப் பிடிக்காதுன்னு சொல்லிடுவானா..." என்றாள் லதா.

அகல்யா குழாயைத் திருகியவாறு



சொன்னாள். "அப்படில்லாம் சொல்லிர முடியாதுடி. பொண்ணு பாக்க வர்றவன் என்ன நினைச்சிருக்கானோ. நாமளா எதுவும் முடிவு பண்ணிர முடியாது. செம்பாவுக்கு இந்த வரன் முடிஞ்சா எனக்கும் சந்தோஷம்தான். ஆனா, முடியும்னு நாம எப்படி சொல்ல முடியும்? பெரிசா கனவு எதுவும் வச்சுக்காதே. எல்லாம் உறுதியாகட்டும். அப்புறம் கனவு காணலாம். ஏன்னா, உன்னோட வயசைத் தாண்டித்தான் நானும் வந்திருக்கேன். ஒருவேளை க்ளிக் ஆகலேனா, வருத்தப்படாதே. இதுதான் என் அட்வைஸ். எப்படியோ, வாழ்த்துக்கள்..."

சட்டென செம்பாவிற்குக் கோபம் வந்துவிட்டது. கஷ்டப்பட்டு உணர்ச்சிகளை மறைத்துக் கொண்டாள். சற்று நேரத்திற்கு முன் அகல்யாவிடம் ஏற்பட்ட இரக்கம் இப்போது வக்கிரமாய் மாறியது. வேண்டும் இவளுக்கு.



# இரண்டு பேர்

இப்படி கெட்ட எண்ணம் பிடித்து அலைந்தால் எப்படி இவளுக்குக் கல்யாணம் நடக்கும்? கடவுன் சரியாகத்தான் கூலி கொடுக்கிறார். இவளுக்கு வேண்டியதுதான். என்னைப் பார்த்தும் எவனாவது பிடிக்காது என்பானா? என் நிறமென்ன, முகவெட்டு என்ன... நான் என்ன, இவளை மாதிரியா கறுத்த தோலை வெளுப்பாக்க ஃபேர் அண்ட் லவ்லியும், முல்தானிமட்டியும் பூசிக் கொண்டு அலைகிறேன்? நிச்சயமாய் இவள் முன்னால் என் கணவனோடு போகத்தான் போகிறேன். அதைப் பார்த்து வயிறெரியட்டும். பொறாமை பிடித்த சனியன். இவளைப் போய் அக்காவாம்; வாங்க போங்கவாம்... என் விதி என்னை உயர்த்தினால் இவளுக்கென்ன?

"சரி அக்கா. வாடி, போகலாம்..."

அகல்யாவை விட்டுவிட்டு இருவரும் நடக்கத் துவங்கினார்கள். கொஞ்ச நேர மௌனத்திற்குப் பின் லதா, "யாரு மூலமாடி

## செ. சங்கர்பாபு

இந்த வரன் வந்தது?'' என்றாள்.

''எங்க மாமா ஒருத்தர் டவுன்ல டீக்கடை வச்சிருக்கார். அவருதான் நேத்து ராத்திரி வந்து சொன்னார். நாங்க யாருமே எதிர்பார்க்கலேடி. எனக்கே விஷயம் காலைலதான் தெரியும். இன்னும் கொஞ்ச நாள் கழிச்சுப் பாத்துக்கலாம்னு சொல்லிரட்டுமா...? பயமா இருக்குடி..."

''ஊரல"... வாய வச்சுக்கிட்டு சும்மா இரு. நீ ஒருத்தியாவது காலாகாலத்துல செட்டிலாகி, காதக் கொடு..." செம்பா காதைக் கொடுத்தவுடன் "...பட்டியல ஆரம்பிச்சு வைவீ..."

"ச்சீ..."

''என்ன ச்சீ... ரொம்ப பந்தா பண்ணாத... சரி, பையன் என்ன பண்றானாம்...?''

''சரியாத் தெரியலடி... ஏதோ சின்ன ஜவுளிக் கடை; டவுன் அப்படின்னு காதுல விழுந்தது. தூண்டித் துருவிக் கேக்க வெக்கமா இருந்துச்சு... நல்லவனாம், ஒரு கெட்ட பழக்கமும் கிடையாதாம்... பாக்க நல்லா இருப்பானாம்... காதுல விழுந்தது..."

"அப்ப, டவுன்ல சின்னதா கடை வச்சிருப்பான் போல. உங்க மாமாவுக்கு பக்கத்துக் கடையா இருக்கும்... நல்ல பொண்ணா பாருங்கன்னு சொல்லிருப்பான்; மத்த விஷயம் கூடக் குறைய இருந்தாப் பரவாயில்லைன்னு சொல்லியிருப்பான்... ஜவுளிக் கடை ஓனர்... அவன்கிட்ட இல்லாத துட்டா... ம்... அப்ப நீங்க ஜவுளிக்கடை ஓனர் சம்சாரமா...? கடைப் பக்கம் வந்தா ரேட்டு கொஞ்சம் குறைச்சுப் போட்டுக் கொடுடி..."

"போடி... முதல்ல முடியட்டும்..."

"முடியாம எங்க போயிரும்?"

செம்பாவிற்குப் பெருமையாக இருந்தது. எதிரில் தட்டுப்படும் மனிதர்கள் எல்லோருமே இன்று மிகவும் சந்தோஷமாய் இருப்பது போல் தோன்றியது. லதா சொன்னது எத்தனை உண்மை. ஹிஸ்டரி க்ரூப் மனிஷா கொய்ராலா என்றால் எல்லோருக்கும் தெரியும். ஸ்கூல் மாணவர்கள் 'மிஸ்மேலத் தெரு...' என்று கூட சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஆக, என்னைப் பார்த்தும் ஒருத்தனுக்குப் பிடிக்காமல்

போகுமா... தரையில் கால்படாது என்னைத் தாங்கப் போகிறான்.

இன்னொரு ஆறுதலையும் லதாவின் பேச்சு கொடுத்தது. இதற்கு முன்னால் பண விஷயங்கள் நல்லபடி முடிய வேண்டுமே என்கிற கவலை இருந்தது. இப்போது இல்லை. லதா சொன்னபடிதான் இருந்திருக்கும். "பொண்ணு மட்டும் பாக்க லட்சணமா, குணமா இருந்தாப் போதும். பணம் என்ன பெரிய பணம்... நம்மகிட்ட இல்லாததா..." என்று ஜவுளிக்கடை ஓனர் சொல்லியிருப்பார். செம்பாவிற்கு இப்போது நிம்மதியாக இருந்தது.

ஸ்கூட்டர் ஒன்று கடந்து செல்லவும் இருவரும் விலகிக் கொண்டார்கள். ஸ்கூட்டரின் பின்னால் இருந்தது, ஓட்டிச் செல்கிறவனின் மனைவியாக இருக்க வேண்டும். செம்பாவின் மனத்தில் சட்டென அந்தக் காட்சி புகுந்து விட்டது. இதுபோல்...! "நல்லா



"பெண்ணு ஓவியம் மாதிரி இருப்பான்னு தரகர் சொன்னதை நம்பி ஏமாந்துட்டேன்! மாடர்ன் ஆர்ட்னு சொல்லாம மறைச்சுட்டார்!"

— பாஸு

இறுக்கிப் பிடிச்சுக்கோ செம்பா..."

"முன்ன பின்ன உக்காந்ததில்லீங்க..."

"இதுக்கெல்லாம் ட்ரைனிங் எடுத்துக்கிட்டா வர முடியும் ஊரக..."

லதா மௌனத்தைக் கலைத்தாள். "மேற்படி கடைலயே உன் கல்யாணத்துக்குப் பட்டு எடுத்திரலாம்... இல்ல...?"

செம்பா பெருமையடைந்தாள். பதிலே சொல்லவில்லை. இனி பட்டுப் புடைவைகளுக்கு அவளுக்குப் பஞ்சமே இருக்கப் போவதில்லை. சிறிய விசேஷம் என்றாலும் "இந்தப் பட்டுச் சேலையைக் கட்டறது எவ்வளவு எரிச்சல்..." என்று முனகிக் கொண்டே பட்டு கட்டிக் கொள்ளலாம்.

"செம்பா, அப்ப ப்ளஸ் டூ பரீட்சை எழுதுவியா, மாட்டியா...?" என்றாள் லதா.

"என்னடி பண்றது...?"

"படிப்பு கெடக்கு. நம்ம காயத்ரி அக்காவப் பாத்தேல்ல...? ப்ளஸ் டூ படிக்கிறப்ப நல்ல வரன் வந்தது. மேல படிக்கணும்னு கோட்டவுட்டாங்க. இப்பப் பாரு... எம்.ஏ. டைப், அது இதுன்னு படிச்சிட்டு வரனை எதிர்பார்த்திட்டிருக்காங்க... ஒண்ணும் க்ளிக் ஆக மாட்டேங்குது...!"

இருந்தாலும் படிப்பு பெரிய விஷயம்தான். தபாலில் பி.ஏ., எம்.ஏ. எல்லாம் படிக்க வேண்டும். டவுன் காலேஜில்தான் செமினார் போடுவார்கள். நான் படிக்கப் போனால், சாயங்காலம் கூட்டிக் கொண்டு போக அவர் வந்து விடுவார். "நான் என் ஹஸ்பெண்டுக்காக வெய்ட் பண்றேன்!" அது மாதிரி எத்தனை தம்பதிகள் செமினார் வகுப்புகளிலிருந்து செல்கிறார்கள். அப்படியே தியேட்டர், ஹோட்டல்... ஒருவேளை அவர் வீட்டில் டி.வி.எஸ். சேம்ப் இருந்தால், அவர் ஓட்டக் கற்றுத் தருவார்.

"செம்பா, வீடியோ கவரேஜ் நீங்க எடுக்கணுமா, அவங்க செலவா...?" என்றாள் லதா.

"நாம எங்க எடுக்கறது...? போட்டோ எடுக்கறதே ரொம்பப் பெரிய விஷயம் எங்களுக்கு. அவங்க எடுத்தாத்தான் உண்டு..."

இதற்குள் வீடு நெருங்கி விட்டது. "அப்ப, மத்தியானமே வந்திரு. எனக்கு ஒரே டென்ஷனா இருக்கு. நீ வராம இருந்திராதே. நான் சரியா பாப்பேனா என்னவோ, நீதான் பாத்துச் சொல்லணும். இன்னொன்னு - நம்ம க்ளாஸ்ல எவகிட்டேயும் சொல்லிராதே... அப்புறமா சொல்லிக்கலாம்..."

"சரிடி, வரும்போது மருதாணி கொண்டு வரட்டுமா? வேண்டாம்... சரியா பிடிக்காது. நெய்ல் பாலீஷ் கொண்டு வரேன்..."

வீட்டை அடைந்தபோது, "அன்னநடை நடந்து வர்றதுக்கு நல்ல நேரம் பார்த்த போ.. டீ, லதா. ரேஷன்ல மண்ணெண்ணெய் ஊத்தறானாம். உங்கம்மாட்ட சொல்லிட்டு. மதியம் வந்திருடி சீக்கிரமா..." என்றாள் செண்பகவல்லியின் அம்மா.

ரேஷன், மண்ணெண்ணெய், சீனி, அரிசி, பாமாயில்... இவை இனிவரும் வாழ்வில் இடம்பெறப் போவதில்லை. காஸ், கலர் டீவி, வாஷிங்மெஷின்... செண்பகவல்லி மிகுந்த மனநிம்மதியுடனும், பாதுகாப்பு உணர்வுடனும் வீட்டினுள் சென்றாள்.

"மேகம் சூழ்வானிலே, ஆயிரக்கணக்கில், லட்சக்கணக்கில் நட்சத்திரங்களால் சூழப்பட்டு, நடு மையத்திலே தன்னிகரற்று வீற்றிருக்கும் சந்திரன் போல் காட்சியளிக்கும் நடுவர் அவர்களே...!" என்று கோபாலகிருஷ்ணன் உரத்தகுரலில் பேசத் துவங்கினால்

போதும். அரங்கமே காது கொடுத்துக் கேட்கும். பேச்சு முடிகிறபோது, 'முதல் பரிசு ந. கோபாலகிருஷ்ணன்' என்றுதான் இருக்கும். பேச்சுப் போட்டி மட்டும்தானா? முக்கிய விருந்தினர்கள் வரும்போது அவன்தான் அவர்களை வரவேற்பான். வந்தவர்கள் இவன் கவிதை மழையிலும், தமிழ் வேகத்திலும் வியந்து "இந்தப் பையனுக்குச் சிறந்த எதிர்காலம் உள்ளது. என்ன அழகாய்ப் பேசுகிறான்..." என்று சான்றிதழ் கொடுத்துச் செல்வார்கள்.

படிப்பிலும் கோபால் பெரிய ஆள்தான். ஆசிரியரே ஆச்சரியப்பட்டுப் பாராட்டியதுண்டு. "கோபால், எம்.ஏ. தமிழ் படி. பி.எட். முடிச்சிரு. நிச்சயம் நீ சிறந்த ஆசிரியராய் வருவாய்..."

எல்லோருமே கோபாலுக்கு ஒளிமயமான எதிர்காலம் அமையும் என்றுதான் நினைத்தார்கள். கோபாலும் அப்படித்தான் நினைத்திருந்தான். ஆனால் யாரும் எதிர்பார்க்காத ஒன்று நடந்தது. துரதிர்ஷ்டவசமாய் கோபாலின் தந்தை விபத்தொன்றில் மரணமடைய, விதி கண்மூடித் திறக்குமுன் கோபாலின் கனவுகளைக் கலைத்துப் போட்டது. திசைகள் குழம்பி, எது பாதையென தத்தளித்து, சுமக்க இயலாத பாரமாய் கோபாலின் தோளில் குடும்பப் பொறுப்பு விழ – எல்லாமே முடிந்து விட்டது. கனவுகள், திட்டங்கள், சேர்த்து வைத்திருந்த திறமைகள்; இயற்கையாய் வாய்த்திருந்த திறமைகள்.. எல்லாமே நொறுங்கிப் போய், மெல்ல மெல்லச் சிதைந்து – இப்போது கனவுகளின் அடையாளம் கூட இல்லை.

கோபால் புத்திசாலி. யதார்த்த நிலை அறிந்தவன். மனதைக் கஷ்டப்பட்டு சமாதானப் படுத்திக் கொண்டு, நிலைமையைப் புரிந்து கொண்டு, விதியின் திசையில் பயணித்து – இன்று சிறிய ஜவுளிக் கடை ஒன்றில் சாதாரண சிப்பந்தி.

'தனக்கு மட்டும் ஏன் இத்தகைய சரிவு நிகழ வேண்டும்?' கோபால் கடையில் கூட்டமில்லாத நேரம் யோசிப்பதுண்டு. என்றாலும், இதே திசையில் பயணித்தால் முன்னேற வாய்ப்புகளா இல்லை? இருக்கிறது. நாளையே சொந்தமாய் ஜவுளிக்கடை துவங்கக் கூடாதா? இந்தக் கடை முதலாளி கூட இப்படித்தான் வாழ்க்கையைத் துவக்கினார். சைக்கிளில் துணி சுமந்து சுற்றியவர்தான். அதுபோல் என்னாலும் முடியும். இந்தத் தொழிலை நன்கு கற்று, சூட்சுமம், நெளிவு, சுழிவுகளை உள்வாங்கிக் கொண்டு முன்னேற முடியும்.

கோபால் வாடிக்கையாளர்களை ஈர்க்கத் துவங்கினான். சிரித்துப் பேசினான்; அவர்களது திருப்தியே தன் பிறவிப் பலன் போல் நடந்து கொண்டான். கடைக்கு துணி சப்ளை செய்யும் ஏஜெண்டுகளிடம் நல்ல உறவை ஏற்படுத்திக் கொண்டான். இவர்களின் துணை நாளை தேவை.

தனிமையில் கோபால் யோசித்தான். வெறுமனே என்று, யாரால், எப்படி உதவி வரும் என்று எதிர்பார்ப்பது முட்டாள்தனம். இந்த மானுடக் கடலில் நானோர் துளி. என்னைப் பற்றிய அக்கறை யாருக்கு இருக்கப் போகிறது? நான் முன்னேறினால் என்ன, முன்னேறாவிட்டால் என்ன... என் மீது நம்பிக்கை வைத்து, உழைப்பை மதித்து, முன்னேற்ற யாராவது வருவார்களா? வருவார்கள் என்றது மனது. உன் முன்னேற்றத்தில் அக்கறை கொண்டவர்கள் ஏனில்லை? உன் மாமனார். உன்னை நம்பி பெண் கொடுத்தவர்.

கோபாலுக்கு வழி கிடைத்து விட்டது போல் இருந்தது. என்னை நம்பிப் பெண் கொடுத்தவர்கள்தான் எனக்கு உதவ முடியும். இதில் தவறு எதுவுமில்லை. அது ஒரு வாய்ப்பு. அந்த வாய்ப்பை நான் பயன்படுத்திக் கொள்ளப் போகிறேன். வருகிற மாமனார் கொஞ்சம் பசை உள்ளவராய் இருந்து விட்டால் போதும். அந்தக் கையைப் பிடித்துக் கொண்டு முன்னேறி விடலாம். ஜெயித்தவன் எது செய்தாலும் நியாயமாகி விடும்.

வேறு வழியே இல்லை. கோபாலின் மனத்தில் சிறிய ஜவுளிக்கடை உருக்கொள்ளத் துவங்கியது. சிறிய கடை ஒன்றுக்கு அட்வான்ஸ் கொடுத்து, துணிகள் கொள்முதலுக்கு பணம் கொடுத்து மாமனார் உதவி செய்கிறார். இது போதும். மீதியை இத்தனை வருட கடை அனுபவத்தைக் கொண்டு பார்த்துக் கொள்ள




*"என்ன இது? மன்னர் தாமே 'பராக் பராக்'னு கத்திக் கொண்டு வரார்?"*
*"அரசவை ஊழியர்கள் எல்லாம் ஸ்டிரைக்காம்!"*

*– வி.ரெங்கநாதன்*

லாம். நினைக்கும்போதே எத்தனை சந்தோஷமாக இருக்கிறது.

அப்போதுதான் எதிரிலுள்ள டீக்கடைக்காரர் சொன்னார். "கோபால் வயசு ஆகுதில்ல... நம்ம மருமக ஒருத்தி இருக்கா. நல்ல குணம். பாக்க நல்லா இருப்பா" என்று வற்புறுத்தினார். கோபாலின் வயதில் அவருக்கு இரண்டு குழந்தைகள் பிறந்து விட்டன என்றெல்லாம் விளக்கினார். "நம்ம வருமானத்துல கல்யாணம் தேவைதானா...?'' என்றான் கோபால்.

"அப்படிப் பாத்தா பாதிப் பேருக்கு கல்யாணமே ஆகாதுப்பா. வர்றவளோட நேரம் நீ ஓஹோன்னு ஆகலாம், இல்லையா..."

அதற்குத்தானே காத்திருக்கிறேன என்று கோபால் நினைத்துக் கொண்டான். "பொண்ணோட அப்பா என்ன பண்றாரு, வசதி எப்படி...?"



**''நம்ம தலைவர் ஏற்கெனவே கோர்ட்ல வேலை செய்திருக்கலாம்னு எப்படி ஊகிக்கிறே?''**

**''மீட்டிங்கில் பேசும்போது, 'பெரியோர்களே, பெரியோர்களே, பெரியோர்களே'ன்னு ஆரம்பிக்கறாரே!''**

**– வந்தவாசி பா.ஜெயக்குமார்**

"எல்லாம் உனக்குப் பொருத்தமான இடம் தான். முதல்ல பொண்ணைப் பாரு. மத்தத அப்புறம் பேசிக்கலாம். அப்புறம் சொல்லு நீ..."

அவரிடம் அதற்கு மேல் கேட்கத் தயக்கமாய் இருந்தது. அவரது வற்புறுத்தல் தாங்க முடியாமல் ஒப்புக் கொள்ள நேர்ந்தது. இப்போது என்ன நடந்து விட்டது? பெண் பார்க்கச் செல்வோம். பெண் வீட்டில் செழிப்பு இருக்கிறதா என்று பார்ப்போம். இல்லையென்றால் நாசூக்காய் மறுத்து விடலாம். எதையாவது சொல்லி தட்டிக்கழித்து விடலாம்.

"**எ**ன்னது... ஜவுளிக்கடைல வேலை பாக்கறவரா? வேண்டாம். எனக்கு இந்த இடம் பிடிக்கலை. காலைலயே தெரிஞ்சிருந்தா நான் அப்பவே சொல்லியிருப்பேன். அம்மா... இவ்வளவு காலம் கஷ்டப்பட்டது போதும். இதை விட நல்ல இடம் கிடைக்காமலா போகும்? ஒரு ஜவுளிக்கடைல வேலை பாக்கறவன கட்டிக்கிட்டு... ச்சே... நினைச்சே பாக்க முடியலை. அம்மா, எனக்கு அப்படி ஒண்ணும் வயசாயிரல்ல. இன்னும் காலம் கெடக்கு. உங்க இஷ்டத்துக்கு நான் ஆடினா, நானில்ல ஆயுசுக்கும் கஷ்டப்படணும்..." என்றாள் செம்பா. லதா அருகில் நெயில் பாலீஷோடு நின்றிருந்தாள்.

''என்னடி நினைச்சிட்டிருக்கே நீ... நம்ம குடும்ப நிலை தெரியுமில்ல...'' என்றாள் அம்மா.

''சொன்னாக் கேளு... இதைவிட நல்ல வரன் வரும்..." என்றாள் செம்பா உறுதியுடன்.

''சரிடி... அழாதே. வெளிய மாப்ள வீட்டுக்காரங்க இருக்காங்க... இப்ப நீ தகராறு பண்ணா நல்லா இருக்காது. முதல்ல காப்பி கொடுத்துட்டு வா... அப்புறம் பிடிக்கலைன்னு சொல்லி தட்டிக்கழிச்சிரலாம்..."

**கோ**பாலகிருஷ்ணன் அதிர்ச்சியைக் கஷ்டப்பட்டு மறைத்துக் கொண்டான். பெண் வீடு அத்தனை செழிப்பாய் இல்லை. வெள்ளை காணாத, பழுப்பேறிய சுவர், கொடியை அடைத்துக் கொண்டு சாயம் போன துணிகள், எப்போதோ வாங்கிப் போடப்பட்ட நிறமிழந்த ஸ்டூல் சேர், ரசமிழந்த கண்ணாடி, மஞ்சள் கயிற்றுடன் மாமியார், வாழ்க்கையால் சித்திரவதை செய்யப்பட்ட மாமனார், வரிசையாய்க் குழந்தைகள்... கோபால், இது அல்ல நீ எதிர்பார்த்தது. ஜாக்கிரதையாய் இரு. பெண் எப்படிப்பட்டவளாய் இருந்தாலும், எத்தனை அழகு, குணமுள்ளவளாய் இருந்தாலும் சரி என்று விடாதே... தலையசைத்தாயோ எதிர்காலம் அவ்வளவுதான்.

"அதெல்லாம் ஒரு காலம் தம்பி! அறுபத்தஞ்சுல... அப்ப நம்ம வீட்ல மட்டும்தான் ரேடியோ உண்டு...'' என்றார் பெண்ணின் அப்பா.

கோபால் வெளியே ஓடி விட விரும்பினான். அது முறையல்ல. வந்ததற்கு பெண் பார்த்து விட்டுச் சென்று விடலாம். அப்புறம் அது. இது என்று தட்டிக் கழித்து விடலாம். இதைவிட நல்ல இடம் கிடைக்கும்.

**அ**வள் காப்பியுடன் வந்தாள். அவளைப் பார்க்க பாவமாய் இருந்தது. என்னென்ன கனவுகளோடு வந்தாளோ... பாவம்!

அவன் காப்பியைப் பெற்றுக் கொண்டான். அவளைப் பார்க்கப் பாவமாய் இருந்தது. என்னென்ன கனவுகளோடு காத்திருக்கிறாளோ... பாவம்!

Secured Deposits

**OM SINDHOORI CAPITAL INVESTMENTS LTD.**

## A Group Company of Apollo Hospitals

## First Tranche - Rs.300 lakhs

## Trustees to the scheme - Canara Bank

## Complete compliance with RBI norms

## Investment Grade Rating CARE BBB+(FD)

## Instant Customer Service

### 'ACCESS' DEPOSIT SCHEMES

| Period of Deposit | Cumulative - Scheme 'A' | | Non Cumulative Deposits | |
|---|---|---|---|---|
| | Maturity Value for Rs. 1000/- | Rate of Interest Per Annum | Quarterly Scheme 'B' | Monthly Scheme 'C' |
| | | | Rate of Interest Per Annum | |
| 12 Months + 1 day | 1187 | 18.70 % | 17.50 % | 17.00 % |
| 25 Months | 1458 | 19.82 % | 18.50 % | 18.00 % |
| 36 Months | 1770 | 20.97 % | 19.50 % | 19.00 % |

**Regd. Office** : Ali Towers, 22, Greams Road, Chennai 600 006. Ph: 8223621, 8223652.

**Bangalore** : Unit No: 201, II Floor, Commerce House, 9/1, Cunningham Road, Bangalore 560 052. Ph: 2281529.

**Cochin** : II Floor, Rukiyabhag Complex, Ravipuram, M.G. Road, Cochin 682 016. Ph: 368401.

**Hyderabad** : No.6-2-3-1092/A/1, Rajbhavan Road, Somajiguda, Hyderabad 500 482. Ph: 316335.

**DEPOSITS ALSO ACCEPTED AT APOLLO PHARMACIES LOCATED IN CHENNAI**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Anna Nagar | Ph : 6216467 | K.K. Nagar | Ph : 4844415 | Kilpauk | Ph : 612224 |
| Mandaveli | Ph : 4935745 | T. Nagar | Ph : 8223865 | Nandanam | Ph : 454065 |
| P.H. Road | Ph : 8252472 | Saligramam | Ph : 425380 | Perambur & Porur | |

Medavakkam T. Road Ph : 6442095

**AT ALL LEADING BROKERS' OFFICES IN CHENNAI AND**

TAMILNADU : ○ Coimbatore : Ph : 439818/438793, 438196, 472257 ○ Trichy : Ph : 761194 ○ Madurai : Ph : 603607 ○ Karaikudi : Ph : 23481 ○ Kumbakonam : Ph : 23481 ○ Lalgudi : Ph : 622318

KARNATAKA : ○ Hubli : Ph : 351056, 351827. ○ Rane Bennur : Ph : 66590. ○ Belgaum : Ph : 435514.

For full text under Non-Banking Financial Companies & Miscellaneous Non-Banking Companies (Advertisement Rules 1977) refer Application Forms.

Capricorn

• Finance for New & Used Cars • Spot Finance for Shares

# பார்வைக்கு வந்தவை

● **உண்மையுடன் ஒரு வாழ்வு/என்.பி. ஜனார்த்தனன்/சோபனா ஆஃப்செட் பிரிண்டர்ஸ், 35, 3-வது மெயின்ரோடு, இண்டஸ்டிரியல் டவுன், ராஜாஜி நகர், பெங்களூர்- 560 044/ ரூ.300/-**

திருவண்ணாமலை யோகி ராம்சுரத்குமாருடன் நூலாசிரியருக்கு நேர்ந்த சந்திப்புகள் - அனுபவங்கள், சுவாரஸ்யமான சம்பவத் தொகுப்புகள்தாம்; சற்று நேர்த்தியாக எடிட் செய்யப்பட்டிருந்தால் ஆங்காங்கே விழும் தொய்வுகள் இல்லாமலிருந்திருக்கும்.

● **நீங்களும் திரைப்பட இயக்குநர் ஆகலாம்/எம். விஜய குமார்/இலக்குமி நிலையம், 53, கௌடியா மடம் சாலை, ராயப் பேட்டை, சென்னை-14/ ரூ.42/-**

இயக்குநராக இந்நூல் உதவுமா என்பதைவிட, சினிமாவின் பல்வேறு நுணுக்கமான பிரிவுகளைப் பற்றிய அறிமுகத்தை இதில் பெறலாம்.

● **ஜப்பான்/மணிமேகலைப் பிரசுரம், 4, தணிகாசலம் சாலை, சென்னை-17/ரூ.29/-**

ஜப்பான் நாட்டைப் பற்றிய சுவாரஸ்யமான கட்டுரைகள் இதில் உள்ளன. ஒரு தேசத்தின் சகல பரிமாணங்களையும் தொட்டுக் காட்டியிருக்கிற நேர்த்தி, வியப்புக்குரியது.

● **தடுமாற்றங்கள் பதினைந்து/ ஏ.ஏ.எச்.கே. கோரி/'ஷாராஸ்' - டி-109 முதல் மெயின் ரோடு, அண்ணாநகர் கிழக்கு, சென்னை-102/ ரூ. 24/-**

அழுத்தமும் ஆழமும் மிக்க சிறுகதைகள். ஒரு சராசரி மத்தியதர இளைஞனின் பார்வையில் யதார்த்த வாழ்வின் பல கூறுகள் இயல்பாக அலசப்பட்டிருக்கின்றன.

● **ஆப்பிரிக்க சினிமா / யமுனா ராஜேந்திரன் / தாமரைச் செல்வி பதிப்பகம், 31/48 இராணி அண்ணாநகர், சென்னை-78/ ரூ.35/-**

ஆப்பிரிக்க தேசத்துப் படங்கள், சில இயக்குநர்களைத் தமிழர்களுக்கு அறிமுகப்படுத்தும் நல்ல முயற்சி. வாசகனை மிகவும் சிரமப் படுத்தும் தமிழ்நடைதான் ஒரே குறை.

● **கம்ப்யூட்டர் கொஞ்சம்! கலகலப்பு கொஞ்சம் / இரா. முருகன், வி. ராஜாராமன்/ ஸ்நேகா, 348, டி.டி.கே. சாலை, முதல் தளம், ராயப்பேட்டை, சென்னை-14/ ரூ. 45/-**

வளமான நகைச்சுவையுடன் கம்ப்யூட்டர் குட்டிச்சாத்தானின் பற்பல அவதாரங்களை எளிமையாக விளக்கும் நூல். சிறுகதை போலப் படித்துக்கொண்டு போக முடிகிறது.

● **அவள்/லா.ச. ராமாமிருதம்/வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ.90/-**

லா.ச.ராவின் பெண்மையை மையப்படுத்திய சிறுகதைகளின் ஒட்டு மொத்தத் தொகுப்பு. 'த்வனி'. 'அபூர்வராகம்' போன்ற கதைகளில் ஆங்காங்கே மின்னல் போலத் தெரித்து உதிருமே சில வரிகள், உவமைகள், கிறுகிறுக்கச் செய்வன.

● **பாரதிராஜா: மண்ணும் மக்களும்/ டாக்டர் க. சண்முக சுந்தரம்/காவ்யா, 16, 17th Cross, Indira Nagar, Bangalore - 560038/ ரூ. 125/-**

பாரதிராஜாவையும் அவரது படங்களையும் ஆராயும் முயற்சி. முழுமையடையாமல், வெறும் தகவல்களாகவும் பட்டியல்களாகவும் அமைந்துவிட்டது. துதி வாசனை கொஞ்சம் தூக்கலாகி விட்டதும் ஒரு குறை.

● **Kothari's Guide to General Insurance/என். ராமச்சந்திரன், ஜி. வேலாயுதன்/ கோத்தாரி என்டர்பிரைசஸ், சென்னை/ரூ. 350/-**

நம் நாட்டில் அமுலில் உள்ள ஜெனரல் இன்ஷூரன்ஸ் முறையின் அடிப்படைகள், தீ விபத்து, திருட்டு முதலான பலவகை காப்பீடு முறைகள் - அனைத்தையும் விளக்கும் கையேடு. இன்ஷூரன்ஸ் துறை படிப்படியாகத் தனியார் மயமாகிவரும் இக் காலகட்டத்தில், தனியாருக்கும் சரி, ஸ்தாபனங்களுக்கும், தொழிலகங்களுக்கும் சரி... மிகவும் உபயோகமாய் இருக்கும்.

---

இன்றைய சமுதாயத்தில் வன்முறையும் பலவகை வேற்றுமைகளும் அவற்றால் விளையும் கலவரங்களும் மலிந்திருப்பது கண்கூடு. சுரந்தை பீர் முகம்மது தம் கதையில் மத வாதக் கலவரத்தின் ஓர் இழையைக் காட்டுகிறார். "ஆண்டவனைப் பத்தி யாரு பேசறா? மதத்தைப் பத்தில்லா பேசறாங்க?" பிரச்னையே இதுதான். ஆனால் கதை நம்பிக்கையோடு முடிகிறது.

சுப்ரபாரதி மணியனின் கதையில் இந்த நம்பிக்கை இல்லை. இரு மாநிலங்களிடையே எழும் தண்ணீர்ப் பிரச்னை. பிறந்து வளர்ந்த மண்ணிலிருந்தே வெளியேற நேரும் அவலம். "அகதி... இந்த வார்த்தையாலேயே அவன் இனி அழைக்கப்படுவான்" என்ற சோகத்தை வர்ணிக்க வார்த்தைகள் ஏது?

தமிழர்- சிங்களவர் என்னும் இருவேறு இனங்களிடையே நிகழும் மனப்பிளவையும் போராட்டத்தையும் செ. யோகநாதன் விளக்குகிறார்.

நம் சமூகத்தின் ஒரு மிகப் பெரும் கொடுமை குழந்தைகள் தம் குழந்தைப் பருவத்தைத் தொலைத்து விட்டு வறுமை காரணமாய்க் கூலிக்கு வேலை செய்ய நேர்வது. தனுஷ்கோடி ராமசாமியும் பாவண்ணனும் இப்பொருள் பற்றி உருக்கமாக எழுதியிருக்கிறார்கள். பாவண்ணன் தம் கதையை பாலாஜி என்ற சிறுவனின் (உயிரோட்டமுள்ள அருமையான பாத்திரச் சித்திரிப்பு) வாயிலாகக் கூறுகிறார். பாலாஜியின் நண்பனான சிறுவன் சின்னசாமி, "பாதங்களை அழுத்தி அழுத்தி வைத்து இடுப்பை ஒடித்து" தலைச்சுமையோடு நடந்து

போவதை நாமும் பார்க்கிறோம். ராமதாஸ் சார்போல நிலைமையின் கொடிய தாக்கத்தை உணர்கிறோம். மறக்கமுடியாத கதை.

பல கதைகள் கிராமப்புறப் பின்னணியில் அமைந்தவை. கீழ்ச்சாதி என்று கருதப்படும் ஒரு குடும்பம் காட்டுகிற எதிர்ப்பில் சமுதாய மாற்றம் புலனாவதைக் கந்தர்வன் தம் கதையில் சொல்கிறார். புளியமரம் "பிறை பிறையாய்ப் பிஞ்சுவிடுவ"தாகக் கூறும் அழகிய நடை அவருடையது.




வேறொரு கிராம சித்திரத்தைக் காட்டுகிறார் சிவகாமி. நலிந்தோர்க்கு உதவும் பொருட்டு அடிதடியில் இறங்கும் தனவேலின் முரட்டுச் செயல்பாடுகள் அவன் தாய்க்குப் பிடிக்கவில்லை. ஆனால் இன்னொரு நாதியற்ற குடும்பத்துக்கோ அவனுடைய இதே இயல்புதான் பாதுகாப்பாக இருக்கிறது. இரு தரப்புமே தம் தம் சார்பில் தனவேலிடம் பேசும்படி, விடுப்பில் வந்திருக்கும் நகரவாசிக் கல்லூரிப் பேராசிரியரைக் கேட்டுக் கொள்கிறார்கள்.

# வளத்தைக் காட்டும் சிறுகதைத் தொகுப்பு!

வாழ்க்கை என்பது எளிமையான விஷயமல்ல என்ற பாடத்தைப் பேராசிரியருக்குக் கிராமம் நிச்சயம் கற்றுக் கொடுத்திருக்கும். இயல்பான பாத்திரங்களும் உரையாடல்களும் சிறக்கின்றன.

முதியோர் இல்லப் பின்னணியில், யதார்த்தத்தை உணர்ந்து கொள்ளும் ஒரு மூதாட்டியின் கதையைச் சுவைபட விவரிக்கிறார் ராஜம் கிருஷ்ணன்.

சிறுகதை என்பது ஒரு முழு வாழ்க்கைப் பதிவாகவும் இருக்கலாம், நேர்மாறாக ஒரே ஒரு மனநிலைக் கீற்றாகவும் இருக்கலாம். இவ்விரண்டின் இரு நல்ல உதாரணங்களைத் தருகிறார்கள், முறையே திலகவதியும் சி.ஆர். ரவீந்திரனும். பிந்தையக் கதையில் கிழவர் கருப்பமுப்பன் ஆற்றாமையோடு பழைய பெருமைகளையும் இப்போதைய மனக்குறைகளையும் தமக்குள் சொல்லிக் கொண்டு போகப் போக அவரோடு நாம் ஒன்றிப் போகிறோம். மனசை நிறைவிக்கும் அழகான கதை.

சமூக விதிகளிலிருந்தும் மதிப்புகளிலிருந்தும் முரண்படும் வித்தியாசமானவர்களைச் சமூகம் மன்னிப்பதில்லை. இக்கருத்தை மா. அரங்கநாதன் சமகால நிலைகளிலும் ஜெயமோகன் காவிய நிலைகளிலும் அமைத்து மிக்க ஆற்றலுடன் சித்திரித்துள்ளார்கள். இரண்டும் சிந்திக்க வைக்கும், தனித்தன்மை கொண்ட கதைகள்.

பெண்ணின் தன்மானக் குரல், உளவியல் கூறுகள், தனிமனித உணர்ச்சிகள், வாழ்க்கையின் நடப்பியல் காட்சிகள் ஆகியவை அவற்றின் துயரங்கள் - சந்தோஷங்களுடன் மற்ற கதைகளில் இடம் பெறும் சில தன்மைகள். தோப்பில் முகம்மது மீரானின் கதை குறிப்பிடத்தக்கது.

படித்து முடித்ததும் முதலில் தோன்றுவது ஒரு நல்ல சிறுகதைத் தொகுப்பைப் படித்த திருப்தி, பல்வேறு வாழ்க்கை நிலைகள், சமூக சூழ்நிலைகள், மனித மனநிலைகள் ஆகியவற்றைப் பதிவு செய்யும் இக்கதைகள் பெரும்பாலும் சிறப்பாகவே அமைந்துள்ளன. ஆழமாய்ச் சித்திரிக்கப்பட்டுள்ளன. பொதுவாக, தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தின் வளத்தை இந்தத் தொகுப்பில் காணமுடிகிறது.

**— ஆர். சூடாமணி**

(சம்பந்திய தமிழ்ச் சிறுகதைகள்/ **தொகுப்பாசிரியர்கள்: வல்லிக்கண்ணன், ஆ. சிவசுப்பிரமணியன்/ நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, ஏ-5, கிரீன் பார்க், புதுடில்லி-110 016/ ரூ 37.**

"ரேணுகா அம்மன்!

ஒரு மண்டல விரத மிருந்து – சக்தி உபாசனை செய்து செவ்விளநீர் பறித்துச் சீவி அதில் மஞ்சள் சந்தனம் பொசித்து ஓம்சக்தி ஓம் சக்தி என்று சொல்ல அழகாய் விரல் நுனிகளில் பெருகிவரும் ரேணுகாவின் எழில்முகம்.

வான்முகிலை ஒரு திரைச் சீலையாய்க் கருதி ஒதுக்கி, அன்னை சக்தி எட்டிப் பார்க்கின்ற மாதிரியே இருக்கும். பக்தி சிரத்தை இல்லை என்றால் எத்தனை முயன்றாலும் அந்த முகத்தைப் பிடிக்க முடியாது. பிடித்துவிட்டால் அன்னை அகப்பட்டு விட்டாள் என்றுதான் பொருள். அகப்படுபவள் அருளாமல் போவாளோ?"

# ஆசை ஊஞ்சல்

டணங்... டணங்...

வீதி மையத்தில் கிருஷ்ணாராவ் வீட்டு வாசலாகப் பார்த்து குழிதோண்டிக் கொண்டிருந்தான் கோவில் ஊமை. அருகிலேயே ஐம்பதடி நீள கொடி மரத்து மூங்கில்.

ஊமையனைச் சுற்றிலும் வீதி சின்னஞ் சிறிசுகள்.

"என்னா ஊமை குழி தோண்டறான், அதுக்குள்ளாரவா ரேணுகா அம்மன் திருநாள் வந்துடிச்சி...?"

"பின்ன...? பங்குனி பொறந்துட்டாலே திருநாதானே? இனி ஆடியில கோட்டை மாரியம்மன் திருநாள் வரை ஜேஜேன்னு இருக்கும்."

வீதிப் பெரிசுகள் பேசிக்கொள்ள வெங்கட்ராமய்யர் வருகிறார். குழியை ஒட்டி நின்று கொண்டு நோட்டம் போடுகிறார். ரேணுகா அம்மன் திருநாளுக்கான காரியகர்த்தா.

இன்றைக்கு ஆஞ்சனேய கொடிமரம் ஏறிவிடும். வீதிக்கும் தெய்வீக களை வந்து விடும். மரம் நட்ட நாளிலிருந்து மூன்றாம் நாள் வீதியையே அடைத்துப் பந்தல் போட்டு, சீரியல் செட், டியூப் லைட் என்று தர்பார் செய்து, நடுவீதியில் ஊஞ்சல் இருக்கையில் ரேணுகா தேவி உருவம் பக்திசிரத்தையோடு உருவாக்கப்பட்டு அமர்த்தப்படும்.

ரேணுகா தேவி.

கன்னிப் பெண்களுக்கெல்லாம் காவல் தெய்வம்!

மூன்று நாட்கள் அவள் ஊஞ்சலில் விதவிதமான கோலங்களில் தோன்றி அருள்பாலிப்பாள்.

வசூலாகும் தொகையைப் பொறுத்து தெருவில் பாட்டுக் கச்சேரி, பட்டிமன்றம், சிலம்பாட்டம் என்கிற சமாச்சாரங்கள்.

எப்படியோ மூன்று நாட்களுக்கு வீதியில் ஸ்பீக்கர் பிளந்து கட்டப் போகிறது.

ஒவ்வொரு விளக்குக் கம்பத்துக்கும் ஒரு குழாய் கட்டி சிக்கு புக்கு ரயிலு பாட்டை போட்டு பக்தி வளர்க்கப் போகிறார்கள்.

சுற்று வட்டாரமே சாரி சாரியாக வந்து போகப் போகிறது.

விடலைகளுக்குக் கொண்டாட்டம்தான். ரேணுகாவை முன்வைத்து தங்கள் தேவிகா மேனகாக்களை சுற்றி வரலாம்.

ஒரு கோஷ்டி நாற்பது பக்க நோட்டுக்குடன் வசூல் வேட்டையிலும் இறங்கி விட்டது.

மோகன்ராம் வீட்டுக்குள் நுழைந்தபோது மோகன்ராம் தறிமேடையில் இருந்தான்.



இந்திரா சௌந்தர்ராஜன்

# 15

உள்நுழைபவர்களைப் பார்த்து சிரிக்கிறான்.

"என்னப்பா மோகன் நம்ப ரேணுகா அம்மனுக்கு எவ்வளவு எழுதப் போறே?" - என்று நோட்டை ஒருவன் முன்நீட்டுகிறான்.

"போச்சுடா... திருநா வந்துடிச்சா?"

"வராம... எவ்வளவுப்பா போட... ஐம்பதா நூறா?"

"கொழா கட்டுவீங்களா?"

"பின்ன...?"

"எல்லாரையும் செவிட்டுப் பயலாக்கிட்டு சாமி கும்பிடணுமா?"

"இதோ பார்... திருநான்னா ரேடியோ கட்டி பாடுனாதான்பா நல்லாருக்கும். உனக்குப் பிடிக்கலேன்னாதான் இருக்கவே இருக்கு நாம மலை அடிவாரம். போயிடு அங்கே..."

- அவர்கள் பேச்சை கனகாவும் கேட்டுக் கொண்டிருந்தான். அடுப்படியில் இருந்த மகாலட்சுமியிடம் போய் மற்ற விவரம் கேட்கிறாள்.

"அத்த... ரேணுகா அம்மன் திருநான்னா என்ன அத்த...?"

"ஒனக்குத் தெரியாதா அந்தக் கூத்து... நம்ம



நெசவாளர் கூட்டத்துக்கும் பெண்களுக்கும் ரேணுகா தேவி தாம்மா காவல் தெய்வம். ஆமா எதுக்குக் கேக்கறே?"

"இல்ல... அத்தான்கிட்ட ஒரு கூட்டம் டொனேஷன் வசூலுக்கு வந்துருக்காங்க. அதான் கேட்டேன்."

"அட... ஊமையன் குழி தோண்டுனது அதுக்குத்தானா? சரிதான்... இனி ஒரு வாரத்துக்கு வீதியே கோலாகலமா இருக்கும்."

"அப்ப நல்லா பொழுது போகும்னு சொல்லுங்க."

"ஆமாம்மா... நானும் வருஷா வருஷம் அந்த அம்மன்கிட்ட வேண்டிக்கத் தவறினதே யில்லை..." உன்னை மாதிரி கன்னிலக்ஷ்மி களுக்கு அவதானேம்மா காவல்?"

– மகாலட்சுமி எடுத்துக் கொடுத்த மறு கணமே கண்களை மூடிக் கொண்டு தியானிக் கத் தொடங்கிவிட்டாள் கனகா.

"என்னடி... கல்யாணம் நல்லபடி நடக் கணும்னு வேண்டிக்கிறியா?"

– கனகாவிடம் வெட்கம் இழையும் ஆமோதிப்பு.

**கை**யில் மஞ்சள் துணி. அதில் ஒரு ரூபாய் நாணயத்தை வைத்து முடிந்தபடி கண்களில் கசிந்த நீரையும் சுண்டி விட்டுக் கொண்டு கைகூப்பியிருந்தாள் பானு.

எதிரே சின்னப் பிறையில் ரேணுகா அம் மனின் படம்.

"அம்மா... என் ஆசை ஈடேறணும். உன்னைத்தான் மலை போல நம்பியிருக்கேன்" – அம்மனை வணங்கிய கையோடு அப்படியே திரும்பியவள் கிழவியையும் பார்க்கிறாள்.

மந்தாகிழவி இப்பொழுது முன் போல இல்லை. ஓர் ஓரமாகப் பந்து போல் சுருண்டு கிடக்கிறாள். நாளை அவள் எண்ணத் தொடங்கி விட்டாள். நன்றாகத் தெரிகிறது. பானுவையும் பயம் அவ்வப்போது வந்து கட்டி நெறிக்கிறது.

"பாட்டி... பாட்டி..." – கிழவியை அவள் அழைக்கும்போது "பானு" என்கிற குரல் அவளை அழைக்கிறது.

நிமிர்ந்தால், சுசீலா!

பானுவுக்கு சுசீலாவைப் பார்க்கவும் ஒரு தேவதையையே பார்த்து விட்டது போல மகிழ்ச்சி.

"வாக்கா... வா... வா..."

"என்னடி கடை சீக்கிரம் முடிஞ்சிடிச்சா?"

"ஆமாம்... உக்காரு. எப்படிக்கா இருக்கு உடம்பு...?"

"நீ எப்படி இருக்கே.... ஏன் ஆஸ்ரமத்துப் பக்கமே வராம போயிட்டே?"

கேள்வியோடு சாணி மெழுகிய தரையில் அமருகிறாள் சுசீலா. இப்பொழுது மாறி விட்டிருக்கிறாள். ஸ்டிக்கர் பொட்டு, கனகாம்ப ரம், முன்நெற்றியில் தலைமுடிப் பிசிறு, சென்ட்டு வாசம், தூக்கலாக முகப்பவுடர் எதையும் காணோம்.

தலையை சாதாரணமாக அள்ளி முடிந்து குங்குமப் பொட்டு வைத்திருக்கிறாள். புடை வையிலும் ரவிக்கையிலும் கூட காவிநிறம்!

"அக்கா நீ ரொம்ப மாறிட்டே..." என் கிறாள் பானு.

"கிழவிய எழுப்பு. அது என்னைப் பாக் கட்டும். இப்ப இந்தக் கோலத்துல என்னைப் பார்த்தா அது ரொம்ப சந்தோஷப்படும்."

"என்னன்னே தெரியலை. பாட்டி நாலு நாளா சாப்பிடவே இல்லை. சாப்ட்டாலும் ஒரே வாந்தி. எனக்குப் பயமா இருக்குக்கா..."

– பானு பற்ற வைத்த பயம் சுசீலாவையும் பற்றிக்கொள்கிறது. கிழவியை நெருங்கித் தொடுபவளுக்குத் தூக்கிவாரிப் போடுகிறது.

"ஆமாம்... டாக்டர்கிட்ட காட்றதுக்கு என்ன?"

"எங்க... ஒண்ணும் வேண்டாம்னு சொல் லுது. நீ கொஞ்சம் பாத்துக்கிறியா, நான் போய் கம்பவுண்டர் பழனிய கூட்டிக்கிட்டு வந்துட் றேன்..."

"போ போ.. நான் பாத்துக்கறேன்."

– பானு அடுத்த நொடி சுவர்க் கண்ணாடி யில் முகம் பார்த்து, லேசாய் சரிசெய்து கொண்டு வீதிக்குத் தாவுகிறாள். அருகிலேயே ரேணுகா அம்மன் படம். அருகே அவள் முடிந்து வைத்த அந்த ஒற்றை ரூபாய் மஞ்சள் துணி முடிச்சு.

சுசீலாவால் புரிந்து கொள்ள முடிகிறது.

'மோகன்ராம் கனகாவிடம் இன்னும் மயங்கி விடவில்லை. கல்யாணத்துக்கு ஒப்புதல் தந்துவிடவில்லை'. அதை பானுவிடம் கூறத் தான் வந்திருக்கிறாள் இப்போது. வந்த இடத்தில் மந்தா கிழவி விஷயம் திசை திருப்பி விட்டது.

மந்தாகிழவி ஹீனசுரத்தில் இப்பொழுது முனகத் தொடங்குகிறாள்.

"மந்தா... மந்தா... இங்க பார்... யார் வந்துருக் கேன் பாரு..." – அவளை மடியில் போட்டுக் கொள்ளாத குறையாகப் பேசும் போது கிழவி யிடமும் கண் கட்டு பிரித்த நிலையில் மசங் கும் பார்வையுடன் முனங்கல்.

"ஆரு சுசீலாவா?" என்கிற கேள்வி.

"ஆமாம் மந்தா... ஆமா என்ன உடம் புக்கு...?"

"வயசாயிடிச்சல்ல... அவ்வளவுதான்!"

"அப்படி எல்லாம் சொல்லாதே – இருந்து உன் பேத்தி கல்யாணத்தப் பாக்க வேண்டாமா நீ?"

"அவ்வளவு அதிர்ஷ்டம் பண்ணினவளாடி நான். பானுவுக்குக் கல்யாணம் நடக்குமா?"

"ஏன் அப்படி பேசறே... நல்லத நினை. நல்லதே நடக்கும். இந்த சுசீலாவுக்கே ஒரு நல்ல

வழி பொறந்துடிச்சே...?"

"கேள்விப்பட்டேன்டி. எனக்கு ரொம்ப சந்தோஷம். எப்படியோ நீ அந்த சாக்கடையில இருந்து மீண்டுட்டே. உசுர் போனாலும் நீ இனி அந்தப் பக்கம் போகக் கூடாது..."

"போக மாட்டேன் மந்தா... இன்னிக்குக் கூட திருப்பதி போகலாம்னு இருக்கேன்."

"ரொம்ப சந்தோஷம் போய்ட்டு வா. பானுவுக்கும் சேர்த்து வேண்டிக்கோ..."

"உன்னை ஏன் விட்டுட்டே... எல்லாருக்காகவும்தான் வேண்டிக்கப் போறேன். நடந்தே மலை ஏறப் போறேன் தெரியுமா?"

"சந்தோஷம் சந்தோஷம்..." - மந்தா மகிழ்ந்த ஜோரில் தடுமாறியபடி எழுந்து அமர்ந்து கொண்டு கைகளைப் பரபரவென்று சுழற்றித் தேடுகிறாள் எதையோ...

"என்ன தேட்றே?"

"டப்பால சில்லறை வெச்சருந்தேன். உண்டியலுக்குத் தரலாம்னு..."

"எல்லாம் நான் போட்டுக்கறேன்."

"சுசிலா எனக்கொரு உதவி செய்யணுமே நீ..."

"என்ன மந்தா...?"

"பக்கத்துல ஒரு பொட்டி இருக்கு பாரு..."

"ஆமா..."

"அதைத் திறந்து அதுல ஒரு துணிப்பை இருக்கும் பாரு, அதை எடுக்கிறியா?"

- சுசிலா பெட்டியை எடுத்துத் திறக்கவும் அதில் மந்தாவின் சில புதிய துணிகள் ஒழுங்காகக் கூட மடிக்கப்படாமல் கிடக்க கூடவே ராஜேஸ்வரி ஹால் நூல் பை ஒன்று சுருண்டு கிடக்கிறது.

"மஞ்சதுணிப் பையா?"

"ஆமா... அதைத் திறந்து அதுல ஒரு தாலி இருக்கும் பாரு, எடுக்கிறியா?"

- சுசிலா மந்தா சொன்னது போலவே அந்தத் தாலியை வெளியே எடுக்கிறாள். சற்றே பளபளப்பிழந்து விட்டாலும் தங்கம் என்றும் தங்கம்தான் என்கிற ஜோரில் கையில் மின்னுகிறது.

"எடுத்துட்டியா?"

"எடுத்துட்டேன். ஆமா இதை என்ன பண்ணணும்?"

"சுசிலா அது என் மகளோடது. அதை அந்தச் சாமி உண்டியல்ல போட்டு வேண்டிக்கோடி. என்கிட்ட இருக்கற ஒரே சொத்து இதுதான். இதையே நான் அந்த வெங்கடாஜலபதிக்கு தந்துடறேன். மனுஷங்களாலல்லாம் என் பேத்திக்கு விடியாதுடி. கடவுன் நினைச்சாதான் எதுவும் நடக்கும். வேண்டிக்கோடி... வேண்டிக்கோடி..."

- கிழவியின் உடைந்த குரலும், நீரைச் சொரியும் விழிகளும் சுசிலாவை ஒரு உலுக்கு உலுக்கிவிடும் அதே நேரத்தில்...



"என்னப்பா உடம்பெல்லாம் கட்டு?"

"போலீஸ்காரியை கல்யாணம் பண்ணியதற்குக் கிடைத்த பரிசு. புது பொண்டாட்டி ஆச்சேன்னு சீண்டினேன். ரோட் ரோமியோ ஞாபகத்தில் அடிச்சு நொறுக்கிட்டா!"

- பத்மா சந்தரம்

கம்பவுண்டர் பழனி வீட்டில் இல்லை. சோர்ந்து நிற்கும் பானுவிடம் "போம்மா வந்த உடனே அனுப்பறேன்" என்கிறாள் அவன் மனைவி.

"கொஞ்சம் சீக்கிரம் அனுப்புங்க..." என்று சொல்லிவிட்டு வீதியில் இறங்குபவள் ரங்காச்சாரி டீக்கடையைத் தாண்டும் போது தாமு பார்க்கிறான். உடன் ஜால்ரா!

"பானு எங்க போய்ட்டு வரே?" என்று டீச் சூப்பலோடு கேட்கிறான். பானு பதில் பேசாமல் ஒருமுறை முறைக்கிறாள்.

"கேக்கறேன்ல..."

"உனக்குச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. த்தூ!" - பதிலோடு காரி உமிழ்ந்து விட்டு அவள் நடக்கிறாள். டீக்கடையில் சிலர் அதைப் பார்த்துவிட்டு தங்களுக்குள் சிரிக்கின்றனர்.

"ஏன் தாமு... இப்படி காரித்துப்பிட்டு போறாளே. எப்படி படியவைக்கப் போறே?"

"புதுச்செருப்பு எப்பவும் கடிக்கத்தான் செய்யும். எண்ணெய் போட்டா சரியாயிடும்."

"அப்படின்னா...?"

"போகப் போக பாரு... எல்லா நாளும் வேடிக்கை பாக்க மாட்டேன். ஒருநாள் கதையை முடிச்சிடுவேன்.."

"பாத்துப்பா... அது கொஞ்சம் ரோஷக்கார பொண்ணு. தூக்குல கீக்குல தொங்கிடப் போறா."

"இவளை விடவும் மானஸ்திகளை எல்லாம் பம்பாய் மார்க்கெட்ல பாத்துருக்



"ஆஸ்பத்திரி வந்துட்டியா? நானே வீட்டிலே சமையல் செய்து பார்த்தேன்...!"
— வி.எஸ். கணேசன்

...கன். ஒரு வாரம் ஒட்டுத்துணி இல்லாம ஒரு வாய் சோறில்லாம வத்தப் போட்டா சொன்ன பேச்சை கேட்டுத்தான் தீரணும்."

"அப்ப கத்தி போய் வாளு வந்த கதையா சுசீலா போய் பானு வரப் போறாங்களே...?"

"ஆமா... ஆனா இந்த பானு எனக்கும் ஜவஹருக்கும் மட்டும்தான்."

ஒதுங்கியபடி தெனாவெட்டாக பேசிக் கொண்டிருக்கும் அந்த நொடிப் போதில் மோகன்ராமும் டீக்கடைப் பக்கம் வருகிறான்.

அவனைப் பார்க்கவும் தாமு முகத்தில் அசுரப் பரிமாணம்.

"இவனைத் தட்ட முடியலியே உன்னால..." – ஜால்ரா பேச்சு மோகன்ராமுக்குத் தாவுகிறது.

"பொறுத்திருந்து பாரு... இந்த திருநா சிலம்பச் சண்டையும் போது என்ன நடக்குதுன்னு..."

பொடி வைக்கிறான் தாமு.

என்ன நடக்கும்?

போன ஜோரில் தனியாளாகத் திரும்பியவளைப் பார்த்து விடைக்கிறாள் சுசீலா.

"என்னடி... பழனி வரலியா?"

"எங்கியோ ஊர் சுத்தப் போயிட்டான்" – சுரத்தில்லாத இளைப்பெடுத்த அவள் பதிலில் கூடவே அவளின் எக்கச்சக்க கலக்கம் தெரிகிறது.

"ஏண்டி ஒருமாதிரி இருக்கே... வழியில ஏதாவது..." – கச்சிதமாகப் பிடித்துக் கேட்கிறாள் சுசீலா.

"அக்கா" என்று அவள் தோளில் சரிகிறாள். கிழவியும் மசங்க மசங்கப் பார்க்கிறாள். ஒளிப் பந்தாய் உருவம் கலைந்து புலப்படுகிறது. துல்லியமில்லை. ஆனால் பானுவின் விசும்பலில் அவள் மனத்தில் இடி விழுந்து விட்டதை அந்தக் கிழவியால் புரிந்து கொள்ள முடிகிறது.

"ஏண்டி... என்னடி நடந்துச்சு... எங்க போய்ட்டு வரே?" என்று தன் பங்கு பதற்றத்தைக் கொட்டுகிறாள்.

"பாட்டி... அந்த தாமு சும்மா சும்மா என் வழிக்கு வந்துக்கிட்டே இருக்கான். எனக்குப் பயமா இருக்கு பாட்டி..." – என்று வெடிக்கவும் சுசீலாவும் கிழவியும் சமவிகிதத்தில் அதிர்கின்றனர்.

"நெருப்புல எரிஞ்சும் அந்தப் பயலுக்கு புத்தி வரலியே..." – கருவுகிறது சுசீலாவின் உதடு.

"ஆம்பளை இல்லாத வீடுன்னு அவன் சகடம் பண்றது எனக்கும் தெரியும்டி. ஐயோ நான் இருக்கும்போதே இப்படி நடக்குதே... இல்லேன்னா...?" – கிழவியிடமும் பகீர் உணர்ச்சியின் பெருக்கம். அந்த உணர்வின் வேகம் தாளாது உடம்பு அறுந்த தந்தி இழையாய் நடுங்குகிறது.

"மந்தா நீ கவலைப்படாதே. நான் பாத்துக்கறேன். போன தடவை சரியா எரிக்கலை. அதான் மீண்டு வந்துட்டான். இந்தத் தடவை ஜெயிலுக்குப் போனாலும் கவலையில்லை. நீ கவலைப்படாதே!"

"வேண்டாங்கா... எனக்கொரு நல்ல வழிய ஆண்டவன் காட்டிட்டான். எனக்காக நீ அழிஞ்சு போயிடாதே. என் தலையெழுத்து எப்படியோ அப்படியே ஆயிட்டுப் போகட்டும்."

"இப்ப தலையெழுத்து கால் எழுத்துன்னு புலம்பி என்னடி பிரயோஜனம்? எல்லாம் உங்கம்மா செஞ்ச தப்புடி. சாதி மாறி மதம் மாறி காதலிக்க ஆரம்பிச்சப்பவே கரடியா கத்தினேன். அவ கேக்கலை. இன்னிக்கு அதோட பலனை நீ அனுபவிக்கிறே. சமூகக் கட்டு மீறி தனிப்பாதைல போனா, இப்படித்தான்... நாயும் நரியும் வந்து கடிக்கப் பார்க்கும். பாக்கறவங்களுக்கும் நல்லா அனுபவின்னு தாண்டி சொல்லத் தோணும். பாவி.. பாவி!" – கிழவியால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

"இப்ப என்ன நடந்துடிச்சின்னு இப்படிப் புலம்பறே.. அதான் அந்த திருப்பதி சாமிகிட்ட விட்டுட்டேல்ல. கவலையேபடாதே. அந்த சாமியே நேர்ல வந்து உன் பேத்திய காப்பாத்தும். நம்பு மந்தா..."

"நம்பறேண்டி.... நம்பறேன். ஐயா வெங்கடாஜபதி நீதான்யா என் பேத்திக்குக் காவல். நான் இருக்கற இருப்பைப் பார்த்தா எப்ப வேணா என் மூச்சு நின்னுடலாம். இவளுக்கு ஒரு நல்ல வாழ்க்கை அமைச்சுக் கொடுய்யா, அமைச்சுக் கொடு..."

மந்தா கிழவியின் வேண்டுதலை கத்தரிக்கிறது வாசல்புறமிருந்து ஒரு குரல்.

"யாரது?" சுசீலா எட்டிப் பார்த்தபடியே நிமிறுகிறாள். பானுவும்... 'பழனியோ?' ஊஹூம்... இஸ்மாயில்!

(தொடரும்)

## மனநிம்மதியான முதலீடு - பரிபூரண பாதுகாப்பு (TM)

உங்கள் டெபாசிட்டுகள் T. நகரில் உள்ள பிரதான அசையா சொத்தால் (டோர் நம்பர் 27சி, பிளாக் 5488/1, ராமேஸ்வரம் ரோடு) பாதுகாக்கப்படுகின்றன.

| படித்த அனுபவம் மிக்க நிபுணர்களின் சீரிய நிர்வாகம் | கௌரவமான வருமானம் | மரியாதையான சேவை |
|---|---|---|

வங்கியல்லாத கம்பெனிகள் (ரிசர்வ் பேங்க்) வழிமுறைகள் 1977,
பகுதி - 1 விதி - 3 உபவிதி - XIஇன் கீழ் விதிவிலக்கு அளிக்கப்பட்டது.

**REGISTERED EDUCATIONAL TRUST NO. 1488.**

**In Education from 1979**

நமது மாணவர்களின் எண்ணிக்கை மதிப்பீடு: வருடத்திற்கு 1 லட்சம் பேர்.
150 பேராசிரியர்கள் சேவை செய்கிறார்கள்.

நடத்தப்படும் படிப்பு பயிற்சிகள் IAS, IPS, IIT, BE, MBBS, BL, MBA, MCA, AIPMD, SSC, AMIE, Chartered Manager Courses, TNPSC, Spoken English/Hindi, BSRB, RBI, SBI, LIC, GIC, Computer courses, GMAT, GRE, TOEFL, Business Technology, etc

### வாடிக்கையாளர் வசதி திட்டம்: (TM)

30 தினம் 18% PA, 45 தினம் 19% P.A.
60 தினம் 20% PA, 90 தினம் 21% P.A.

எப்போது வேண்டுமானாலும் பணம் எடுத்துக் கொள்ளலாம்.
புதுப்பிப்பதற்காக வர வேண்டிய அவசியமில்லை.

### மாதப் பென்ஷன் திட்டம் (TM)

| டெபாசிட் | காலம் | மாதவட்டி ரூ. |
|---|---|---|
| 5000 | 1 வருடம் | 125 |
| 10000 | 1 வருடம் | 250 |
| 10000 | 3 வருடம் | 300 |
| 10000 | 5 வருடம் | 320 |

வருமானவரி இல்லை * வருமானவரி இல்லை * வருமானவரி இல்லை

**சேமிப்பு கணக்கு: 15%P.A. தினசரி புராடக்ட், மாதாமாதம் வரவு.**

### சட்ட ஆலோசகர்

ஸ்ரீ V.S. சந்திரசேகரன், B.A;B.L.
அட்வகேட், உச்சநீதி மன்றம்,
26, ரங்கநாதன் தெரு, சென்னை - 17.

### ஆடிட்டர்

M/S. வேல் முருகன் அண்ட் கோ
சார்ட்டர்ட் அக்கவுண்ட்டன்ட்ஸ்
30/A 2 பார்கிட் ரோடு, சென்னை - 17.

## ஆல் வேல்டு அக்கவுண்டிங் அட்மினிஸ்ட்ரேடிவ் அண்ட் டெக்னலாஜிகல் அகாடமி(AAAAA)

## All-World Accounting Administrative and Technological Academy.

தலைமை காரியாலயம்: "வித்யாலயா", 27சி, ராமேஸ்வரம் ரோடு, மாம்பலம் ரயிலடி சமீபம், Next to DAV School, T. நகர், சென்னை - 17.

கிளை: 7, முதல் மாடி, ஸ்டேஷன் ரோடு, தாம்பரம் சானடோரியம், சென்னை - 47.
கிளை: 5, 2வது மெயின் ரோடு, நியு காலனி, குரோம்பேட்டை, சென்னை - 44.
கிளை: 13, காலேஜ் ரோடு, நங்கநல்லூர், சென்னை - 114.

**Sunday Working Day**

MUMBAI : 1, Deepal Apartments, Jain Hind Colony, Gupte Road, Dombivli West - 421 202.

உங்கள் வீட்டிற்கும் வந்து சேவை செய்கிறோம். போன் : 4348560, 4347025.
AAAAA — பாதுகாப்பின் சின்னம்.

Prof. V. விவேகானந்த்
B.Com, (Distn), DOA, MBA (Distn), CAIIB (All India First), EKSAMD (Germany) (Distn), B.L.
Managing Trustee.

Dr. பரமேஸ்வரி, MBBS,
Managing Trustee.

சொத்து பாதுகாப்பு, மாத வட்டிக்கும், அசலுக்கும் முன்கூட்டியே செக்.

(TM) :Trade Mark

# முதல் நகை தந்த அனுபவங்கள்!

## அன்பை நினைவூட்டும் தோடு!

**நா**ன் கல்லூரி ஆசிரியராகச் சேர்ந்த சமயம். காதை நிறைக்கும் படி தங்க நாணயம் கொண்டு செய்யப்பட்ட தோடு ஒன்று அப்போது பிரபலம். அதை வாங்கியணிய எனக்கும் ஆசை. கண்டிப்புக்குப் பேர் போன என் தந்தைக்கு அந்த மாடல் பிடிக்கவில்லை. ஆசையிருந்தாலும் எனது முதல் மாதச் சம்பளத்தை அப்படியே என் தந்தையிடம் கொடுத்து விட்டுப் பேசாமல் இருந்து விட்டேன். ஆனால் என் தந்தையோ அன்று மாலையே என்னை அழைத்துச் சென்று அந்த மாடல் தோட்டை வாங்கிக் கொடுத்தார். அந்தத் தோடு எனது ஆசை மட்டுமல்ல; என் தந்தையின் அன்பையும் நினைவுபடுத்துகிற ஒன்று.

திருமதி நிர்மலா, சென்னை – 36.




## தோழிக்குக் கொடுத்த சந்தோஷம்!

**கு**ருவி போல் சேமித்த பணத்தில் எனக்கு இரண்டு பவுன் செயினும் எனது தோழிக்கு அவள் திருமணப் பரிசாக ஒரு சிறு காதணியும் வாங்க அவளுடன் கடைக்குச் சென்றேன். வாங்கிக் கொண்டு வீடு திரும்பிப் பார்த்ததில் அவளுக்குத் தர வேண்டிய காதணிகள் என்னிடமும் என்னுடைய செயின் அவளிடமும் மாறிப் போயிருந்தது தெரிந்தது. ஏழையான அவளே அந்தச் செயினை தாலிச் செயினாகப் பயன்படுத்தட்டுமே என்று நினைத்து அவளிடமும் சொன்னேன். அப்போது அவள் முகத்தில்தான் எத்தனை சந்தோஷம்! அதைப் பார்த்து எனக்கும் சந்தோஷம்!

புஷ்பா ஸ்ரீநிவாசன், சென்னை – 4.



## அதிசய மருமகன்!

**1960**-ல் எங்கள் திருமணம். டெய்லரான என் கணவருக்கு தீபாவளி போனஸாக நாற்பத்தைந்து ரூபாய் கிடைத்தது. அதில் எனக்கு ஜிமிக்கி வாங்குவதற்காகச் சென்றோம். எங்களோடு என் தந்தையும் வந்தார். அரைப் பவுன் ஜிமிக்கி 55 ரூபாய். 'பத்து ரூபாய் கொடுங்கள்; வீட்டில் வந்து தருகிறேன்' என்று என் கணவர் என் தந்தையிடம் வாங்கி ஜிமிக்கி வாங்கிக்

கொடுத்தார். வீட்டுக்கு வந்ததும் மறுநாளே அந்த ஜிமிக்கியை அடகு வைத்து என் தந்தையிடம் வாங்கிய கடனை அடைத்தார். அதை எப்படி என்னால் மறக்க முடியும்?

கமலா கைலாசம், திருவையாறு.

## தாலியின் மகிமை!

நான் மிகவும் வசதி படைத்த குடும்பத்தைச் சேர்ந்தவள். என் பெற்றோர் ஏராளமான நகைகளையும் எனக்காகச் சேர்த்திருந்தனர். இந்த நிலையில் ஏழை ஆசிரியரை நான் காதலித்து மணம் முடிக்க எண்ணியபோது என் பெற்றோர் தடை போட்டனர். என்றாலும் என் பிடிவாதமே வென்றது. எங்கள் வழக்கப்படி தாலியை மணமகன்தான் வாங்கி வர வேண்டும். வசதிக்குறைவான அவர் எப்படியோ அதை வாங்கி வந்தார். எப்படி எனக்குத் தாலி வாங்குவதற்காகத் தாம் ரத்த தானம் செய்து பணம் சேர்த்தாராம். இன்று வசதி வந்து எத்தனையோ நகைகளை அவர் வாங்கித் தந்திருந்தாலும் அன்று அவர் எனக்குத் தாலி வாங்குவதற்காகப் பட்ட கஷ்டத்தை மறக்கவே முடியாது.

ஜெ. செல்வி, சென்னை – 10.

## மறக்க முடியாத செயினும் தோடும்!

என்னுடையது காதல் திருமணம் என்பதால் என் பெற்றோருக்கு அதில் சம்மதமில்லை. எனவே, நான் அணிந்திருந்த தோடு, மூக்குத்தி உள்பட அனைத்தையும் என் பெற்றோர் வாங்கிக் கொண்டு விட்டனர். இந்த நிலையில் என் மாமனார் எனக்கு வாங்கித் தந்த முக்கால் பவுன் தோடும் என் கணவர் வாங்கித் தந்த நான்கு பவுன் செயினும் என் வாழ்க்கையில் மறக்க முடியாதனவாகி விட்டன.

ஜெ. ஈஸ்வரி, மதுரை – 14.

## கடனை அடைத்து, சிறுகச் சேமித்து...

என் தந்தைக்கு வியாபாரத்தில் பெரு நஷ்டம். என் நகைகளையும் விற்றுக் கடனை அடைத்தும் முடியாத நிலை. இந்த நிலையில் எனக்கொரு வேலை கிடைத்தது. அதன் மூலம் கடனை அடைத்து முடிக்க ஐந்து வருடமானது. அப்புறம் சேமித்து இரண்டு கிராமில் ஒரு மோதிரம் வாங்கி அணிந்து கொண்டேன். பதினைந்து வருடங்களானாலும் அந்த மோதிரம் மறக்க முடியாத ஒன்றாக இன்னமும் இருக்கிறது.

என். சாந்தினி, மதுரை – 9.

## ஆலிலைக் கண்ணன் அளித்த மகிழ்ச்சி!

நான் படிக்கும்போதே பகுதி நேரமாக வேலையும் பார்த்தேன். அதில் முதல் மாதச் சம்பளமாக எண்ணூறு ரூபாய் கிடைத்தது. அதை அப்படியே பெற்றோரிடம் கொடுத்து ஆசி வாங்குவதை விட தங்கமாக எதையாவது வாங்கிப் பெறலாமே என்று ஆசை. அதன்படியே ஆலிலைக் கண்ணன் டாலர் ஒன்றை வாங்கிச் சென்று ஆசி வாங்கினேன். அதை ஒரு கயிற்றில் கோத்து எனக்குப் பெற்றோர் அணிவித்த போது ஏற்பட்ட சந்தோஷத்துக்கு இணைதான் ஏது?

அரிச்சந்திரன், சென்னை – 24.

# பொன்மழை பொழிந்த வருக்குப் பொன்னாடை!



கல்கி வாசகர்களுக்குக் கடந்த பன்னிரண்டு வாரங்களாக, வாரம் ஒரு சவரன் வழங்கி வந்தது பாலு ஜுவல்லர்ஸ் நிறுவனம்.

மூன்று மாத காலமாக நமது வாசகர்களைப் பொன்மழையில் நனையச் செய்த பாலு ஐயப்பனுக்குப் பொன்னாடை போர்த்தி, கல்கியின் காவல் தெய்வமான விநாயகரை அன்புப் பரிசாக வழங்குகிறார் கல்கியின் பதிப்பாளர் கி. ராஜேந்திரன்.

படம் : யோகா



## எது அழகு?

எனது குழந்தைகளுக்கு நான் செய்ய வேண்டிய கடமைகளையெல்லாம் குறைவில்லாமல் செய்து முடித்தபின் ஓர் ஆசை. எனது சேமிப்பில் ஒரு வைர மோதிரம் வாங்கி அணிந்தேன். அடுத்த நாளே முழு சூரிய கிரகணம். சூரியன் மெல்ல மெல்ல மறைந்து ஒரு வைர மோதிரம் போல் ஜொலித்தபோது, 'உன்னுடைய விரலில் இருக்கும் வைர மோதிரம் அழகா, இல்லை என்னுடைய வைர மோதிரம் அழகா?' என்று என்னைப் பார்த்து சூரியன் கேட்பது போல் இருந்தது!

கே. வி. ராமன், சென்னை - 73.

## மோதிர அனுபவம்!

சிறுவயதில் பெற்றோர் எனக்கு செயின் அணிவித்து மகிழ்ந்தபோதும் நானே எனது சேமிப்பில் நகை வாங்கியது இருபதாவது வயதில்தான். என் கம்பெனியில் போட்டிருந்த சீட்டுப் பணத்தில் ஒரு பவுன் மோதிரம் வாங்கினேன். மறுநாளே என் தந்தையை ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டிய நிலையில் அதை அடகு வைக்க வேண்டியதாயிற்று. பிறகு என் தந்தையையும் மீட்க முடியவில்லை; மோதிரத்தையும் மீட்க முடியவில்லை!

எஸ். சல்மான்பாரிஸ், பாம்பன்.

## மறக்க முடியாத செயின்!

எனக்கு நான்கு சகோதரிகள். அவர்களுக்குத் திருமணம் செய்தபோது தம்மிடமிருந்த எல்லா நகைகளையும் கொடுத்துவிட்டு வெறும் மஞ்சள் கயிற்றை அணிந்து கொண்டிருந்தார் என் தாயார். நான் வேலைக்கு வந்த பிறகு ஒரு செயின் வாங்கி என் தாயாருக்குத் தந்தேன். அப்போது நவராத்திரி ஆனதால் அதை அம்பாளின் கழுத்தில் போட்டு விட்டார் என் தாயார். என் தந்தை அந்தப் பத்து நாட்களும் அம்பாளுக்கு மாலை போட்டு வணங்குவது வழக்கம். திடீரென்று ஒருநாள் பார்த்ததில் அம்பாளின் கழுத்திலிருந்த செயினைக் காணோம். பழைய மாலையைக் கழற்றுகிற போது அதனுடனேயே போய் விட்டது செயின். பழைய மாலைகளைக் குளக்கரையில் போட்ட இடத்தில் போய்த் தேடியபோது செயின் கிடைத்து விட்டது. அப்பப்பா அப்போது ஏற்பட்ட சந்தோஷம்!

எஸ். நடராஜ், கல்கத்தா - 86.

**இந்த வாரம் ஒரு சவரன் பரிசு பெறுபவர் :**
**கே. கமலா கைலாசம்,**
**24, மேட்டுத் தெரு,**
**திருவையாறு - 613 204.**

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1997

**முதல் பரிசு : ரூ. 2,500**

**இரண்டாவது பரிசு : ரூ. 2,000**

**மூன்றாவது பரிசு : ரூ. 1,500**

உடனடியாக எழுத ஆரம்பித்து விட்டீர்களா?
கதைகள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி : ஜூன் 15.
முழு விவரங்களுக்குச் சென்ற இதழைப் பாருங்கள். அல்லது அடுத்த வார இதழுக்குக் காத்திருங்கள்!

# வட்டமேஜை



## "விலையேற்றம் ஒரு விஷயமே அல்ல!"

✉ தமாகா. தலைவர் பேட்டி கண்டேன். அவரது கட்சியின் ஆண்டு நிறைவையொட்டி பேட்டி கண்ட முதல் பத்திரிகை கல்கிதான் என்று நினைக்கிறேன். மூப்பனார் என்ற சொல்லுக்கே எளிமை என்னும் அகராதியைப் படைத்தவர். பேட்டியின் இறுதியில் அவர் கூறிய வார்த்தைகள் சிந்திக்க வேண்டிய ஒன்று.
சிதம்பரம், ஜி. துளசி கணபதி.

✉ பெண் குழந்தைகளுக்கு நிகழ்ந்த கொடூரம் பற்றிய தலையங்கத்தைப் படித்தபோது வேதனை கலந்த திகைப்பு ஏற்பட்டது. "குழந்தைகளுக்குப் பாதுகாப்பான, ஆரோக்கியமான சூழலை உத்தரவாதம் செய்யாத பள்ளிக்கூடங்கள் கடு காடுகளுக்குச் சமம்" என்ற வரிகள் மிகவும் அளவா னவை.
சென்னை - 23, த. சத்தியநாராயணன்.

✉ ரஜினியின் 'அருணாச்சலம்' - ஓர் எக்ஸ்பிரஸ் டிரெய்லர், ஒரு அவுட்டோர் ஷூட்டிங் பார்த்த அனுபவத்தைத் தந்தது.
மதுரை - 10,
பெ. பொன்ராஜ பாண்டி.

✉ சூப்பரான முன் அட்டைப் படத்தையும் பின் அட்டைப் படத்தையும் வெளியிட்டு, சூப்பரின் படத்தைப் பற்றியும் எழுதிய உம்மை, இனிமேல் சூப்பர் கல்கி என்றே அழைக்க வேண்டும்!
நாகூர், நிலா காதலன்.

...தரும்!
...வேலூர் - 6,
வே. ந. கதிர்வேல்.

✉ 'படித்ததில் பிடித்தது' - எனும் தலைப்பின் கீழ், படித்ததில் பிடிக்காததைப் பற்றி விமர்சனம் செய்தது போல் உள்ளது. திரு. வண்ணநிலவனின் நூல் விமர்சனம். விமர்சனம் என்பது குறை, நிறை இரண்டையும் கூறினாலும், பாஸிடிவ் அப்ரோச்சாக இருக்க வேண்டும்.
பங்களூர், மஞ்சுநாத்.

✉ ரமாமணி சுந்தர் "செமினார்" மகாத்மியத்தை நார்நாராகக் கிழித்து விட்டார்!
சென்னை - 44, எஸ். கிருஷ்ணசுவாமி.

✉ தமிழ்த் திரையுலகிற்குப் புதிதாக வந்திருக்கும், தமிழ்த் துறை அமைச்சரின் மகன் பாரியாவது தமிழ்த் திரைப்படங்களில் நடந்து கொண்டிருக்கும் 'தமிழ்க் கொலை'யை நிறுத்தினால் சரி!
கமுதி, ஜே.வி.ஆர்.

✉ கல்கியின் தரத்தையும், விலையேற்றத்தின் அத்தியாவசியத்தையும் நாங்கள் உணர்கிறோம், புது விலையிலும் எப்போதும் போல ஆதரவு தர நாங்கள் தயங்க மாட்டோம்; அதற்காக, மற்ற வாரப் பத்திரிகைகளின் பக்க அளவுகளோடு ஒப்பிட்டு எழுதியது, தேவையேயில்லாத ஒன்று!
சென்னை - 49, வி. ரெங்கநாதன்.

✉ குடும்பத்திலுள்ள அனைவரும் படிக்கக்கூடிய மிக கண்ணியமான, தரமான செய்திகளைத் தரும் 'கல்கி'யின் விலை ஏற்றம் நியாயமானதும், அனைவரும் ஏற்கக்கூடியதும் ஆகும். எங்கள் குடும்பப் பத்திரிகையான 'கல்கி'க்கு எவ்வளவு கொடுத்தாலும்

✉ இரா. முருகன் எழுதிய கொசுக்கு சிறுகதை நீண்ட தினங்களுக்குப் பின்னர் இயல்பான நகைச்சுவை இழையோடும் படைப்பை ருசித்த திருப்தியைத் தந்தது.
நெய்வேலி, எஸ். ஸ்ரீகாந்த்.

✉ 'அவளா இவள்?' சிறுகதை அருமையாக இருந்தது. முடிவு வித்தியாசமாகவும், சுவையானதாகவும் இருந்தது. பணம், நகையுடன் வரவேண்டிய டாக்டர் மனைவியை உண்மைக்காக உதறிய கதாபாத்திரம் மனதை நிறைத்து, கண்ணில் நீரை வரவழைத்து விட்டது. பாராட்டுக்கள்.
திருச்சி - 17,
உஷா முத்துராமன்.

இன்றைக்கெல்லாம் சினிமா உலகில் சல்லடை போட்டுத் தேடினாலும் ஏ.பி.நாகராஜனைப் போல ஒரு பல்துறை வித்தகரைப் பார்க்க முடியாது. அவரை ஒரு கதாசிரியராக, இயக்குநராக, நடிகராக மக்களுக்குத் தெரியும். ஆனால் அவருக்கு டான்ஸ் தெரியும் என்பது தெரியுமா? கேமராவை இயக்கத் தெரியும் என்பது தெரியுமா? அஸிஸ்டென்ட் கேமராமேனாக, செட் போடுவதில் வித்தகராக, இன்னும் பல அவதாரங்கள் எடுத்தவர் அவர்.

சினிமாவை ஒரு தொழிலாக அன்றி, கலையாக, வாழ்க்கையாகவே எண்ணி, வாழ்ந்தவர் அவர். இருபத்தி நான்கு மணி நேரமும் சினிமாவைத் தவிர வேறு சிந்தனையே கிடையாது அவருக்கு.

ஆனாலும் சில தேவையற்ற பழக்கவழக்கங்களின் பிடியில் அவர் சிக்கிக் கொண்டிருந்தார். பல சிறந்த கலைஞர்களுக்கே உரிய சின்னச் சின்ன சறுக்கல்கள்.

அக்காலத்தில் நான் மது அருந்துபவனாகவும் புகை பிடிப்பவனாகவும் இருந்தவன்தான். பிறரைக் குறை சொல்லவோ, கேள்வி கேட்கவோ தகுதியற்றவன்தான். எனினும் நட்பு காரணமாக ஏ.பி.என்னிடம் கூடுதல் உரிமை எடுத்து, தட்டிக்கேட்டேன்.

"இதோ பார்! என் கேரக்டர் பற்றி எல்லாருக்கும் தெரியும். நான் இப்படித்தான் என்பது தீர்ந்து போன கதை. ஆனால் நீ உன்னை- உன் உடல்நலத்தைப் பேணவேண்டியது ரொம்ப முக்கியம். உன்னைப் போன்ற கலைஞர்கள் பிறப்பதே அரிது!" என்றேன்.

இதை, தோழமையான அறிவுரை எனக் கொள்ளாமல் விமர்சனமாக எடுத்துக் கொண்டு விட்டார் ஏ.பி.என். மனதளவில் விரிசல் ஏற்பட அவருக்கு இதுதான் காரணம்.

எனினும், காலம் மாறும் என்று மனதைத் தேற்றிக் கொண்டு, நான் வேறு விஷயங்களில் கவனம் செலுத்தத் தொடங்கினேன். எனக்குத் தொடர்ந்து நடிப்பதற்குப் படங்கள் இருந்தன.

குறிப்பாக சிவாஜி நடித்த 'அன்னை இல்லம்' படத்தில் அப்போது நான் முக்கிய வேடத்தில், தீவிரமாக நடித்துக் கொண்டிருந்தேன். நெப்டியூன் ஸ்டுடியோவில் இடைவிடாமல் ஷூட்டிங் நடந்து கொண்டிருந்தது.

ஒருநாள், ஷூட்டிங்குக்காக நான் ஸ்டுடியோவுக்குள் நுழைகிற சமயம், போர்டிகோவில் ஏ.பி.நாகராஜன் நின்று கொண்டிருப்பதைக் கண்டேன். அவசரமாக காரை விட்டு இறங்கி, அவரருகே சென்று "என்னப்பா இங்கே?" என்றேன்.

அவர், என்னைப் பார்க்கத்தான் அங்கே வந்திருந்தார்! காரணம் சற்று சிக்கலானது. 'நவ



# என்னை

ராத்திரி' படத்தில் சிவாஜியை நடிக்க வைப்பது என்பது நாங்கள் ஏற்கெனவே முடிவு செய்த விஷயம்.

தொழில்ரீதியில் நாங்கள் பிரிவதென்பது முடிவானவுடன் சிவாஜி மிகவும் அதிர்ச்சி அடைந்தார். ஏ.பி.என்னிடம் அவர் எத்தனையோ வாதாடிப் பார்த்திருக்கிறார். "ராமசாமி குழந்தை மாதிரி. அவருக்குக் கள்ளம் கபடு தெரியாது. பிரச்னைகளைப் பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டுமே தவிர, நீங்கள் இப்படி திடீரென்று பிரிந்து போவது முறையாகாது. அதுவும் நன்கு வளர்ந்து கொண்டிருக்கும் நிலையில்..." என்று கேட்டுப் பார்த்தபோது ஏ.பி.என் பிடிவாத மாக மறுத்திருக்கிறார். அதனால் சிவாஜிக்கு அவர்மேல் இலேசான வருத்தம் இருந்தது.

இந்த நிலையில், நிச்சயித்தபடி நவராத்திரி படத்தில் சிவாஜியை நடிக்கக் கேட்பது எப்படி என்று நாகராஜனுக்குத் தயக்கம்.

நான்தான் எப்படியாவது சிவாஜியிடம் பேசி, அவரை நடிக் கச் சம்மதிக்கச் செய்ய வேண்டும் என்று ஏ.பி.என். மிகவும் வேண்டிக் கேட்டுக் கொண்டார்.

# மீளவைத்தவர் சிவாஜி!

நான் ஒப்புக் கொண்டேன். ஏ.பி.என்னுக்கு இந்த வகையிலாவது உபயோகமாயிருக்க முடிகிறதே என்று மகிழ்ந்தேன். சிவாஜியிடம் நான் பேசுவதாகச் சொல்லிவிட்டு, நேரே செட்டுக்குப் போனேன்.

ஷாட் இடைவேளையில் அவரிடம் பேச்சை ஆரம்பித்தேன். "ஏ.பி.என் மிகவும் நல்லவர். ஏதோ போதாத வேளை.



நாங்கள் பிரிகிற மாதிரி ஆகிவிட்டது. நீங்கள் மனதில் எதையும் வைத்துக் கொள்ளக் கூடாது. அவர் பிள்ளைக்குட்டிக்காரர். எப்படியாவது நல்லபடியாக நடித்துக் கொடுங்கள்" என்று கேட்டேன்.

சிவாஜி, பதிலே பேசவில்லை. என்னை ஒருமாதிரி பார்த்துக் கொண்டே இருந்தார். அவர் ஏதாவது சொல்வார் என்று நான் காத்திருந்தேன். அன்றைய படப்பிடிப்பு முடியும் வரை எதுவுமே பேசவில்லை!

ஷூட்டிங் முடிந்து, இருவரும் கிளம்பினோம். கார் புறப்படுகிற சமயத்தில் ஏ.பி.என் மீண்டும் வந்தார். ஒரு மரியாதைக்காக "வாங்கண்ணே" என்று சொல்லிவிட்டு, சிவாஜி காரில் ஏறிக் கிளம்பிவிட்டார்.

**நா**ன் வழியில் மறுபடி பேச்சைத் தொடங்கினேன்.

"எப்படியாவது நடித்துக் கொடுங்கள்" என்று கேட்டபோது,

"டயம் இல்லையே ராமசாமி. காலை ஒன்பதிலிருந்து மாலை ஆறு வரைக்கும் தினசரி கால்ஷீட் டைட்டா இருக்கு. ஏற்கெனவே அடுத்தடுத்து நிறைய கமிட் ஆகியிருக்கு. புதுசா ஒரு படம் ஒத்துக்கிட்டா, ஒழுங்கா முடிச்சித்தர வேண்டாமா?" என்று கேட்டார்.

"ஒம்பதுலேருந்து ஆறு கால்ஷீட்தானே டைட்டா இருக்கு? நாகராஜனுக்கு நீங்க ஆறுலேருந்து ஒம்பது (இரவு) கால்ஷீட் கொடுக்கலாமே?" என்று விடாமல் வாதாடினேன்.

சிவாஜி சிரித்தார்.

"நான் என்ன, உன்னை மாதிரி காமெடி வேஷமா போடறேன்? ஜாலியா வந்து நடிச்சிட்டுப் போக? செய்யறதெல்லாம் சீரியஸ் கேரக்டர்ஸ். நிறைய யோசிக்கணும். கான்ஸன்ட்ரேட் பண்ணி, ஒவ்வொரு படத்திலேயும் புதுசு புதுசா முயற்சி பண்ணணும். அதுக்கு நிறைய டயம் வேணும்..." என்று இழுத்தார்.

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. எப்படியாவது பண்ணிக் கொடுங்கள்" என்றேன் விடாப்பிடியாக.

"தீர்மானமா சொல்ல முடியலை ராமசாமி. நான் கொஞ்சம் யோசிக்கறேனே?" என்று விடைபெற்றுப் போய் விட்டார் சிவாஜி.

அவரை யார் யோசிக்க விட்டது! விடாமல் நச்சரித்து, நவராத்திரியில் சிவாஜி நடிக்க சம்மதம் வாங்கிவிட்டேன்.

ஏ.பி.என்னிடம் விஷயத்தைச் சொன்னபோது, நன்றிப்பெருக்கால் திக்குமுக்காடி விட்டார். என் கைகளைப் பற்றிக் கொண்டு, "ராமசாமி, என் எல்லா படங்களிலும் நீ நடிக்கறே!" என்றார்.

நானும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டேன். ஆனால் அவரைச் சுற்றியிருந்த சிலருக்கு, நாங்கள் மீண்டும் தோழமை கொள்வதில் பிரச்னை இருந்தது! எங்களை இணைய விடாமல் பிரித்தே வைப்பதில் மிகுந்த அக்கறை காட்டினார்கள்.

இதற்குப் பிரமாதமான காரணம் ஒன்றுமில்லை. அவரைத் தனிமைப்படுத்துவதன் மூலம், மூளைச்சலவை செய்து, அவரிடமிருந்து பல ஆதாயங்களைப் பெற முடியும் என்பதுதான் விஷயம்! நான் ஏ.பி.என்னுடன் இணைந்து விட்டால் காக்கைக் கூட்டத்தை நெருங்கவிடமாட்டேன் என்பதுதான் அவர்களது பயத்துக்குக் காரணம்.

இதனால், அவரது அடுத்தடுத்த படங்களில் எனக்கு வாய்ப்புத் தருவதாகச் சொன்னவர், அது பற்றி வாயே திறக்க முடியாதவராக ஆக்கப்பட்டார்!

நண்பருடன் சரியான உறவில்லாதது பற்றிய சோகம், தொழிலில் கவனம் சிதறுமோ என்கிற கலக்கம், இனி தனியொருவனாக சொந்தப் பட நிறுவனத்தை எப்படி நடத்துவது என்கிற குழப்பம்... கொஞ்சநாள் நான் கலங்கித்தான் போயிருந்தேன்.

இதிலிருந்து எல்லாம் மீள எனக்குக் கைகொடுத்தவர்– சிவாஜி.

**வி. கே. ராமசாமி**



''ஆனாலும் தமிழுக்காக தமிழ்க்குடிமகன் இத்தனை தூரம் பாடுபடக் கூடாது!''

''ஏன்? இப்ப புதுசா என்ன செய்தார்?''

''இனிமே மளிகைக் கடையில் தமிழ்த் தினசரிகளில்தான் மளிகை சாமான்களைக் கட்டித் தரணும்னு ஆர்டர் போட்டிருக்கார்!''

— பாலு

ஏ.பி.என். சிவாஜியை வைத்து நவராத்திரி எடுத்து, வெற்றி கண்டதும் சிவாஜி, எனக்கொரு படம் செய்து தர முன்வந்தார். அது தான் 'செல்வம்'.

பி.எஸ். ராமையாவின் அழுத்தமான கதை. சிவாஜி-கே.ஆர்.விஜயாவின் தத்ரூபமான நடிப்பு, எல்லாவற்றுக்கும் மேலாக ஆண்டவனின் அளப்பரிய கருணை... அந்தப் படம் எனக்கு மாபெரும் வெற்றியைத் தேடித் தந்தது.

கவலைகளை மறந்து நான் மீண்டும் புத்துணர்ச்சி பெற்றது இந்தப் படத்தில்தான்!

தொடர்ந்து ரவிச்சந்திரன், ஜெமினி கணேசன், ஜெய்சங்கர் என்று வரிசையாகப் பலரை வைத்துப் படங்கள் எடுத்தேன். நானும் நிறையப் படங்களில் நடித்துக் கொண்டிருந்தேன். ஏ.பி.என். போனதும் என் தம்பி உட்பட பலர் என்னை ஏமாற்றி, என் சம்பாத்தியங்களைக் கொண்டு போய் விட, மீண்டு வருவேனா என்ற பயம் அப்போது என்னை ஆட்கொண்டது. மீள வைத்தவர் சிவாஜி.

நினைத்துப் பார்த்தால் சிவாஜியுடன் எனது நட்பே இறைவனின் அருள்தான் என்று தோன்றுகிறது.

அவரது முதல் படமான 'பராசக்தி'யில் நானும் நடித்தேன். அப்போதிலிருந்தே எங்களுக்குள் பழக்கம் உண்டு.

வாழ்க்கையில் அவர் மாதிரி ஒரு கலை வெறியரை நான் பார்த்ததில்லை.

தினம் தினம் இரண்டு படங்கள் அவருக்கு புக் ஆகிக் கொண்டே இருக்கும். இடைவிடாமல் நடித்துக் கொண்டே இருப்பார்.

சாதாரணமாக நடிகர்கள் ஒரு படத்தை ஒப்புக் கொள்ளுவதற்கு முன் பண விஷயத்தைத்தான் முதலில் பேசிக் கொள்வார்கள். ஆனால் பணத்தைப் பற்றிக் கவலையே கொள்ளாமல், நடிப்பில் மட்டுமே சிந்தனையைச் செலுத்தியவர் அவர் மட்டும்தான்.

''என் ஆசை- ஒரு நாள் கூட நடிக்காமல் சும்மா இருக்கக் கூடாது; அவ்வளவுதான்!'' என்பார்.

அது அவரது தனிப்பட்ட விருப்பம் என்றாலும் அதனால் பயனடைந்த பிற கலைஞர்கள், தொழில்நுட்ப வல்லுநர்கள் எத்தனை பேர் என்று எண்ணிப் பார்க்கிறேன்!

இடைவிடாமல் அவர் நடித்துக் கொண்டே இருந்ததால் தொடர்ந்து பலருக்கு வேலை கிடைத்துக் கொண்டே இருந்தது! இது எத்தனை பெரிய விஷயம்!

இன்னொன்று - திரையுலகில் எம்.ஜி. ஆரின் வள்ளல் குணம் பற்றி நிறைய கேள்விப் பட்டிருப்பீர்கள். அவரது சமகாலக் கலைஞரான சிவாஜியும் வள்ளல் குணத்தில் சளைத்தவரில்லை!

மூன்றாம் மனிதர் அறியாமல் எத்தனையோ பேருக்கு அவர் வாரிக் கொடுத்ததை நான் அறிவேன். காமராஜரைத் தலைவராக ஏற்றுக் கொண்ட கணம் முதல், தமிழ்நாட்டில் காங்கிரஸ் கட்சிக்கும் அவர் நிறைய உதவியிருக்கிறார்.

வீடுகளில் எப்போதாவது யாருக்காவது விருந்து வைப்போம். ஆனால் தினசரி விருந்து நடக்கிற வீடு சிவாஜியுடையதுதான்! குறைந்தது ஐம்பது பேராவது தினம் அவர் வீட்டில் சாப்பிடாமல் இருக்க மாட்டார்கள்!

என் வாழ்க்கையில், நான் என் வீட்டில் சாப்பிட்ட தினங்களை விட சிவாஜியுடன் அவர் வீட்டில் சாப்பிட்ட நாட்கள் அதிகம்!

நல்ல கலைஞர்களுடன் எப்போதும் நெருங்கி இருப்பதை அவர் மிக விரும்புவார். உலக சினிமாவின் அவ்வப்போதைய சாதனைகளை உடனுக்குடன் தெரிந்து கொண்டு விட வேண்டும் என்பதில் அவருக்குள்ள ஆர்வம் கொஞ்சநஞ்சமல்ல.

தனது தனித்துவம் வாய்ந்த நடிப்புத் திறனுக்காக அவர் எத்தனை தூரம் தன்னை வருத்திக் கொண்டு உழைப்பவர் என்பதை நான் அறிவேன். சிவாஜிக்கு நடிப்புலகில் முன்னோடி என்றால் அது ஒருவர்தான் - எம்.ஆர். ராதா.

உற்றுப்பார்த்தால் அவரது நடிப்பில் ராதாவின் சாயல் தெரியும்!

காரணம் - இளம் வயதிலிருந்தே, நாடக உலகிலிருந்தே ராதாவை உற்றுக் கவனித்து வந்தவர் அவர். தன் நடிப்பில் ராதாவின் பாதிப்பு உண்டு என்பது பற்றி அவரே கூட ஒருமுறை சொல்லியிருப்பதாகத்தான் ஞாபகம்.

ஆனால், ஒரு கட்டத்தில் எல்லாரையும் விட உயர்ந்த நடிப்புத்திறனை வெளிக்காட்டி, தன்னிகரில்லாதவராக அவரால் ஒளிவீசிக் கொண்டு நிலைத்திருக்க முடிந்ததென்றால் அதற்குக் காரணம் ஒன்றுதான்.

அவரது தொழில் பக்தி.

(தொடரும்)

# குமுறல்



## அருணாச்சலத்தின் வெற்றி விழாவில்...

●● சந்தேகமேயில்லை, அருணாச்சலம் படத்தின் வெற்றி விழாவில், ரஜினிகாந்த் தேவாவுக்கு தங்கச் சங்கிலி அணிவிப்பார். ஆனால் உழைப்பது ஒருவர், அனுபவிப்பது இன்னொருவரா? இதென்ன நியாயம்? இந்தப் படத்தில் மட்டுமல்ல, தேவாவின் எல்லாப் படங்களிலுமே, 'இசை தேவா' என்பதற்கு என்ன அர்த்தம் தெரியுமா? அவர் இந்திய, வெளிநாட்டு இசையமைப்பாளர்களின் நல்ல பாடல் இசைகளைத் தொகுத்துத் தருகிறார் என்பதுதான்!

கோயம்புத்தூர், லாவண்யா.

●● புனிதத் தலமான ராமேஸ்வரத்தில் மக்கள் கடலில் நீராடும் இடத்தில், அருகிலுள்ள லாட்ஜ் ஒன்றிலிருந்து கழிவுநீர் வந்து சேர்கிறது. ராமேஸ்வரத்தில் கடலில் குளிப்பது ஒவ்வொரு பக்தனுக்கும் இன்றியமையாதது. அங்கு இந்த அசிங்கத்தை அதிகாரிகள் அனுமதிக்கலாமா?

ஸ்ரீவில்லிபுத்தூர், பா. தனபால்.

●● தனியார் பேருந்துகளில் கேசட் போடும் பழக்கம் அதிகரித்து வருகிறது. 'ஸ்டாப்' சொல்லி இறங்க முடியாத அளவு இரைச்சல். நகரப் பேருந்துகள் நரகப் பேருந்துகள் ஆகி வருகின்றன. தொற்றுநோயாக இந்த அநாகரிகம் ஆட்டோ, மற்றும் சரக்கு வாகனங்களுக்கும் பரவி வருகிறது.

திருவண்ணாமலை, இராமசாமி.

●● விஸ்கோஸ் ஆலை மூடப்பட்டிருப்பதால் பலருக்கும் துன்பம் ஏற்பட்டு வருகிறது. இதற்கு முக்கிய காரணம், ஆலையின் உரிமை கைமாறியதும், புதிய நிர்வாகம், உற்பத்தியைப் பல மடங்கு அதிகரிக்கும் நோக்கில் செயல்பட்டதுதான். இதனால் பவானி ஆற்று நீர் அபரிமிதமாகப் பயன்படுத்தப்பட்டு, சுத்திகரிப்பு என்ற பெயரில் சில சடங்குகளுக்கு உள்ளாகி, மீண்டும் ஆற்றில் கலந்து மக்கள் உடல்நலத்துக்குப் பெரும் தீங்கு விளைவித்தது. இந்தத் தொழிலும் காப்பாற்றப்பட்டு, இதை நம்பியுள்ள குடும்பங்களும் வாழ வேண்டுமென்றால், 1970ம் ஆண்டின் உற்பத்தி அளவுக்குத் திரும்பி, பவானி ஆற்று நீரைப் பயன்படுத்திய பிறகு, அது உண்மையிலேயே சுத்திகரிக்கப்பட்டு, வரண்ட பூமியை வளமாக்கப் பாய வேண்டும்.

கோவை, விஜயமூர்த்தி.

●● ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு சாக்கடை அள்ளுவது, சாலைகளைப் பெருக்குவது போன்ற பணிகள் பஞ்சாயத்துத் தேர்தல்கள் நடந்ததன் விளைவாகத் தொடங்கியுள்ளன. இதற்கு நாமும் உதவ வேண்டாமா? வீட்டுக் குப்பைகளை, அள்ளிப் போகும் வண்டி வரும் வரை வீதியில் பரவாமல் பழைய பக்கெட் அல்லது கூடையில் வைத்திருக்க வேண்டும். சாலையில் குப்பை கொட்டுகிற அநாகரிகத்தை ஒழிக்க வேண்டும்.

பெருந்துறை, ந. சிவாயமூர்த்தி.

●● கோயில் நகைகளைக் கொள்ளை அடித்து சமீபத்தில் பிடிபட்ட சத்தியமூர்த்தி பற்றிக் குறிப்பிடுகையில், அவரைத் திருமங்கை ஆழ்வாருடன் சிலர் ஒப்பிட்டுப் பேசுவது வேதனை அளிப்பதாகும். திருமங்கை ஆழ்வார், தெவிட்டாத தமிழ் அமுதங்களை அளித்தவர்; தம் கைப் பொருள் முழுவதையும் இறைப்பணிக்கே அர்ப்பணித்தவர். இந்நிலையில் செல்வந்தர்களிடம் வழிப்பறி செய்து கோயில் கட்டவும் அன்னதானம் செய்யவும் பயன்படுத்தியவர். ஆழ்வார் தவறு செய்தாலும் அது சுயநலத்துக்காக அல்ல. ஆனால் கொள்ளைக்காரன் சத்தியமூர்த்தி கோயில் கட்டியது, பக்திப்பெருக்கால் அல்ல; நல்லவன் போல் நடித்து போலீஸில் பிடிபடாமல் இருப்பதற்காகும். இருவரையும் ஒப்பிட்டுப் பேசுவதா?

சென்னை - 61, எஸ். பாலாஜி.

●● கோடிக்கரையில் உள்ள புராதன கலங்கரை விளக்கம் 'பொன்னியின் செல்வன்' மூலம் பிரசித்தி பெற்றது. அந்தக் கலங்கரை விளக்கம் தற்போது இடிபாடடைந்து கிடக்கிறது. வரலாற்றுச் சிறப்புமிக்க இதன் எஞ்சிய பகுதியையாவது காப்பாற்றி, நமது பாரம்பரியப் பெருமையை உணர்த்துவதாகச் செய்ய தொல்பொருள் ஆய்வுத் துறை முன்வரட்டும்.

கருப்பம்புலம், கப்பு வேதையா சித்திரவேலு.



• தோல்வி வாக்குமூலம்!



• பகுத்தறிவு பதற்றம்!

# ‘பகுத்தறிவுக்காக ஆட்சியை இழக்கத் தயார்!’ என்கிறாரே கலைஞர்?

● என். ஜெயராமச்சந்திரன், கோவில்பட்டி.

? ‘கலைஞர் அமெரிக்காவில் பிறந்திருந்தால் ஆபிரகாம் லிங்கன் பிறந்திருக்க மாட்டார். லண்டனில் பிறந்திருந்தால் சர்ச்சில் பிறந்திருக்க மாட்டார்... கிரேக்க நாட்டில் பிறந்திருந்தால் சாக்ரடீஸ் பிறந்திருக்க மாட்டார்...’ என்று அமைச்சர் செங்குட்டுவன் கூறியிருப்பது கடந்த ஆட்சியை ஞாபகப்படுத்துகிறதே?

! அமைச்சர், இந்தியாவைத் தவிர வேறு எங்கு பிறந்திருந்தாலும் இப்படி உளறிக் கொட்டிக் கொண்டிருக்க மாட்டார்!

● ஹேமா சுகுமார், வெண்டையம்பட்டி.

? அந்தக் கால பெண்களுக்கும் இந்தக் கால பெண்களுக்கும் வித்தியாசம் என்ன...?

! அ.கா.பெ : சுய வருமானம், சுய சிந்தனை இல்லாததால் கஷ்டப்பட்டார்கள்.

இ.கா.பெ : சுய வருமானம், சுயசிந்தனை இருப்பதால் கஷ்டப்படுத்தப்படுகிறார்கள்!

● புதுவை கமால் பாட்சா, கல்தான் பேட்டை.

? கவுண்டமணியின் மார்க்கெட் சரிந்து கொண்டு வருகிறதே?

! ‘மணி’யோசை உரக்கக் கேட்பதால்தான்!

● தீபா, பாளையங்கோட்டை.

? தம்மை ‘தடா’ கைதியுடன் இணைத்து போலி புகைப்படம் தயாரித்தபோது தாம் அடைந்த வருத்தம் ‘ஜெ’க்கு இப்போது புரிந்திருக்கும் என்கிறாரே சுப்ரமண்யம் சுவாமி?

! சந்தடி சாக்குல பழசை எடுத்து வுட்டாலும் பாயிண்ட்ல புடிச்சுட்டார் - இல்லாடி!



• சந்தடிசாக்கில்...

● மு. இரவிச்சந்திரன், சேலம் - 9.

? ‘எந்த துறையிலும் ஊழலை ஒழித்து விடலாம். ஆனால் உள்ளாட்சித் துறையில் ஊழலை ஒழிப்பது மிகக் கடினம்’ என்கிறாரே அத்துறை அமைச்சர் கோ.சி. மணி?

! ஆனால், அந்தக் கடினமான காரியத்தில் எப்படியும் வெற்றி பெறுவேன் என்று சேர்த்துச் சொல்லியிருக்க வேண்டும்.

● எஸ். ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி.

? டி.வி., ரேடியோ - சிறந்த மீடியா எது?

! (நல்ல) பத்திரிகைகளை விட சிறந்த மீடியா கிடையாது. ஏனென்றால் அவைதாம் சிந்திக்கச் செய்கின்றன.

● வாசுதேவன், மும்பை - 86.

? ஆந்திர மாநிலத்தில் மறுபடியும் மது குடிக்க அனுமதித்துள்ளது குறித்து?

! ‘லாபி’யின் வெற்றி!

● கு. தமிழ்ச்செல்வி, விழுப்புரம்.

? ‘கடவுளை வணங்குபவன் காட்டுமிராண்டி.’ என்ற பெரியாரின் திராவிடப் பாரம்பரையில் வந்த கருணாநிதியும் அங்கும் இங்கும் எங்கும் தமிழ் பரப்புவேன் என்ற தமிழ்க்குடிமகனும், 1.4.97 முதல் மாற்றி அமைக்கப்பட்ட தமிழ்நாடு பரிசுச் சீட்டுக்கு

'மஹாலக்ஷ்மி' என்று கடவுளின் வட மொழிப் பெயரைச் சூட்டியிருப்பது பற்றி...?
! 'இலக்குமி' என்றோ 'திருமகள்' என்றோ குறிப்பிட்டால் பாமரரைக் கவராது என்பது ஒருபுறமிருக்க, லாட்டரி சீட்டுக்குக் கடவுள் பெயர் சூட்டுவது அபசாரம் மட்டுமல்ல மோசடியும் கூட!

● கப்பு வேதையா சித்திரவேலு,
கருப்பம்புலம்.

*? ஏழை எளிய மக்களை வாட்டி வதைத்த லாரி ஸ்டிரைக் அவசியமா?*
! இவர்கள் கோரிக்கையை கவனிக்க ஆளில்லாமல் மத்தியில் ஆட்சியே ஆட்டம் கண்ட நேரத்தில், மத்திய பட்ஜெட்டே கிடப்பில் கிடக்கிற சமயத்தில் – இந்த வேலை நிறுத்தம் கண்டிப்பாக 'வேஸ்ட்!' லாரி உரிமையாளர்களுக்கும் பணியாளர்களுக்கும் மட்டும் அல்ல... தேசத்துக்கே கோடானு கோடி ரூபாய் நஷ்டம். எல்லாவற்றையும் விட கஷ்டம், 'லாரி ஸ்டிரைக் வாபஸ்' என்று அவசரப்பட்டு முதல்வர் சட்டமன்றத்தில் அறிவித்ததுதான்!

● எம். ரேவதி, மன்னார்குடி.

*? தராசுக்குப் பிடித்த இடம் தமிழகத்தில் எங்கு உள்ளது?*
! 47, ஜவாஹர்லால் நேரு சாலை, சென்னை – 600 097.

● ஆர்.கே.எஸ். சமுககனி, டி. மாரியூர்.

*? 'அ.தி.மு.க. ஆட்சியில் இட்லி குஷ்பு போல் உருண்டு திரண்ட சைஸில் இருந்தது. இப்போது ஓமக்குச்சி நரசிம்மன் போல மெலிந்து விட்டது' என்று முன்னாள் அமைச்சர் ரகுபதி வர்ணித்திருக்கிறாரே...?*
! In bad taste!

● பா. ராஜாமுகமது, திருத்துறைப்பூண்டி.

*? ம.தி.மு.க. எப்போ சார் ஆட்சிக்கு வரும்...?*
! முதல்ல அ.தி.மு.க.வுக்கு ஏணியா இருந்து வரட்டும். உதைபடாம இருந்தா அப்புறம் பார்க்கலாம்.

● ஆ. அழகேஷ், பூதப்பாண்டி.

*? பிரசித்தி பெற்ற கோவில்களில், இறைவனை அருகில் சென்று வழிபட கட்டணம் செலுத்த வேண்டியுள்ளதே...?*



• பயமுறுத்தும்...



• ...மூச்சை...!

☐ ரூ. 50 பரிசு பெறுபவர் :
கு. தமிழ்ச்செல்வி,
க/பெ. ரா. குணசேகரன்,
9 பி; கண்ணகி தெரு,
கீழ்ப்பெரும்பாக்கம்,
விழுப்புரம் – 605 602.

! விசேஷ நாட்களில்தான் கூட்டம் அலை மோதும். இறைவனை தரிசிக்க எந்த நாளும் நல்ல நாளே என்ற மனப்பக்குவம் வந்துவிட்டால் நீங்களும் நானும் கூட வி.ஐ.பிதான்! சிறப்புக் கட்டணம் கொடுக்கவும் அவசியமிராது!

● ப. சுகுமார், தூத்துக்குடி.

*? பகுத்தறிவுக்காக ஆட்சியையும் இழக்கத் தயார் என்கிறாரே கலைஞர்?*
! ஆட்சியில் இருந்து கொண்டே நாத்திக வாதம் செய்யாமல் அன்புடனும் நயமாகவும் பகுத்தறிவுப் பாடம் நடத்துவதுதான் சரி. ஒழிக்கப்பட வேண்டிய மூடநம்பிக்கைகள் பல



• ரசனைக்கு டாடா!



• ஏணி அரசியல்!

இங்கு வேரூன்றியிருப்பதை மறுப்பதற்கில்லை. அவற்றை மூர்க்கமாகப் பிடுங்கி எறியாமல், தாமாகவே பட்டுப் போகச் செய்ய வேண்டும். இல்லையேல், மக்கள் கலைஞரை விட அதிகமாக உணர்ச்சிவசப்படுவது உறுதி!

● தெரிசை ஐயப்பன், திருப்பூர்.

*? மனிதன் கெட்ட பழக்கத்திற்கு ஆளாகக் காரணம் சூழ்நிலையா? தவறான நண்பர்களின் சேர்க்கையா?*
! இரண்டையும் வென்று மன உறுதியுடன் மீண்டு வருவோர் இருக்கிறார்கள். எனவே அவரவர் மனத்தின் பலவீனம்தான் கெட்ட பழக்கத்துக்குக் காரணம் – சறுக்கிய பிறகு இதர காரணங்களைத் தேடிச் சொல்வதும் அந்த மனவலிமையின்மையின் அறிகுறியே!

## நீங்கள் கேட்டவை – தராசு

# பிரயத்னம்

அன்றுதான், பயணம் பண்ண முடிந்தது, வள்ளியால்.

சபேசனுடன், அனுவைப் பார்க்கப் போய்க் கொண்டிருந்தாள், வள்ளி. ரயில், அதன் சௌகர்யத்துக்கு ஏற்ப, எங்கெல்லாம் சாத்தியப்படுமோ, அங்கெல்லாம் நின்றும், எப்போது புறப்படத் தோன்றுமோ அப்போது புறப்பட்டும் போய்க் கொண்டிருந்தது.



"நூறு மைலைக் கடக்க அரை நாளுக்கு மேலே தேவைப்படுகிறதே, நம் ஊரில். எத்தனை வளர்ச்சி, இந்த விஞ்ஞான யுகத்தில். அந்த வளர்ச்சியெல்லாம், ஏன் இந்தக் காட்டாங் குளத்தூர் வண்டிக்கு இல்லை?" என்று அங்கலாய்த்தாள் வள்ளி.

அவள் எதிராக, ஜன்னல் ஓரமாக அமர்ந்திருந்த சபேசன் சிரித்தான்.

"நம் மக்கள் சாவகாசம், அதிகம் இருக்கிற ஜனங்கள். திண்ணைகளில் மணிக்கணக்கில் உட்கார்ந்து, ஊர்க் கதை பேசி, வெற்றிலை போட்டுத் துப்ப, நமக்கு இன்னும் நிறைய அவகாசம் இருக்கவே செய்கிறது. பதினெட்டு மணி நேரம், முப்பத்தாறு மணி நேரம் தாமதமாக வருகிறது ரயில், என்று அறிவிக்க, ரயில் இலாக்காவுக்கு வெட்கமே இல்லையே. அல்லது நமக்குச் சொரணையே இல்லையே. நம்மைப் போலத்தானே, நாம் இயக்குகிற ரயிலும் இருக்கும்..."

"நமக்குச் சொரணை இல்லை என்கிறதுதான் முக்கியமாகப் படுது" என்றார் சக பயணி. அவர் ஒரு மருந்துக் கம்பெனி பிரதிநிதி என்று தம்மை அறிமுகம் செய்து கொண்டார். உத்தியோகத்துக்கு ஏற்ப, முழுக்கைச் சட்டையை 'இன்' பண்ணின பேண்ட்டும் காலிடுக்கில் வைத்த வயிறு பெருத்த தோல் பையுமாக அவர் இருந்தார். மத்திய வயது. வழுக்கையை ஈடுசெய்ய, பெரிய கிருதா.

"இத்தனை மணி நேரத் தாமதம் காரணமாக, எனக்கு இந்த வேலை கெட்டு விட்டது என்று இலாகா மேல் யாரும் வழக்குத் தொடுப்பது இல்லை" என்றார் மருத்துவ பிரதிநிதி.

"அது முடியாது. ஏனென்றால், புறப்படும் நேரம் சொல்கிற இலாகா, போய்ச் சேரும் நேரத்தைச் சொல்வது இல்லை."

"தனியார் ரயிலை இயக்க அனுமதித்து விட்டால்தான் இதற்கு விடிவே. டாட்டா, பிர்லா, போன்ற ஆட்கள் இதைச் சரிப்படுத்தி விடுவார்கள்" என்று அவரே சொன்னார்.

"அப்போ, பொது இலாகா என்றால், அப்படித்தான் இருக்கும் என்று நாம் ஒப்புக் கொள்கிறோம் என்று அர்த்தமா? எமர்ஜென்சியில் மட்டும், ரயில் சரியான நேரத்துக்கு வந்து சேர்ந்ததே எப்படி? நாம் கோலுக்குத்தான் பயப்படுகிறோம், பணிவோம் என்று அல்லவா ஆகிறது. இது அசிங்கம்."

"அதுதான் அர்த்தம். அவசர நிலை மாதிரியான அடக்குமுறையைக் கூட, மகிமை செய்கிறவர்கள் நாம்."

எப்படியோ, நிமிஷத்துக்கு ஒருதரம், ஏதாவது தின்



பண்டத்தோடு ஒருத்தன் வந்து கொண்டே இருந்தான். மனிதர்கள் இத்தனை பண்டங்களையா தின்கிறார்கள்? தின்றுகொண்டே இருப்பது, குடித்துக் கொண்டே இருப்பது, பேசிக் கொண்டே இருப்பது... முகம் தெரியாதவர்களிடம் குடும்பச் சமாச்சாரங்களைப் பகிர்ந்து கொள்வது...

"இது இந்தப் பட்டிமண்டபக்காரர்களால் வந்தது, வள்ளி. இந்த நாக்கு வியாபாரிகள், பொது நிகழ்ச்சிகளில் கூட, தங்கள் பெண்டாட்டிகள் எத்தனை அசடுகள் என்று சொல்லத் தொடங்கி, தங்கள் அசட்டுத்தனத்தையும் சொல்லியதோடு, மக்கள் நாகரிகத்தையும் கெடுத்தார்கள்..." என்றார் சபேசன்.

"ஆமாம்... கண்ணகி, மாதவி, கோப்பெருந்தேவிகளின் கற்பை, அவர்கள் கணவர்களே கவலைப்படாத விஷயத்தில் தொடங்கி ஆராய்ச்சி செய்து, அந்தப் போக்கு, இப்படி ஆபாசமாக வளர்ந்து விட்டிருக்கிறது."

எட்டு மணி நேரப் பயணத்துக்குப் பிறகு, உடல் அலுப்பும் சேர்ந்து கொள்ள, அவர்கள் ஊர் வந்தது. ஆட்டோ பிடித்துக் கொண்டு வந்தான் சபேசன். ஆட்டோக்காரர், குத்து மதிப்பாக ஐம்பது கேட்டார்.

"இது என்ன?" என்று மீட்டரைக் காட்டிக் கேட்டாள் வள்ளி.

வள்ளியை, எரிச்சலும் கோபமுமாகப் பார்த்த ஆட்டோ தோழர், "இஷ்டம் இருந்தா ஏறு. இல்லாட்டி போம்மா" என்றார். அடுத்து வந்தவர், மீட்டர் போட பெரிய மனசு பண்ணிச் சம்மதித்தவர், மீட்டருக்கு மேல் ஐந்து ரூபாய் கேட்டார். ஒப்புக்கொண்டு பயணம் செய்தார்கள்.

சபேசன், வள்ளியைப் பார்த்துக் கேட்டார்.

"என்ன வள்ளி, சோர்ந்துட்டீங்க?"

"உற்சாகம் ஊட்டுகிற மாதிரி, ஏதாச்சும் நடந்தாத்தானே? மலர்கள், விரியும்போதே கசங்கற மாதிரிதான், எல்லாம் நடக்குது, பாருங்க. காலையில கண்ணைப் பிட்டுக்கிட்ட உடனே, அர்த்தநாரி என்னை இம்சை பண்ணி, என்னைச் சிதைக்க ஆரம்பிச்சிடுவார். இது, வீட்டுக்குள்ளே... இப்போ. அவர் தொல்லை இல்லை. மாறா, இந்த ரயில், ஆட்டோன்னு எத்தனை? மலர்ச்சிக்கே இடம் இருக்காது போல. வீட்டை விட்டு தெருவில இறங்கவே பயமா இருக்கு. சேற்றுல காலை வைக்கிற மாதிரி, யாரைக் கிழிக்கலாம்னு கூர் நகத்தை வச்சுக்கிட்டுக் காத்துக்கிட்டு இருக்காங்க, ஜனங்கள். மனுஷத்தனம், நாளுக்கு நாள் செத்துக்கிட்டு வர்றதை, உணர்றீங்க, இல்லையா?"

**"இந்த அக்கிரமத்தை வந்து கேளுங்க. வீட்டை நல்லா பெருக்கிடு முனியம்மான்னு சொன்னா, முடியாது; எனக்கு டஸ்ட் அலர்ஜிங்கறா!"**

**— வியாசர் நகர் அ.கு. கிருஷ்ணன்.**



இரு பக்கமும், மறைந்து கொண்டு வருகிற வீடுகளைப் பார்த்துக்கொண்டிருந்தான் சபேசன். வீடுகளின் முகங்கள், இடிக்கப்பட்டுக் கடைகளாகின்றன. கடைகள், வாடகை, வியாபாரம், ஆக மொத்தத்தில் பணம்.

"அனுவோட அப்பா, ஒரு காரியம் பண்ணார் தெரியுமோ. வீடு கட்டி இருக்கார். பெரிய பங்களா மாதிரியான வீடு. நிறைய செலவு. கடன். அடைக்கணுமே. வீட்டை வாடகைக்கு விட்டுட்டு, கார் ஷெட்டுல குடியிருந்திருக்கார். பல வருஷம். அது, கல்யாணத்துக்கு முன்னால் வரைக்கும் அவங்க வீடு, அதுதான்."

வள்ளி சிரித்தாள்.

"தமாஷா இருக்கு."

"எனக்கு எல்லாமே தமாஷாத்தான் இருக்கு. கோணல்கள்தான் நம்மைச் சுத்தி அதிகம், என்கிறப்போ, இதுகளைத் தமாஷா, நகைச்சுவையா எடுத்துக்கலைன்னா, உடம்பு கெட்டுடும். தற்கொலையை நோக்கிப் போக வேண்டி இருக்கும்."

சபேசன், குரலை அடக்கிக்கொண்டு, வள்ளிக்கு மட்டும் கேட்கும்விதமாகச் சொன்னான்.

"அனு, குடித்தனம் பண்ண வரமாட்டேன்னு சொன்னப்போ, நிஜமா எனக்குப் பைத்தியம் பிடிச்சிடும் போல இருந்துச்சி. ஆனா, நான் தேறிட்டேன்."

"அர்த்தநாரிக்கு நேர்ந்தது தெரிஞ்சா, அது மாறிடும்."

"பார்ப்போம், நம்புவோம்."

அனு, வள்ளியைக் கண்டதும் மகிழ்ச்சியுடன் வந்து வரவேற்றாள். கட்டித் தழுவிக் கொண்டாள்.

"உங்க முகம், என் கண்ணிலேயே இருந்துச்சி, வள்ளி."

வள்ளி, குழந்தைக்கு என்று வாங்கிச் சென்றிருந்த சட்டைத் துணிகளைக் கண்டு, அனு, மிகவும் மகிழ்ச்சியடைந்தாள். குழந்தைக்கு உடனே அவற்றைப் போட்டு அழகும் பார்த்தாள். பொசுபொசுவென்று, பஞ்சு மிட்டாய் மாதிரி இருந்தது குழந்தை. கேசரி மேல் வைத்த கறுப்புத் திராட்சைக் கண்களை உருட்டிக் கொண்டு, வள்ளியைப் பார்த்தது. என்ன நினைத்தோ சிரித்தது. பூ மலர்வது போல கோட்டுவாய் விட்டது. புத்தகம் மூடியது மாதிரி, கண் வளரத் தொடங்கியது.

மதியம் உணவுக்குப் பிறகு, சபேசன் ஓய்வு

கொள்ளச் சென்றான். அனு, தனிமையை பயன்படுத்திக் கொண்டு வள்ளியிடம் கேட்டாள்.

"என்னக்கா, உங்க வீட்டுக்காரர் இப்படிப் பண்ணிட்டாரே. நான் பத்திரிகையில் பார்த்தேன். உங்களை நினைச்சு ரொம்பக் கஷ்டமா இருந்துச்சு."

"எனக்கு, இது அதிர்ச்சியை ஏற்படுத்தலை, அனு. எதை விதைக்கிறோமோ, அதை அறுக்கத்தானே வேணும்? தப்புச் செய்கிறவர், அதுக்கான தண்டனையை அனுபவிக்கத்தானே வேணும்?"

அனு சற்று யோசித்துவிட்டுச் சொன்னாள்.

"அக்கா, அவர் என்ன அப்படி பெரிய தப்பைச் செய்துட்டார்? நம்ம ஊர் அரசியல்வாதிகளை, அதிகாரிகளை விடவா? உலகத்துல எத்தனையோ பெரிய பெரிய தப்பு நடக்குது... இதைப்..."

வள்ளி, அனுவை வெட்டிக் கொண்டு சொன்னாள்.

"நெருப்பில் சின்ன நெருப்பு, பெரிய நெருப்புன்னு உண்டா அனு. நெருப்பு, நெருப்புதானே? தொட்டா சுடவே செய்யும். அதை எவர் செய்தா என்ன? அதுக்கான பலனை அடையவே செய்யணும். உனக்கு, வேலை செய்யத்தான் சம்பளம் தர்றாங்க இல்லையா? அந்தக் கூலியைக் கொண்டு வாழறதுதான் நல்லது."

"தப்பா நெனச்சுக்காதீங்க, அக்கா. எங்க வீட்டுக்காரருக்கும், உங்க வீட்டுக்காரருக்கும் ஒரு சம்பளம்தான். இந்தச் சம்பளத்துல, பால் வாங்கி, வீட்டு வாடகை கொடுத்து, மளிகைச் சாமானும் வாங்கி, வாழ முடியும்னு நினைக்கிறீங்களா? வீடுன்னா, ஒரு பிரிஜ், ஒரு வாஷிங் மெஷின், ஒரு கலர் டீவி. எல்லாம்தானே வேண்டி இருக்கு. தவணையில வாங்கி, இதுக்கே சம்பளம் பூரா போனா, எப்படிக் குடித்தனம் பண்றது?"

வள்ளி சிரித்தாள்.

"திருடன், கொலைகாரன், பொய்யன், விபசாரி, அல்லது விபசாரன் எல்லாருக்குமே, அவங்க பக்கத்துல நியாயம் ஒன்னு இருக்கும். ஆனா, அது சமூக நியாயத்துக்கு முரணா போகக் கூடாது. போகும் போது, சமூக நியாயமா, தனிமனித நியாயமா, எது சரின்னு பார்க்கணும். புருஷன் கொடுக்கிற சம்பளம் பத்தலைன்னு, நாம் விபசாரம் பண்ணிச் சம்பாதிக்க முடியுமா?"

"சீ... சீ..."

"அதுக்கும் லஞ்சம் வாங்குறதுக்கும் என்ன பெரிய வித்தியாசம் இருக்கு? நீ, சொல்ற பொருட்கள் எல்லாம் இருக்கிறதுதான் வீடுன்னா, இந்தியாவில, அது மாதிரி வீடு எத்தனை இருக்கு. பணக்காரனா இருக்கிறதுக்கும், சாமான்களை வாங்கி வீட்டுக்குள்ளே ரொப்பிக்கிறதுக்கும், வாழ்க்கைக்கும் சம்பந்தம்



**"காலேஜ் ஸ்டிரைக்குன்னு சொல்றே, வீட்டிலேயே இருக்க வேண்டியதுதானே, எங்கே கிளம்பிட்டே?"**

**"லேடீஸ் காலேஜெல்லாம் ஸ்டிரைக் கிடையாதுப்பா!"**

**— நாகூர் டி.என். இமாஜான்**

இல்லை அனு. நீ உனக்கு மேல இருக்கிற பணக்காரங்களை என்னத்துக்கு பார்க்கிறே? உனக்குக் கீழே இருக்கிற கோடிக்கணக்கான ஏழைகளைப் பாரு..."

குழந்தை சிணுங்கியது.

அனு, சுவர்ப்பக்கம் திரும்பி அமர்ந்து கொண்டு, குழந்தைக்குப் பால் கொடுத்தாள்.

"ஸ்... அய்யோ..."

"என்ன அனு?"

"இந்தக் குட்டி கடிக்கிறாக்கா... வலிக்குது..."

வள்ளிக்குச் சிரிப்பு முட்டிக் கொண்டு கிளம்பியது. வாழ்க்கை திடுமென்று சுவாரஸ்யமாக மாறி விட்டது.

"பொல்லாதவளா இருப்பா போல."

"என்ன விஷமங்கிறீங்க. ராத்திரி இரண்டு மணிக்கு முழிச்சுக்கிட்டு, பாட்டுப் பாடறது என்ன, ஆட்டம் போடறது என்ன? ஒரே ஊரட்டி..."

குளிர்ச்சியாகத் தென்றல் வீசியது போல, எல்லாமே குளிர்ந்தது.

"அவர் எப்படி இருக்கார்?"

"இருக்கார். மனதளவிலே ரொம்ப பாதிக்கப்பட்டுட்டார். வேலை போயிடுச்சு. ஏதாவது தொழில் செய்யணும்னு சொன்னார்."

"நீங்க என்ன முடிவு பண்ணி இருக்கீங்க?"

"இல்லை, அவர். இன்னும் மாறலை. அவரோட அந்தப் பக்கம்; என்னால ஜீரணிக்க முடியாத பகுதிதான். என்னை வீட்டுக்கு வரச் சொல்லிக் கூப்பிட்டார். முடியாதுன்னு சொல்லிட்டேன். நான் செய்தது, பஞ்சமா பாதகமான்னு கேக்கிறார். எவன் செய்யலைங்கறார். நான் மாட்டிக்கிட்டேன். அவங்க மாட்டிக்கலைன்றார்."

"........."

"வெட்கப்படலை, அனு. அவமானம் வர வேணாமா? லஞ்சம் வாங்கின திருடன்னு பத்திரிகையில போடறான். வெக்கம் வரலையே. நம்ம தோல், இப்படிக் கடுமையாகலாமா?"

"ஆனாலும், நீங்க யோசிக்கணும்."

"எது பற்றி?"

"சேர்ந்து வாழறது பற்றி? ஊர் எப்படியோ

பேசும்."

"எப்படிப் பேசும்?"

"தப்பா..."

"இதையெல்லாம் பார்த்தா, நான் ஒரு நாளைக்கு இருபது முறை அக்னிப் பிரவேசம் பண்ண வேண்டி இருக்கும் அனு. ஒரு தடவை பண்ணா சீதை. அதையே தப்புன்னு சொல்றவள் நான். நாலு பேர், நம்மைப் பற்றி நல்ல விதமா சொல்லணும்னு ஆசை இருந்தாத் தானே, தப்பு சொன்னா எனக்கு வருத்தம் வரும். எனக்கு ரெண்டு வகையாலும் எதிர் பார்ப்பு இல்லை..."

வள்ளி, கடைசியாகச் சொன்னாள்.

"சபேசன், இப்போ மரியாதைக்குரியவராக மாறிப் போனார். எப்படி? அதுக்கு ஒரு அர்த்த நாரி, பிடிபட வேண்டி இருக்கு. இப்போ வாச்கும், உன் வீட்டுக்காரர் எந்த அளவுக்கு உறுதியா இருக்கார்னு உனக்கு விளங்கணும்..."

அனு பதில் சொல்லவில்லை.

**ம**றுநாள் காலை புறப்பட்டாள். சபேசன், தங்கி இருந்துவிட்டு வருவதாகச் சொல்லி விட்டான். வள்ளியை, ரயில் ஏற்றிவிட சபேசன், ரயில் நிலையம் வந்திருந்தான்.

"வள்ளி, பணம் ஏதாவது உங்களுக்கு வேண்டி இருக்குமா?"

"பணம் எதுக்கு?"

"அர்த்தநாரி வழக்கு விஷயமா, உங்களுக்கு நிறைய செலவு ஆகி இருக்குமே... வக்கீலுக்குக் கொடுக்க வேண்டி இருக்குமே..."

"நிறைய செலவுதான், சபேசன். என் சேமிப்பை எல்லாம் செலவு பண்ணிட்டேன். பயன், வேலை போனதோடு தப்பிச்சார் அவர். இல்லேன்னா, சிறைக்குப் போக வேண்டி இருந்திருக்கும்."

"உங்க நல்ல தன்மையை இப்பவாவது, அவர் புரிஞ்சுக்கிடலாமே."

"புரிஞ்சுக்கக் கூடாதுன்னு நினைக்கிறவரை, எப்படி மாத்தறது. இந்தப் பணமே, எனக்கு, சண்முகம் கொடுத்ததுன்னு அவர் சொல்லிக்கிட்டுத் திரியறார். சண்முகத்தை மயக்கிப் பணம் பறிச்சேனாம்."

"மயக்கியா?"

வள்ளி சிரித்தாள். தொடர்ந்து சிரித்தாள். சிரிப்பதற்கு, அந்த ஒரு சொல்லுக்குள் ஏராளமான விஷயம் இருப்பதாக அவளுக்குத் தோன்றியது. ரயில், புறப்பட்டு நகர்ந்தபிறகும்; வள்ளி அதை நினைத்துச் சிரித்துக் கொண்டே இருந்தாள்...

வள்ளி, கையில் உடுக்கையை வைத்து அடித்துக் கொண்டு இருக்கிறாள். சண்முகம், முகத்தை மூடிக்கொண்டு தரையில் படுத்துக் கிடக்கிறான். வள்ளி, பெரிய மந்திரவாதி. அவள், அவனிடம் கேட்கிறாள்.

"வந்தியா?"

"வந்தேன்."

"பார்த்தியா?"

"பார்த்தேன்."

"உன் பக்கத்துல நிக்கிற ஆள் யார்?"

"ஆம்பிளை."

"அவர் பையில எதையோ சொருகிக்கிட்டு இருக்கிறாரே, என்ன அது?"

"பேனா."

"மந்திரம் இல்லை. மாயம் இல்லை. தாயத்தோட விலை ரெண்டு ரூபாய்தான்..." வள்ளி, நீண்ட நாழிகை சிரித்துக்கொண்டே இருந்தாள். நல்லவேளை. எதிர் சீட்டுக் கிழவியம்மாள் உறக்கத்தில் இருந்தாள்.

**ச**பேசன் வீடு திரும்பினான். சாப்பிட்டான். பத்திரிகை படித்தான். அனு, அவன் அருகில் வந்து அமர்ந்தாள்.

"ம்... ஒரு விஷயம்."

"என்ன?"

"அம்மாதான் சொல்லச் சொன்னாங்க."

"சொல்லு."

"கோவிச்சுக்கக் கூடாது."

"சும்மா சொல்லும்மா."

"வள்ளியை நீங்க அழைச்சுக்கிட்டு வந்தது பற்றி, அண்டையிலே, பக்கத்துல, பலரும் பலவிதமா பேசறாங்களாம்."

"..............."

"அவள் புருஷனை விட்டுட்டு ஓடி வந்தவள். ஆம்பிளை கிடைக்க மாட்டானான்னு அலையறவள். அவளோட நீங்க பழகறது, எனக்கு அவ்வளவு சரியாகப் படலை."

நெருப்பில் கால் வைத்த மாதிரி இருந்தது, சபேசனுக்கு.

'அக்கினிக் குஞ்சு. ஆனாலும் வெந்து தணிந்தது காடு...'

(அடுத்த இதழில் முடியும்)

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

**" நம்ம ராமு, நேத்திக்கு ஹோட்டல்ல வந்து ரொம்பவும் சொதப்பிட்டான்!"**

**"அப்படி என்ன பண்ணினான்?"**

**"பஜ்ஜியையும், காபியையும் சாப்பிட்டு, பொண்ணு பார்க்கறோம்ங்கற ஞாபகத்திலே, சர்வர்கிட்டே, 'சீக்கிரம் பொண்ணைக் கூட்டிண்டு வாங்க மாமா'ன்னுட்டான்!"**

**— வி. ரெங்கநாதன்**



# வட இந்திய சுற்றுலா

| | செல்லும் கிழமைகள் | கட்டணம் |
|---|---|---|
| 1. டெல்லி - பத்ரிநாத்-கேதார்நாத்-கங்கோத்ரி- யமுனோத்ரி-டெல்லி | பிரதி வெள்ளி | ரூ. 4000/- |
| 2. டெல்லி-பத்ரிநாத்-கேதார்நாத்-டெல்லி | பிரதி திங்கள்/வெள்ளி | ரூ. 2,300/- (Non-Ac) ரூ. 2,800/- (Ac) |
| 3. டெல்லி-அலகாபாத்-வாரணாசி-கயா அயோத்யா-டெல்லி | பிரதி வெள்ளி | ரூ. 2,700/- |
| 4. டெல்லி-சிம்லா-குலு-மனாலி-சண்டிகர்-டெல்லி | பிரதி வெள்ளி | ரூ. 2,000/- |
| 5. டெல்லி-ஆக்ரா-ஜெய்பூர்-டெல்லி (Golden Triangle Tour) | திங்கள்/புதன்/வெள்ளி | ரூ. 600/- (Non-Ac) ரூ. 800/- (Ac) |
| 6. டெல்லி-ஜெய்பூர்-ஆஜ்மீர்-புஷ்கர்-பதேஃபூர் சிக்ரி-ஆக்ரா-மதுரா--பிருந்தாவன்-டெல்லி | பிரதி திங்கள் | ரூ. 800/- (Non-Ac) ரூ. 1000/- (Ac) |
| 7. டெல்லி-முசௌரி-ஹரித்துவார்-ரிஷிகேஷ்-டெல்லி | செவ்வாய்/வெள்ளி | ரூ. 500/- |

ஹாலில் தங்கும் வசதி, பஸ் மற்றும் கைடு வசதிகள் சேர்ந்த கட்டணம்.

* தென்னிந்திய சைவ சாப்பாடு சுற்றுலாவின் போது தனிக் கட்டணத்தில் அளிக்கப்படும். நாங்கள் மத்திய அரசு ஊழியர்களுக்கு ITDC-யுடன் இணைந்து LTC சுற்றுலாக்களை ஏற்பாடு செய்கிறோம். எல்லாச் சுற்றுலாக்களும் சூப்பர் டீலக்ஸ் பஸ்கள் மூலம் எங்கள் புது டெல்லி அலுவலகத்திலிருந்து புறப்படும். எங்கள் பஸ்களில் பயணம் செய்பவர்களில் தேர்ந்தெடுக்கப்படும் அதிர்ஷ்டசாலிகளுக்கு சென்னை-சிங்கப்பூர்-சென்னை விமான டிக்கெட்டும் பரிசுகளும் பெறுவர்.

**சென்னை : 585253 / 564864; ஹைதராபாத் : 227233 / 223858; பெங்களூர் : 2262633; விசாகப்பட்டினம் : 545565; விஜயவாடா : 62227; மும்பை : 2624560 டெல்லியில் ஹோட்டல் சதர்னில் தங்குங்கள்.**

நீங்கள் டெல்லிக்கு வருகை தரும் போது நவீன வசதிகள் கொண்ட, 100 அறைகள் உள்ள ''ஹோட்டல் சதர்ன்''-ல் தங்குங்கள். டெல்லியில் சுவையான தென்னிந்திய உணவு, எமது ஹோட்டலில் இணைந்துள்ள ''அமராவதி சுப்ரபாத்'' ரெஸ்டாரண்டில் கிடைக்கும். இது, டெல்லியில் அமைந்துள்ள ஒரு பிரபலமான தென்னிந்திய வர்த்தக நிறுவனம்.

## சதர்ன் டிராவல்ஸ் / ஹோட்டல் சதர்ன்

*இந்திய அரசு சுற்றுலாத்துறை, டெல்லி அவர்களின் அங்கீகாரம் பெற்றது.*

**18/2, Arya Samaj Road,
W.E.A. Karol Bagh, New Delhi - 110 005.
Tel : 5739508 / 5782932 / 5724085.**

**Hotel Howrah Complex Basement, Poonamallee High Road,
Opp. Central Suburban Railway Station, Chennai - 600 003.
Tel : 585253 / 564864.**


சென்னை தாம்பரம் அடுத்துள்ள பெருங்களத்தூரில் சிறிய அளவில் ஸ்ரீ அஷ்டலக்ஷ்மி கோயில் ஒன்று நிறுவப்பட்டு இதன் மஹா கும்பாபிஷேகம் 22.3.96 அன்று சிறப்பாக நடைபெற்றது.

ஸ்ரீ அஷ்டலக்ஷ்மி கோயில் தற்போது முதலாம் ஆண்டு நிறைவை யொட்டி 11.4.97 முதல் 13.4.97 வரை 3 நாட்கள் லக்ஷார்ச்சனை வெகு சிறப்பாக நடைபெற்றது.

பக்தர்கள் அனைவரும் இத் திருக்கோயிலில் தரிசனம் செய்து ஸ்ரீ அஷ்டலக்ஷ்மியின் அருள் கடாட்சத்திற்கு பாத்திரர்களாகும்படி கேட்டுக் கொள்கிறோம்.

ஸ்ரீ அஷ்டலக்ஷ்மி கோயிலை ஸ்தாபிதம் செய்து நிர்வாகம் செய்வது ஒரு பெண்மணி. கோயில் அமைய இடம் உபயமாக அளித்ததும் ஒரு பெண்தான். இக் கோயிலில் உண்டியல் கிடையாது. இங்கு பக்திக்கே முதலிடம்.

**எஸ். கனகவள்ளி,**
**நிர்வாகி,**
**ஸ்ரீ அஷ்டலக்ஷ்மி கோயில்.**



# கல்கி - பாலு ஜுவல்லர்ஸ்

## இணைந்து வழங்கும்

# ரூ. 50,000 நகைப் பரிசு!

## சிரிக்க வையுங்கள்; ஓர் ஏழைக் குடும்பம் சிறக்க வையுங்கள்!

'லவ் மேரேஜ்' தொடர்பாக கூப்பனில் ஜோக் எழுதியனுப்புங்கள்! தேர்ந்தெடுத்துப் பிரசுரமாகும் ஒவ்வொரு ஜோக்கும் ரூ.100 சன்மானம் பெறும். இன்னும் பத்து வாரங்களுக்குத் தொடரும் இப்போட்டியில் யார் அதிக அளவில் வெற்றி பெறுகிறாரோ, அவர் சுட்டிக் காட்டும் ஓர் ஏழைக் குடும்பத்துக்கு அதாவது திருமணத்துக்குத் தயாராக உள்ள வசதியற்ற குடும்பத்துப் பெண்ணுக்கு ரூ.50,000 மதிப்புள்ள தங்க நகைகள் பரிசு! (வெற்றி பெறும் வாசகரே வசதியற்றவராக இருந்தால் அவருக்குத் திருமண வயதில் மகளோ, சகோதரியோ இருந்தால் அவரே இப்பரிசைப் பெறலாம்!) ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

கடைசி தேதி: 28.4.97

**லவ் மேரேஜ் ஜோக் – போட்டி 2**

பெயர்:..........................................................

முகவரி:.......................................................

..................................................................

..................................................................

வாழ்க்கையில் ஜெயிக்க வேண்டுமா...? எல்லோரிடமும் சகஜமாக, ஜாலியாகப் பழகுங்கள். ஆனால் ஒரேயொரு நிபந்தனை. அவர்களுக்கும் சந்தோஷமும், நிம்மதியும் கிடைக்க வேண்டும் என்று நிஜமாக நினைத்துக் கொள்ளுங்கள்...

இந்த ஃபார்முலாதான், சாதாரண ரயில்வே ஊழியரின் மகனான ராகவேந்திர ராவை ஒரு தொழிலதிபராக உயர்த்தியிருக்கிறது. ஆர்க்கிட் கெமிக்கல்ஸ் நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டரான இவர், அப்பாவின் ரயில்வே பணி காரணமாக ஆந்திராவிலேயே படிக்க நேர்ந்தது. பள்ளி ஆசிரியரின் தேசிய ஒருமைப்பாடு ஆர்வத்தில் திருச்சி ராகவேந்திரன், ராகவேந்திரராவ் ஆகிவிட்டார்.

பெயரில் மட்டுமல்லாமல், செயலிலும் இந்த 'இணைப்பு' பண்பு சுபாவமாகி விட்டதால், தொழில் துறையில் பெரும் சவாலான விஷயம் இவருக்குச் சாதாரணமாகி விட்டது.

சம்பளம், ஊக்கத்தொகை, போனஸ், கார், சொகுசு பங்களா என எத்தனை வசதிகளை வாரி வழங்கினாலும், தொழிலாளர்களாகட்டும், உயர் அதிகாரிகளாகட்டும்... ஒரு லெவலில் தங்கள் நிறுவனத்தோடு மனப்பூர்வமாக இணைத்துக் கொள்வதில்லை. சில சந்தர்ப்பங்களில் ஏதோவொரு அதிருப்தியில் ஒட்டுமொத்தமாக வெளியேறி விடுகிறார்கள்.

பிரபல தொழில் நிறுவனங்களுக்கு எல்லாம் பெரும் சவாலாக உள்ள இந்த பிரச்னைக்கும், மருந்துப் பொருட்கள் தயாரிக்கும் ராகவேந்திரராவ் மருந்து கண்டுபிடித்திருக்கிறார்.

"டீம் வொர்க்" என்ற சக்தி வாய்ந்த டானிக்தான் அது. எங்கள் எல்லோரையும் உற்சாகமாகச் செயல்படவைப்பது இந்த ஃபார்முலாதான்!" என்கிறார்.

"நான் எம்.டி. என்றால் பெரிய பிஸ்தா இல்லை. நானும் சக ஊழியர்களைப் போல் இந்த கம்பெனியின் வளர்ச்சிக்குப் பாடுபடுபவன்; அவ்வளவுதான்! ஒவ்வொரு தொழிலாளியும் இதன் முக்கிய அங்கம் என்பதை அனைவரையும் உணர வைத்திருக்கிறோம்."

இந்த மனமாற்றத்தை எப்படி உருவாக்க முடிகிறது?

பெரிய திட்டங்கள் எல்லாம் கிடையாது. பியூனிலிருந்து டெபுடி மானேஜிங் டைரக்டர் வரை எல்லோரிடமும் சகஜமாகப் பழகுகிறேன். எல்லோரின் முன்னேற்றத்திலும் நிஜமான அக்கறை காட்டுகிறேன்.



* சக ஊழியர்களுடன் சுற்றுலா....

* ராகவேந்திரராவ்



# "நிறைய சம்பாதித்தால் ஐந்து வேளை சாப்பிட முடியுமா என்ன?"

எல்லோரும் சேர்ந்து வளர வேண்டும் என்பதே எனது எண்ணம். எங்கள் நிறுவனத்தை ஒரு நல்ல குடும்பம் போல பாவிக்கிறோம். இந்த எண்ணம்தான் எங்கள் வெற்றியின் ரகசியம்."

மனைவி எதிர்பார்க்கும் அளவுக்குத் தமது குடும்பத்திற்காக இவரால் அதிக நேரம் ஒதுக்க முடியாவிட்டாலும், மாதம் ஒருமுறை சக ஊழியர்களின் குடும்பங்களை ஒன்றாகச் சந்திக்க வைக்கிறார். தாமும், குடும்பத்துடன் கலந்து கொள்கிறார். சில சமயங்களில், இந்தச் சந்திப்பில் குழந்தை, குட்டிகள் எல்லாம் சேர்ந்து சுமார் நூறு பேர் கலந்து கொள்வார்களாம்.

"உறவினர் வீட்டுக்கு விசிட் அடிப்பதோடு சக ஊழியர்களின் வீட்டுக்குச் செல்வதும் அவர்களைத் தம் வீட்டிற்கு அழைத்து உபசரிப்பதும் தமக்குப் பிடித்தமான பொழுது போக்கு!" என்கிறார் ராகவேந்திரராவ்.

அலுவலக சகாக்கள் வீட்டில் நடைபெறும் திருமணம், பூஜை போன்ற நிகழ்ச்சிகளில் தம் மனைவியுடன் பங்கேற்கிறார். "இதுபோன்ற அணுகுமுறையால் கம்பெனியில் எல்லோருக்கும் இன்வால்வ்மெண்ட் வருகிறது!" என்று பெருமிதத்துடன் குறிப்பிடுகிறார்.

இப்படி நிறுவனத்தை ஒரு குடும்பமாக பாவித்துப் போற்றும் ஐடியா எப்படி உருவானது?

"இப்படியெல்லாம் மோட்டிவேஷன் கொடுத்தால்தான் கம்பெனி வளரும்; லாபம் அதிகமாகும் என்று திட்டம் போட்டு நான் செயல்படவில்லை. எனது இயல்பே அப்படி அமைந்து விட்டது.

"ஓர் அளவுக்கு மேல் பணம் மட்டுமே எல்லாவற்றையும் சாதித்து விடாது. நிறைய சம்பாதிப்பதால் ஐந்து வேளை சாப்பிட முடியுமா என்ன...! நான் மட்டும் அல்லாமல் என்னைச் சேர்ந்தவர்களும் சந்தோஷமாக இருக்க வேண்டும் என்று எப்போதுமே நினைப்பவன் நான்.

"இந்தக் கம்பெனியே நட்பின் அடிப்படையில்தான் உருவாகியிருக்கிறது. என்னுடன் வெவ்வேறு நிறுவனங்களில் பணியாற்றி சுமார் பன்னிரண்டு வருடங்களாக நெருக்கமாக இருந்த சில நண்பர்கள் சேர்ந்துதான் இதை ஆரம்பித்தோம்.

"எங்கள் நிறுவனத்தைச் சேர்ந்த எல்லோரிடமும் இதே போல ஓர் அன்புப் பிணைப்பு உருவாக வேண்டும் என்பதற்காகத்தான் மாதாந்திர சந்திப்பு, வருடாந்திர சுற்றுலா ஆண்டு விழா போன்ற நிகழ்ச்சிகளை நடத்துகிறோம். இதனால் இயற்கையாகவே உற்பத்தித் திறன் கூடுகிறது.

"சகஜமாகப் பழகுவது, ஒவ்வொருவரின் கருத்துக்கும் மதிப்பளிப்பது, தனித்திறமையை வெளிக்கொணரவைப்பது என்ற உத்திகளால் சராசரி நபர்களைச் சாதிக்க வைக்க முடிகிறது. புத்திசாலி மேதைகளை விட இப்படிப்பட்டவர்களின் செயல்திறன் அபாரமானது!" என்று கூறும் ராகவேந்திரராவ் ஏற்றுமதியாளருக்கான ஜனாதிபதியின் சிறந்த விருதுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது லேட்டஸ்ட் தகவல்.

— மு. சிவலிங்கம்

# வெளிச்சத்தின் விலாசம் - 2

## வலம்புரி ஜான்

ஈச்ச மரக் கிடுகுகளை இழுத்துப் போர்த்திக் கொண்டு நின்றது அந்தக் குடிசை. மரப் பொந்துகளில் மறைந்து வாழ்ந்த மனிதன், சிலந்திப் பூச்சிகளால் சிந்தனையாளன் ஆனான். தனது 'எச்சிலிலிருந்தே தனக்கொரு வீட்டைக் கட்டிக் கொண்ட சிலந்தியைப் போல தன்னில் சுரந்த ஞானத்தால் ஆதி மனிதன் அமைத்த முதல் குடிசை, கனத்த மடிகளால் தள்ளாடும் வெள்ளாட்டைப் போல 'ஆடிக் கொண்டே' நின்றது. கிடுகுகள் முழுக்கவே மறைக்க முடியாத பகுதிகளில் அத்தி மரத்தின் இலைகளும், தோலாடைத் தொங்கல்களுமாகக் காற்றின் ஆதிக்கத்தை அந்தக் குடிசை கைகொண்ட மட்டும் தடுத்து நின்றது.

ஆதாம், இன்னமும் மரணத்தின் ஒத்திகையான தூக்கத்தின் அரவணைப்பிலிருந்தான். ஏற்கெனவே திறந்துவிட்ட ஏவாளின் கண்கள், மண்வெட்டியின் மரப்பிடி உறிஞ்சிக் கொண்ட ஆதாமின் கைரேகைகளைத் தேடின. ஒரு காலத்தில் அவளது உள்ளங்கை பள்ளத்தைப் போலவே மிருதுவாக இருந்த ஆதாமின் உள்ளங்கை, மென்மையை முற்றிலுமாக இப்போது இழந்திருந்தது. பாறையாய் இறுகிப்போன அந்தச் சொரசொர விரிப்பை ஒருமுறை விரல் நுனிகளால் ஸ்பரிசித்துப் பார்க்க வேண்டுமென்கிற ஆவல் அவளது மனவானத்தின் ஈசான மூலையிலே சொடுக்குப் போட்டது.

இரவு வெகு நேரம் வரையிலும் கன்னி நிலத்தில் வியர்வை சிந்தியவனின் உழைப்பில்தான் தனக்குப் பங்கு தரப்படவில்லை; பூவுக்கும் இல்லாத மென்மையைத் தன்னிடத்திலே புகுத்துவதிலேயே புளகித்துப் போன அவனைத் தூங்கவாவது விடுவோம் என்கிற முடிவிற்கு வந்தவளாக ஏவாள் எழுந்தாள். அப்போது ஓசையில்லாத ஓசையின் உட்பொருளை உணர்ந்தவனாக ஆதாம் தனது விழிகளை அகலமாகத் திறந்தான். நேற்று இரவு மின்னலில் மேகப் பிஞ்சுகள் எரிந்து தணிந்து, செவிப்பறைக்குப் பக்கத்தில் இடி இறங்கியபோது, சலனமின்றிக் கிடந்த தனது கணவன், ஓசையின்றித் தான் எழுவதைக்கூட உணர்ந்து கொள்ளுகிறானோ என்கிற வியப்பால் அவளது விழிப் புருவங்கள் வில்லாயின. அவன் சிரித்தான். அவளது சிரிப்பில் மேற்குப் படித்துறையில் தனது கால் சலங்கைகளை அவிழ்க்கப் போன வெளிறிப் போன நிலவு, மறதியில் கால்களைக் கழற்றி வைத்தது.

ஏவாள் வெளியில் வந்தாள். மதர்த்த மார்பகங்களுக்கு மத்தியில் உருண்டு விழுகிற ஒற்றை ரூபாய் நாணயத்தைப் போல, அடிவானத்திற்குள் கரைந்து போகிற சந்திரனில் அவளது மனம் மையம் கொண்டது. நிலவைத் தூக்கிச் சுமந்த நட்சத்திரப் பாங்கிகள் எல்லோரும் ஓய்வெடுக்கப் போனபோது இருள் வியாபித்தது. சற்றைக்கெல்லாம் அவளது முதுகுப் புறத்தில் வெளிச்ச விரல்கள் கோலம் போடத் தொடங்கின. இரண்டு எட்டு வைத்திருப்பாள். பெரியதான ஒரு மாங்காய் அவளது நெற்றியைத் தொட்டு காய்ச்சல்



# முதல் இரத்தம்

பார்ப்பதுபோலப் பார்த்தது. அதை உடனே பறித்து விட வேண்டுமென்கிற ஆசை அவளுக்குள்ளே அரும்பியது. இப்போதெல்லாம் எந்த மரத்தின் கனியைப் பார்த்தாலும் அவளுக்குள் அச்சம் நீர்ச்சுழியானது. இதயம் ஒரு முறை நின்று போகலாமா வேண்டாமா என்று கேட்டு விட்டுத்தான் போகும்.

ஏவாள் சிலநேரம் கனி எப்போதாவது காய் ஆகுமா என்று நினைப்பாள். விலக்கப்பட்ட மரத்தின் கனியை உண்ட பிறகு, மலையின் உச்சியிலிருந்து உருட்டிவிடப்பட்ட உருண்டைக் கல்லைப் போல வாழ்க்கை அதன் முடிவை நோக்கி மாத்திரமே முன்னேறுகிறது என்பதை அறிந்து கொண்டாள்.

அவளது மூத்த மகன் காயின் முட்செடிகளுக்கு நீர் பாய்ச்சிக் கொண்டிருந்தான். பலன் தராத செடிகளுக்காகப் பகலெல்லாம் பாடுபடுவது எதற்காக? என்று அவன் கேட்டாள். வேலியில்லாவிட்டால் விளைபொருளுக்காக வியர்வை சிந்துவது எதற்காக என்று அவன் எதிர்க்கேள்வி கேட்டான். எத்தனை நதிகள் வளைய வந்தாலும் தனது வியர்வை நதியில் மாத்திரமே பூமி தானியங்களைப் புஷ்பிக்கிறது என்கிற துடுக்கு நம்பிக்கை அவனுக்குள் துளிர்த்தது. தலைக்கு மேலே எங்கோ இருப்பதாகத் தோன்றுகிற* வானம்கூட தனது தலையைத் தட்டுவதற்காகவே நிர்மாணிக்கப்பட்ட கதவுநிலை என்றே கருதுகிறவன் காயின். சாபத் நாளில் அவன் வாயிற்காட்டை வசியப்படுத்துவது அவன் அம்மாவுக்குப் பிடிக்கவில்லை. எதற்கும் ஒரு பதிலை வைத்திருக்கிற காயினிடத்தில் என்ன பேசி என்ன பயன் என்று ஏவாள் சலித்துக்கொள்ளுவாள். மூத்த மகன் காயினின் முறையற்ற பேச்சுக்களால் ஏவாளின் இதயம் தென்னை இலைபோல எப்போதெல்லாம் கிழிந்ததோ, அப்போதெல்லாம் இளையவன் ஆபேல்தான் அவளுக்கு இதமாக இருந்தான்.

அந்த ஓய்வு நாளில் தனது கிடைகளைப் பட்டியில் அடைத்துவிட்டு ஆபேல் ஆகாயத்தின் எல்லைகளைத் தனது கண்களால் அகலமாக்கிக் கொண்டிருந்தான். யுக யுகாந்திரங்களுக்குப் பிறகும் வருகிற தலைமுறைகள் ஆபேலின் நித்தியமான நினைவில் நிழலாடின.

தனது ஆடுகளும், மாடுகளும் பல்கிப் பெருகுவது வெறும் இயற்கை நியதி என்று அவன் நினைக்கவில்லை. இயற்கையின் தாளகதி தப்பாத சஞ்சாரத்திற்குள்ளே வல்லமையுள்ள கடவுளின் வலது கரம் இருப்பதை ஆபேல் உணர்ந்தே இருந்தான். காயினும் ஆபேலும் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளாக இருந்தாலும் அவர்களது குணநலன்கள் முற்றிலுமாக முரண்பட்டிருந்தன. ஆந்தையும், அன்னமும் பறவைகள் என்பதைப்





''ஏம்ப்பா, இந்த மாமாவுக்கு மட்டும் தலைமுடி தலைகீழா வளர்ந்திருக்கு...?!''
— பாஸு

போல காயினும் ஆபேலும் சகோதரர்கள்!

இருவருமே தங்கள் உழைப்பின் ஒரு பாகத்தை இறைவனுக்குக் காணிக்கையாகச் செலுத்தி வந்தார்கள். காயின், காய்கனிகளை இறைவனுக்கு ஒப்புக் கொடுத்தான். ஆபேலோ கொழுத்த கிடாரிகளாகப் பார்த்து இறைவனுக்கு அர்ப்பணம் செய்தான். வெளிச் செயல்களில் மகிழ்ந்து போகாமல், உள்ளங்களுக்குள் நிழலாடுவதை சற்று அறிகிற ஆண்டவராகிய கர்த்தர், ஆபேலின் காணிக்கைகளை ஏற்றுக் கொண்டு அவனை ஆசிர்வதித்தார். காயினின் காணிக்கையில் விளைபொருட்கள் மாத்திரமே இருந்தன; நம்பிக்கை படைத்த ஆபேலின் அர்ப்பணத்தில் அவனே இருந்தான்.

ஆண்டவருடைய நியாயமான செயல் காயினின் முகத்தில் விகாரத்தை விதைத்தது. அவன் ஆளே உருமாறிப் போனான். இப்போது அவனுக்குப் பலா மரங்களில் முள்ளம் பன்றிகள் தொங்குவது போலவும், புதர்களில் பலாப்பழங்கள் எட்டிப் பார்ப்பது போலவும் தோன்றியது. வருத்தப்பட்டுப் பாரம் சுமந்த காயினின் முன்பாகக் கடவுள் தோன்றினார். "நீ ஏன் சினமுற்றிருக்கிறாய்? உன் முகம் வாடி இருப்பது ஏன்? நீ நல்லது செய்தால் உயர்வடைவாய் அல்லவா? நீ நல்லது செய்யாவிட்டால் பாவம் உன்மேல் வேட்கை கொண்டு உன் வாயிலில் படுத்திருக்கும்" என்றார்.

**மா**லை ஆனபோது காயின் ஆபேலை வயல்வெளிக்குப் போகலாம் வா என்று அழைத்தான். வசிய மை பூசிய அவனது வார்த்தைகள் தொண்டைக்குழிக்கு உள்ளேயே தற்கொலை செய்து கொண்டன. பாசம் வெளிப்பட்ட சொற்களின் உள்ளே பாதரசம் கொப்புளித்துக் கொண்டிருந்ததை ஆபேல் அறிந்திருக்கவில்லை.

இருவரும் தனியான ஓரிடத்திற்கு வந்தார்கள். பாறைகளால் சூழப்பட்ட அந்த இடத்தில் காயினின் நிழல் மாத்திரம் அவனிடமிருந்தும் ஓரடி தள்ளியே வந்தது. முரட்டுத் தனத்தின் முழு வடிவமான காயின், எதிர்பாராத நேரத்தில் ஆபேலின் கழுத்தைத் தனது கைகளால் நெரித்தான். அவரைச் செடி ஒன்று காட்டெருமையின் காலில் மிதிபட்டுத் துடிப்பதைப்போல ஆபேல் சில நிமிடங்கள் துடித்தான்.

சாய்ந்து கிடந்த ஆபேலின் தலையில் பாறாங்கல் ஒன்றை வெறி கொண்ட மட்டும் காயின் இறக்கினான். அவனது பொறாமைத் தீயில் கருகி அந்தப் பாறைகள் வெடித்தன. ஆபேல் கூட்டோடு சிதைந்து போன குஞ்சுப் புறாவைப் போல துடித்தான். சற்றைக்கெல்லாம் அவனது ஆவி பிரிந்தது.

உலகத்தின் வெப்பமெல்லாம் ஒன்றாகத் திரண்டதுபோல தேவன் காயினின் முன்பாகத் தோன்றினார். "எங்கே உனது சகோதரன் ஆபேல்?" இறைவனின் குரல் கோடி இடிகள் மையம் கொண்டதுபோல மேகச் சிதில்களைச் சிதைத்துச் சின்னாபின்னமாக்கியது. "என் சகோதரனுக்கு நான் என்ன காவலாளியோ?" என்று காயின் எதிர்க் கேள்வி கேட்டான். ஒவ்வொருவனும் அவனது சகமனிதனுக்குக் காவலாளியே என்பதை அவன் அறிந்திருக்காதது ஆச்சரியத்திற்குரியது இல்லைதான்.

அப்போது ஆண்டவர், "உன் சகோதரனின் இரத்தம் என் சன்னதியில் கூக்குரலிடுகிறது. சிந்திய உன் சகோதரனின் இரத்தத்தை முன்னிட்டு நீ சபிக்கப்படுகிறாய். நீ மண்ணில் நாடோடியாகத் திரிவாய்" என்றார்.

அப்போது காயின், "ஆண்டவரே, எனக்குத் தரப்பட்ட தண்டனை என்னால் தாங்கிக் கொள்ள முடியாததாக இருக்கிறது. என்னைக் காணுகின்ற எவனும் என்னைக் கொல்லுவானே" என்றான். அப்போது ஆண்டவர் மனம் இரங்கி, "காயினைக் கொல்லுகிற எவனும் ஏழு முறை பழி வாங்கப்படுவான்" என்று சொல்லி அவனை எவனும் கொல்லாத படிக்கு ஓர் அடையாளத்தை அவன் மீது உருவாக்கினார்.

பிறகு காயின் ஆண்டவரின் சன்னிதானத்தை விட்டு விலகி, சாயங்கால நிழலைப்போல மறையலானான். ஏதேனுக்குக் கிழக்கே இருந்த நோது என்கிற நாட்டில் குடியேறுவதற்காக அவன் புறப்பட்டபோது அவன் உழுது பயிரிட்ட நிலத்தை ஒருமுறை திரும்பிப் பார்த்தான். முற்றிய கதிர்களில் முகாம் அமைந்திருந்த காட்டுக் குருவிகள் அவன் முகத்தைப் பார்த்ததுமே பறந்து போயின.

ஏவாளின் அழுகையும், ஆடு, மாடுகளின் விசும்பலும் அந்த ஆரண்யம் முழுவதும் எதிரொலித்துக் கொண்டே இருந்தன.

(வளரும்)




# ரேஷன் கடைகளில் வசூல் வேட்டை!

"பொன்னைப் போல கோதுமை; உங்கள் பொன்னான வாழ்வுக்கு" என்று கோதுமைப் பொருட்களான மைதா, ரவை, ஆட்டா மாவின் மகத்துவத்தை விளக்கி விளம்பரம் கொடுக்கிறது தமிழ்நாடு அரசு உணவுப் பொருள் வழங்கல் துறை. அரசு பொது விநியோக அங்காடிகளில் குறைந்த விலைக்கு இந்தப் பொருட்களை வாங்கலாம் என்றும் சொல்கிறது இந்த விளம்பரம். ஆனாலும் பல இடங்களில் கிடைக்கவில்லை என்று ஒரு வாசகர் நமக்குக் கடிதம் எழுதியிருந்தார். உண்மை நிலை என்ன? சென்னை நகரில் உள்ள அமுதம் கூட்டுறவு அங்காடி, ரேஷன் கடைகள், மற்றும் பொது மக்கள் என்று விசாரித்துப் பார்த்தோம்...

"மைதா, ரவை, ஆட்டா எல்லாம் ஒரு மாசத்துக்கு ஒரு தடவையாவது கிடைக்குங்க" என்று நாம் சந்தித்தவர்களில் பெரும்பாலோர் சொன்னார்கள். இன்னும் சிலர் "நாங்க ரவை வாங்கி இரண்டு, மூன்று மாதம் ஆகிறது; ஆட்டாவா, அது என்ன?" என்று அடுக்கினார்கள். கடைக்காரர்களிடம் விசாரித்த போது, "இந்த கோதுமைப் பொருட்கள் ஒன்று ஒன்றரை மாசத்துக்கு ஒருமுறை வந்து விடும். ஆனால் இந்தப் பொருட்களைக் கடையில் நீண்ட நாள் ஸ்டாக் வைத்துக் கொண்டிருக்க முடியாது. பூச்சி, புழுக்கள் வந்து விடும். ஆகவே முதலில் வரும் கார்டுதாரர்கள் இரண்டு மூன்று கிலோ கேட்டாலும் போட்டு ஸ்டாக்கைத் தீர்த்து விடுவோம். ரேஷன் கடைப் பக்கம் அந்தச் சமயத்தில் வராதவர்களுக்கு ரவை மைதா வந்ததும் தெரியாது; விற்றுப் போனதும் தெரியாது. இதனால்தான் பலர் 'ரவையா; வாங்கலியே' என்று சொல்வார்கள்" என்றார்கள்.

இந்த விவகாரம் ஒரு பக்கம் இருக்க, ரேஷன் கடை ஊழியர்கள் தங்கள் பிரச்னைகளைப் பற்றிக் குமுறி விட்டார்கள்.

"எதோ ரேஷன் கடை ஊழியர்கள் எல்லாம் 'இருடர்கள்' போலச் சொல்கிறார்கள். இங்கே எது ஸ்டாக் குறைந்தாலும் எங்க கைக்காசைப் போட்டுத்தான் சரிபண்ணணும். கொடவுனிலிருந்து வரும் அரிசி மூட்டையிலேயே மூட்டைக்கு இரண்டு கிலோ குறைவாக இருக்கிறது. கெரஸின், ஒட்டை பேரலில் வருகிறது. இதையெல்லாம் ஈடுசெய்யணும் என்றால், சம்பளத்தை அப்படியே கட்டி விட்டுப் போக வேண்டியதுதான். அதனால்தான் 'எடை'யும் அளவும் குறைகிறது. வேற வழியில்லை.

"இதைத் தவிர லோக்கல் 'தாதா'க்களின் தொந்தரவு. 'பத்து லிட்டர் கெரஸின் கொடு; ஐந்து கிலோ அரிசி போடு' என்று மிரட்டி வாங்கிக் கொண்டு போகிறார்கள். நாங்கள் 'இல்லை; முடியாது' என்று சொன்னால், 'டேய்... வாடா உன்னுடைய கையை எடுத்திடறேன்; கைமா போடுகிறேன்' என்று மிரட்டுகிறார்கள். சில இடங்களில் கடைக்குள்ளேயே புகுந்து அடிக்கவும் துணிந்து விடுகிறார்கள்.

"மிகவும் முக்கியமாக பேட்டை அரசியல்வாதிகளின் தொந்தரவு. பிறந்த நாள், நினைவு நாள், கொடியேற்றம், பொதுக் கூட்டம் என்று எந்தக் கட்சி நடத்தினாலும் மற்ற கடைகளில் வாங்குவது போலவே ரேஷன் கடைகளிலும் வசூல் வேட்டை நடத்துகிறார்கள். கூடவே அதிகாரிகள். ஓர் அதிகாரி வீட்டுத் திருமணத்திற்கு எல்லா ரேஷன் கடைகளிலும் வசூல் வேட்டை நடந்தது! இதற்கெல்லாம் நாங்கள் எங்கே போவோம்?

"அரசாங்கத்தின் செயல்பாடுகளை மக்களிடம் பிரதிபலிக்கும் கண்ணாடிகளாக இருப்பது ரேஷன் கடைகள்தான். ஊழியர்களின் பிரச்னைகளைக் கேட்டு, உடனடியாக அரசாங்கம் சரிசெய்ய வேண்டும்!" என்கிறார்கள் அவர்கள்.

— ஸ்ரீநிவாசன்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டு, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; ஃபேக்ஸ் : 2345621.
ஆண்டுச் சந்தா : ரூ. 208/-; ஆறு மாதச் சந்தா : ரூ. 104/- (உள்நாடு).

# பொன்னைப் போல் கோதுமை
# உங்கள் பொன்னான வாழ்வுக்கு !

சக்தி!

சத்து!



சலுகை!

சுவை!

**வாங்கத் தூண்டும் விலை**

ஒரு கிலோ
மைதா - ரூ.6.50

ஒரு கிலோ
ரவை - ரூ.6.60

ஒரு கிலோ
ஆட்டா மாவு - ரூ.5.50

- எவ்வயதினருக்கும் எந்தப் பருவத்திற்கும் ஏற்றவை கோதுமைப் பண்டங்கள் மற்றும் கோதுமைப் பொருட்களான மைதா, ரவை ஆட்டா மாவு ஆகியவை.




***கோதுமை மற்றும் கோதுமைப் பொருட்களை அரசு பொது விநியோக அங்காடிகளில் குறைந்த விலைக்கு வாங்கலாம். விரும்பும் உணவு வகை செய்யலாம்.**

தமிழ் நாடு அரசு
உணவுப் பொருள் வழங்கல் மற்றும்
நுகர்வோர் பாதுகாப்புத் துறை

TNWPP

தமிழ்நாடு கோதுமை உருளை மாவு ஆலைகள் சங்கம்
129 அ பிரிவு முதல் மாடி, சிவாலயா கட்டிடம்
119, எத்திராஜ் சாலை, சென்னை - 105.
தொலைபேசி: 8265295, 8225248, 8225236.
தொலை நகல் (FAX): 8234569

**அன்றாடம் கோதுமை உண்ணுங்கள்; ஆரோக்கிய வாழ்வை உறுதி செய்யுங்கள்**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka


# ஒரு பொடுகு ஷாம்ப்பூ எவ்வாறு அழகிய தலைமுடியைத் தர முடியும் ?



**பொடுகு என்றால் என்ன ?**



பொடுகு என்பது தலை ஓட்டில் ஏற்படுவது ஆகும். இது சிறு சிறு வெள்ளைத்துகள்களாகக் காணப்படும். இதனால் தலையில் அரிப்பு ஏற்பட்டு சொறிந்து கொள்ளத் தோன்றும். பிட்டியோரோ- ஸ்போரம்- ஓவலே என்ற நுண் உயிரால் பொடுகு ஏற்படுகிறது. இது ஒவ்வொருவரின் தலை ஓட்டிலும் காணப்படும். சில சமயம் தூசு காரணமாகவும், சூரிய கதிர்களாலும் (புறஊதா) இது பெருகும். இதனால் மைக்ரோப்ஸ் அதிகமாகி பொடுகு என்னும் உயிரிழந்த சருமத்தை உண்டாக்கும்.

**தலை முடிக்கு பொடுகு தீங்கு ஏற்படுத்துமா ?**



ஆம். பொடுகு சிறிதளவே இருக்கும் போது அரிப்பு ஏற்படும். இந்த நிலையில் இதை கட்டுப்படுத்தாவிட்டால் அரிப்பு பொறுக்க முடியாத அளவுக்கு அதிகமாகிவிடும். அடிக்கடி சொறிந்து கொள்வதால் தலை முடியின் அடிப்பாகம் பாதிக்கப்படும். இதனால் முடி உதிரும் அபாயம் ஏற்படும். மேலும் பொடுகு தலை முடியின் ஆரோக்கியத்தையும் அழகையும் வெகுவாக பாதிக்கும்.

**என்னால் பொடுகை கட்டுப்படுத்த முடியுமா ?**

முடியும். பொடுகுக்கு மூல காரணமான மைக்ரோப்களை எதிர்க்கவும் அதை கட்டுப்படுத்தவும் ஒரு ஷாம்ப்பூ விசேஷமாக வடிவமைக்கப்பட்டுள்ளது. இந்துஸ்தான் லீவர் ஆய்வு மையம் மற்றும் யூனி லீவரின் உலகளாவிய சோதனைக் கூடத்திலும் உருவாக்கப்பட்டது புதிய க்ளினிக் ஆல் க்ளியர். இதில் மைக்ரோப்களை எதிர்க்க விசேஷ ஃபார்முலா உள்ளது. இதனால், உங்களுக்குக் கிடைக்கிறது பொடுகற்ற அழகிய தலை முடி. அதுவும் இரண்டே வார உபயோகத்திற்குப்பிறகு.

**இருந்தாலும் பொடுகு ஷாம்ப்பூவினால் தலைமுடிக்கு தீங்கு ஏற்படுமா ?**

புதிய




க்ளினிக் ஆல் க்ளியர் சற்றும் தீங்கு ஏற்படுத்தாது. இது தனித்தன்மை வாய்ந்த விசேஷ இரட்டை செயல் முறை ஃபார்முலா உடன் தயாரிக்கப்பட்டது. மேலும் இதில் உள்ள பயன்படுத்தப்பட்ட கண்டிஷனர்கள் உங்கள் தலை முடிக்கு தேவையான எண்ணெய் பசையை அகற்றாமல் காக்கிறது. இதனால் தலைமுடி மென்மையாகவும், பட்டுபோல் பளபளப்பாகவும் இருக்கிறது.

**இரு வார சவால் !**

புதிய க்ளினிக் ஆல் க்ளியர் ஷாம்ப்பூ மட்டுமே பொடுகைக் கட்டுப்படுத்தி, அழகிய தலை முடியைத் தருகிறது.... இரண்டே வாரங்களிலே.

க்ளினிக் ஆல் க்ளியரின் 2 வார சவால்

## பொடுகிற்கு எமன்; தலை முடியின் நண்பன்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

Lintas CI CAC 43 2013 Tm